# AMBALAVANAN

TAMIL PANDITS
M. V. VENUGOPALA PILLAI.
MANGALAM KUPPUSAWMY MUDALIAR.



PUBLISHER:
**T. RAJAGOPAL MUDALIAR**
**259, Mint Street, Madras.**

 *[Price Re.* **1-4**

# பதி-பக்தி அல்லது கற்பின்வெற்றி

## (ஓர் அற்புத துப்பறியும் கதை)

சகோதர சகோதரிகள் இக்கதையை முக்கியமாய் படித்துணரவேண்டும். மனைவி புருஷனிடம் கற்புள்ளவளாக இருக்க வேண்டுமானால் எப்படி நடக்க வேண்டுமென்பதையும், அப்படி நடந்தால் என்ன பலன் பெருவாள் என்பதையும், நிதரிசனமாக இக்கதையில் அறிந்துக் கொள்ளலாம். இதில் கதாநாயகன், துஷ்டர் விலைமாதர் முதலியோருடைய நேசத்தால் தனது ஏராளமான சொத்தை அழித்துவிட்டு, முடிவில் தனது வைப்பாட்டியைக் கொன்று விட்டதாக குற்றம் சாட்டப்பட்டு தூக்கிலிடப் போகிறான். கற்புநெறி தவறாதிருந்த அவன் மனைவி, தானே மாறு வேஷம் பூண்டு அற்புதமாய் துப்பறிந்து, உண்மையாக கொலை செய்தவர்களையும், கொலை செய்யப்பட்டவள் யாரென்பதையும், கொலை செய்யப்படாதிருந்த தாசியையும் கண்டு பிடித்து அவளை தனது நாயகன் தூக்கிலிடப்போகும் சமயத்தில் கொண்டு வந்து நிறுத்தி தனது நாயகனை விடுதலைசெய்யும் விதத்தைப் படிக்கப் படிக்க ஆச்சர்யமும், வியப்பும், சந்தோஷமும் உண்டாகும். எல்லோரும் படித்துணர வேண்டியே விலைகுறைவாக வைக்கப் பட்டிருக்கிறது. விலை அணா 3.

வெளி வந்துவிட்டது ! வெளி வந்துவிட்டது ! !

வெகு நாட்களாய் எதிர்பார்த்திருந்த

ரதி மன்மதா காமதகன காக்ஷி யென்னும்

## நவீன நவரத்ன ஒப்பாரி

அன்பர்காள் ! இப் புத்தகம், வெகு புது மாதிரியாகவும், மெச்சத் தக்கதாகவும், காமன் பண்டிகைகளுக்கும், எரிந்த கட்சி, எரியாத கட்சி சவால் பாடுபவர்கட்கும், டேப் முதலிய கருவிகள் வைத்து பாடுவதற்கும், பெண்கள் தமது பந்துக்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனி பாட பல ஒப்பாரிகளும், ரதி மன்மத ஒப்பாரிகளும் சேர்த்து நல்ல கடிதத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

குறிப்பு:—'நவீன நவரத்ன ஒப்பாரி' என்பதைப் பார்த்து வாங்கவும். விலை அணா 5.

# அம்பலவாணன்

அல்லது

# கற்பகவனத்தில் நடந்த கடுங்கொலை

(துப்பறியும் தமிழ்க் கதை)

இது

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

மங்கலம். குப்புசாமி முதலியார்

இயற்றியது









பிரசுரகர்த்தர் :

தி. இராஜகோபால முதலியார்,

259, தங்கசாலை வீதி,

மிண்டு பிள்டிங்கு போஸ்டு, சென்னை

1925




 [விலை ரூ. 1—4—0

எமகாதகன் அல்லது மாயாசித்தன்
வேடிக்கையும், தந்திரமுமுள்ள ஓர் இனிய கதை
விலை அணா 0—8—0

கண்ணைக்கட்டிக் காலங்கழிக்கும்
மிஸ்டர். திண்ணைத் தூங்கித் தடிராமன் கதை
இதுவும் ஒரு விநோதக் கதை
விலை அணா 0—6—0

தி. இராஜகோபால முதலியார்,
259, தங்கசாலைத் தெரு,
மதராஸ்.

# பொருள் அடக்கம்

# முன்னுரை

இந்திய நாட்டுச் சகோதர சகோதரிகளே!

நம் நாட்டில் தோன்றி, அரும்பெருஞ் செயல்களால் தமது அழியாப் புகழை நிலை நாட்டிச் சென்ற பேரறிவாளர்கள் பலர். அவர்கள் புகழ் நிலைபெற்று விளங்குவதற்குக் காரணமாக இருப்பவையும், மக்கள் பலர்க்கும் ஞானக் கண்ணை நலம்பெற அருளுபவையுமான நூல்கள் பலவும் கற்றோர்க்கே யன்றி, மற்றோர்க்கு விளங்காத செம்பாகமான செய்யுள் நடையில் இயன்றுள்ளன. ஆதலின் கற்றோரே யன்றி மற்றோரும் படித்துப் பயனடையுமாறு ஒரு சில அறிஞர் அரிய பெரிய கருத்துகளைப் புதுவது புனைந்த கதைகளின் (Novels) வாயிலாக விளக்க முயன்று வருவது பலரும் அறிந்ததே. ஆயினும், நவீனம் என்னும் பெயரைத் தாங்கி வெளிவந் துலவும் நூல்களுட் பல பாஷை யொழுங்கின்றி, அவற்றைக் கண்ணுறும் அறிஞர்கள் வெறுப்படையுமாறு, அறிவைக் கெடுத்து அல்லலை விளைக்கும் விஷயங்களையும், அல்வழியான சொற்களையுங் கொண் டுள்ளன.

இக்குறையை ஒருவாறு நீக்கி, நவீனத்தைப்பற்றி நல்லெண்ணம் பலர்க்குந் தோன்றும்படி செய்யப் பல அறிவாளிகள் இப்பொழுது முயன்று வருகின்றார்கள். அவர்களைப் பின் பற்றியே நாங்களும் இச்சிறு நூலை இயற்றினோம். நல் லறிவைக் கொளுத்தும்படியான அறிவுரைகளும் கருத்துகளும் இதனுள் ஆங்காங்கே ஆழ்ந்து கற்போர்க்குப் புலனாகும்.

'நேசமில் வதுவை நாச காரணமே' என்னும் உறுதி மொழியை இச் சிறு கதை விளக்குகின்றது. இந்நூல் பலர்க்கும் விளங்குந் தன்மையதா யிருத்தல் வேண்டும் என்பது எங்களுடைய கருத்தாகையால், நாங்கள் இதைக் கூடிய வரையில் மிகவும் எளிய நடையிலேயே எழுதியுள் ளோம். காலப்போக்கின் பொருட்டுக் கதை நூல்களை விரும்பிப் படிக்கும் காரிகை மணிகளாம் சகோதரிகளும் மற்றோரும் இதைப் படித்துப் பயன் பெறுவார்கள் என் றெண்ணுகிறோம்.

இந்நூல் அச்சாகுங் காலத்துத் தாமதமின்றித் தமது கடமையை எம் பொருட்டுச் செய்து முடித்த பீ. ஆர். இராம ஐயர் கம்பெனியார் அவர்களுக்கும், இந்நூலை வெளிப்படுத்துவதில் மிக்க ஊக்கங் காட்டியவரும், இதன் பிரசுர கர்த்தருமாகிய, ம-ள-ள-ஸ்ரீ, தி. இராஜகோபால முதலியார் அவர்களுக்கும் எங்கள் வந்தனம் உரியதாகுக.

"குற்றங் களைந்து குணங்கோட லென்ஞான்றுங்
கற்றறிந்தார் தங்கள் கடன்."

அன்பர்கள்

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை
மங்கலம்—குப்புசாமி முதலியார்

புதியதாக வெளிவந்த நாவல்

# அங்கயற்கண்ணி

அல்லது

# அன்புள்ள மங்கை

இஃது துப்பறியும் ஒரு அபூர்வமான செந்தமிழ் நாவல். ஆரம்பம் முதல் முடிவுவரையில் எவ்விதவேலை இருந்த போதிலும் படிக்கத் துவக்கியவர்கள், முடிக்கிற வரையில் இந்தப் புஸ்தகத்தைக் கீழே வைக்கமாட்டார்களென்று திடமாகச் சொல்லலாம். இந்த நாவலில் உயர் குலத்தில் பிறந்தவனும், அதிக செல்வவந்தனும், படிப்பில் மிக்க தேர்ச்சி உள்ளவனும், மேன்மக்கள் சாவகாசமுள்ளவனும், நன்னடக்கை உள்ளவனுமாகிய கதா நாயகனுனவன் இக்கதையில் கதாநாயகியாய் வரும் அழகில் சிறந்த அங்கயற்கண்ணியின் மீது ஆசை கொள்வதும், அவளையே விவாகம் புரியவேண்டுமென்ற எண்ணத்தினுல் அவன் செய்யும் கொடூரமான கொலையும், பயங்கரமான விஷயங்களும், வேறு ஒருவன் மீது பழிசுமத்துவதும், சமயத்துக்கு ஏற்றவாறு நடிக்கும் அவனுடைய திறமையும் படிப்பவர்களுக்கு ஊக்கத்தைத் தரும். காதாநாயகியாகிய அங்கயற்கண்ணியின் கற்பைப்பற்றி வாசிக்க வாசிக்க, நமது சகோதர சகோதரிகளுக்கு மிக்க ஆச்சரியமும், நன்னடக்கையும் உண்டாகும். இந்த நாவலின் சிறப்பை அதிகமாய் எழுதுவதை விட்டுச் சுருக்கிக் காட்டி இருக்கிறோம். இதில் 350 பக்கமடங்கியுள்ளன. இது சுத்தமான பெரிய எழுத்தில் பதிக்கப்பட்டிருக்கிறது. இதன் விலை ரூபாய் 1-12-0.

தபால் சார்ஜ் பிரத்தியேகம்.

தி. இராஜகோபால முதலியார்,

259, தங்கசாலைத் தெரு,

சென்னை.

ஸ்ரீ

# அம்பலவாணன்

அல்லது

# கற்பகவனத்தில் நடந்த கடுங்கொலை

---

## முதலாம் அத்தியாயம்

---

### கொலை நடந்த மாயம்.

சென்னைப்பட்டினத்தில் உள்ள சிறந்த தெருக்களில் முத்தியாலுப் பேட்டையில் உள்ள தம்பு செட்டித் தெருவும் ஒன்று. அத்தெருவின் இடையில் வலது பக்கத்தில் காண்பவர் கண்ணையும் கருத்தையும் கவரத்தகுந்த சிங்கார மாளிகை யொன்றுண்டு. அம்மாளிகையின் மேல் மாடியில் உள்ள ஓர் அழகிய அறையில் ஒரு வாலிபர்—சற்றேறக்குறைய இருபத்தைந்து வயதுள்ளவர்—கண்ணாடி அலமாரிகளில் வரிசை வரிசையாக அமைக்கப் பட்டிருந்த புத்தகங்களில் எதையோ ஒன்றை யெடுத்து வெகு ஊக்கத்துடன் வாசித்துக்கொண் டிருந்தார். அவர் வாசித்துக் கொண்டிருந்த அவ்வறையில் மின்சார விளக்கு கள் பூரணச்சந்திரன் ஒளி வீசுவதைப்போல் பிரகாசித்துக்

கொண்டிருந்தன. அப்பொழுது சற்றேறக்குறைய காலை ஆறு மணி யிருக்கலாம். மார்கழி மாதமாகையால் தெருக்களில் பண்டாரங்கள் சேமங்கலந்தட்டித் திருவாசகப் பதிகங்களைப் பாடிக்கொண்டு திரிந்தார்கள். குடுகுடுப்பாண்டிகள் சிலர் குடுகுடுப்பையை ஆட்டிச் சத்தஞ் செய்து, வாயில் வந்தபடி எல்லாம் கத்திக்கொண்டு, அங்குமிங்கும் திரிந்தனர்.

பண்டாரங்கள் பாடும் பாடலின் ஓசையும், குடுகுடுப்பாண்டிகளின் கத்தலும் அமைதியாக வாசித்துக் கொண்டிருந்த அவ்வாலிபருடைய கருத்தைச் சிவ பூஜையில் கரடி புகுந்தாற்போல் அவர் வாசித்துக் கொண்டிருந்த நூலினுட் செல்லாமல் தடுத்தன. உடனே அவ்வாலிபர் தம்கையிலிருந்த அருமையான அப்புத்தகத்தை மூடித் தமக்கு எதிரில் இருந்த அதிக அழகுள்ளதும், வேலைப்பாடமைந்ததுமான மேஜையின் மீது வைத்துவிட்டுத் தெருப்புறமாக அவ்வறைக்கு வெளிப்பக்கத்திலுள்ள தாழ்வாரத்தில் எதையோ யோசிப்பவர்போல் தம்முடைய தலையின் பின்புறமாக இரண்டு கைகளையும் வைத்துக்கொண்டு முன்னும் பின்னுமாக உலாவிக்கொண்டிருந்தார். அவர் அப்படி உலாவுவதைப்பார்த்தால் அவர் ஒரு சிறந்த அறிவாளியென்பது புலப்படாமற் போகாது.

அப்படி உலாவிக்கொண்டிருந்த அவ்வாலிபர் எதையோ ஒரு சிறு சத்தத்தைக் கேட்டுத் தம் வாசிப்பறையுட் புகுந்தார். யாரோ அவ்வறையை நோக்கி வருவதுபோல் அவருக்குத் தோன்றியது. சிறிது நேரத்திற்கெல்லாம் அவ்வறைக் கதவை யாரோ தட்டுஞ் சத்தம் அவர் காதுக்கெட்டியது.

உடனே அவ்வாலிபர் அறையின் கதவைத் திறந்து

பார்க்க அங்கே அவருடைய வேலைக்காரனாகிய கோவிந்தன் கையில் ஒரு சிறு துண்டுக் கடிதத்துடன் நிற்பதைக் கண்டார். வேலையாள் அவர் கட்டளையின்படி அறைக்குள் புகுந்து தன் கையிலிருந்த கடிதத்தை அவரிடம் கொடுத்து, 'தங்களைப் பார்ப்பதற்காக யாரோ ஒருவர் வெளியில் வந்து காத்துக்கொண்டிருக்கிறார்,' என்று கூறினான்.

அவர் அத்துண்டுக் கடிதத்தை விளக்கு வெளிச்சத்தில் உயர்த்திப் பிடித்துப் பார்த்தார். அதில் அம்பலவாணன் B.A., கற்பகவனம், பூவிருந்தவல்லிப் பெரிய சாலை என்று அழகிய எழுத்துக்கள் அச்சிடப்பட்டிருந்தன. உடனே அவர், 'ஓகோ! சரி,' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு அக்கடிதத்துண்டை மேஜையின்மேல் வைத்து விட்டுக் கோவிந்தனைப் பார்த்து, 'கோவிந்தா, வந்தவரை உள்ளே அழைத்துக் கொண்டுவா,' என்று கூறினார்.

'அப்படியே ஆகட்டும்,' என்று பணிவுடன் கூறிவிட்டுக் கோவிந்தன் படியிறங்கிக் கீழே சென்றான். அவ்வாலிபர் அங்கிடப்பட்டிருந்த சோபா நாற்காலி ஒன்றில் அமர்ந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் கோவிந்தன் வந்தவரை யழைத்துக்கொண்டு மாடிக்கு வந்தான்.

அவ்வாலிபர் கோவிந்தன் அழைத்துக்கொண்டுவந்த அம்மனிதரைக்கண்டவுடன் நாற்காலியை விட்டெழுந்து, 'அம்பலவாணரே, வாருங்கள்,' என்று கூறிக்கொண்டே தமக்கு எதிரிலிருந்த மற்றொரு நாற்காலியை அம்பலவாணனுக்குக் காட்டி, 'உட்காருங்கள்,' என்றார். பின்பு வேலையாளாகிய கோவிந்தனைப்பார்த்து, 'கோவிந்தா, நீ போகலாம். பிறகு வேண்டியிருந்தால் உன்னை நான் கூப்பிடுகிறேன்,' என அவன், 'அப்படியே ஆகட்டும்,' என்று கூறிக்கீழே சென்றான்.

அம்பலவாணன் அவ்வறைக்குள் நுழைந்து தன் கையி லிருந்த கைப்பிரம்பை ஒருபுறம் வைத்துவிட்டு அவ்வாலிபர் காட்டிய நாற்காலியில் உட்கார்ந்தான். அவனுக்கு வயது இருபது அல்லது ஒன்றிரண்டு அதிகமாக இருக்கலாம். வாலிபப்பருவத்திற்கு ஏற்றபடி அவன் உடல் அமைப்பு அமைந்திருந்தது. ஆனுல் அவன் முகத்தில் துன்பம் குடி கொண்டிருந்தது. தேகம் நடுங்கியது. அவன் நெற்றியி லிருந்து முத்துக்களைப்போல வியர்வை நீர் சொட்டியது.

அவனிடம் இவ்வேற்றுமைகளைக் கண்ட வாலிபர் அவனைப்பார்த்து, 'அம்பலவாணரே, உமக்காக நான் என்ன செய்யவேண்டும் என்பதைக் கூறும். ஏதோ துன்பங் கொண்டவர்போல் தோன்றுகிறீர்! காரணமென்ன?' என்று கேட்டார்.

அம்பலவாணன் அவரைப்பார்த்து, 'குணசீலரே, நான் பயங்கரமானதும் துக்கத்தைத் தரக்கூடியதுமான ஒரு செய்தியை உம்மிடம் தெரிவிக்க வந்தேன்: என்னுடைய தமையனுர், மோகனசுந்தர முதலியார், கற்பகவனம் என் னும் அவருடைய மாளிகையில் துப்பாக்கியால் சுடப்பட்டு உயிரிழந்து கிடக்கின்ருர். அக்கொலை இரவு நடந்தது,' என்று கூறினுன். அவனுக்கு அதற்குமேல் ஒன்றுங்கூற இயலவில்லை. துக்கம் அவன் தொண்டையை அடைத்தது. அவன் கண்களிலிருந்து சில நீர்த்துளிகள் விழுந்தன. அவன் அவற்றை வெளிக்குக் காட்டிக்கொள்ள விரும்பாதவன்போல் தன் சட்டைப்பையிலிருந்த கைக்குட்டையை எடுத்து முகத் தை யொற்றிக்கொண்டான். உடல் நடுக்கம் மாத்திரம் நீங்கவேயில்லை.

குணசீலர் அதைக்கேட்டு, 'ஆ! கொலையா? துப்பாக் கிச் சத்தத்தை யாராகிலும் கேட்டார்களா?' என்ருர்.

அம்பலவாணன் சிறிதுநேரம் பேசாமலிருந்து, பிறகு, ‘இல்லை....இல்லை. துப்பாக்கிச் சத்தத்தை ஒருவரும் கேட்க வில்லை. கற்பகவனம் என்னும் அம்மாளிகை மிகப்பெரியது. வீட்டு வேலையாட்களெல்லாம் மாடிக்குச் சென்று படுத்துக் கொள்ளுவது வழக்கம்; ஆகையால் அவர்கள் அவ்வாறே மேல் மாடியில் போய்ப் படுத்துக்கொண்டு உறங்கிவிட்டார்கள். என் தமையனார் அம்மாளிகையின் கீழ்க்கட்டில் பின்புறத்தில் தோட்டத்தை நோக்கியுள்ள ஓர் அறையில், சாப்பிட்டான பிறகு இரவில் நெடுநேரம் உட்கார்ந்துகொண்டு வாசித்துக்கொண்டும், வீட்டுக்கணக்கு முதலியவற்றைப் பார்த்துக்கொண்டு மிருப்பது வழக்கம். ஆகையால் அவ் வறையில் சுடப்பட்ட வெடிச்சத்தம் மேல் மாடியில் உறங்கிக் கொண்டிருந்த ஒருவருக்கும் கேட்கவில்லை. குணசீலரே, அது மிகக் கொடூரமான செய்கை; காண்போர் மனத்தைக் கிலி கொள்ளச் செய்யும் கடூரமான கொலை. ஐயோ! நான் என்ன சொல்லுவேன்? அஃது என்னுடைய தாயாரை மனமுடைந்து இறக்கச்செய்யும் என்று தோன்றுகிறது,’ என்று கூறினான்.

‘ஆ! ஆ!! அப்படியா? துப்பாக்கியகப்பட்டதா?’ என்று ஆச்சரியத்துடன் கேட்டார் குணசீலர்.

‘இல்லை...இல்லை; துப்பாக்கி அகப்படவில்லை. அஃது எப்படி அகப்படும்? கொலை யென்று கூறுகிறேனே! கொலை செய்தவன்—அவன் யாராயிருந்தாலும்—கொலை செய்யத் தனக்குக் கருவியாக இருந்ததை விட்டுவிட்டுப் போய்விடுவானா? அவன் உண்மையில் அதை எடுத்துக்கொண்டு போய் விட்டிருக்கவேண்டும். அக்கொலைக்குக் காரணம் களவே என்பது நன்றாகத் தெரிகிறது. அவ்வறையின் ஒரு சன்னல் திறக்கப்பட்டிருந்தது. தவிர என் தமையனாருடைய கடி

காரமும், பொற்சங்கிலியும், சில ஆபரணங்களும் காணுமற் போயின. என் தாயார் தாங்கள் கண்டு பிடித்த படு கொலை வழக்குகளைப் பற்றியும் அவற்றுல் தங்களுக்கு உண் டான புகழைப் பற்றியும் அடிக்கடி தமிழ்ப் பத்திரிகைகளின் மூலமாகவும், பலர் சொல்லவும் அறிந்திருக்கிருர் ஆதலால் இக்காரியத்தில் போலீஸ் அதிகாரிகள் புகுந்து குழப்பம் ஏற்படுத்தாத முன்பே தங்களைக்கொண்டு குற்றவாளியைக் கண்டு பிடிக்கவேண்டு மென்பது அவருடைய எண்ணம். ஆகையினுல் அவர் உடனே சென்று தங்களை அழைத்து வரும்படி எனக்குக் கட்டளையிட்டார். வெளியில் மோட்டார் வண்டி காத்துக்கொண்டிருக்கிறது.........................,' என்று கூறி மேலே ஏதோ கூற முயன்ருன் அம்பலவாணன்.

குணசீலர் அவன் சொல்லை இடை மறுத்து, 'சரி, எனக்கு எல்லாம் தெரிந்தது. நல்லது; அதனுல் நாம் உடனே போகவேண்டும். ஆனுல் நாம் போகப்புறப்படு முன் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். அஃது உம் முடைய நன்மைக்கேயாகும். நீர் சாந்தமாக இருக்கவேண் டும் என்பதே என்னுடைய வேண்டுகோள்,' என்று கூறித் தாம் உட்கார்ந்திருந்த நாற்காலியை விட்டெழுந்து சுவரில் அமைக்கப்பட்டிருந்த கூப்பிடு மணியின் (Calling Bell) பொத்தானை அழுத்திஞர்.

உடனே கோவிந்தன் அவர் முன் வந்து நின்ருன். அவர், 'கோவிந்தா, என் சட்டையையும் தலைப்பாகையையும் கொண்டுவா,' என்று கூறக் கோவிந்தன் உடனே அவற்றைக் கொண்டுவந்து அவரிடம் கொடுத்தான். குணசீலர் அவற்றை அணிந்துகொண்டு, 'சதாசிவன் வந்தவுடன் வண்டியுடன் பூவிருந்தவல்லிச்சாலையிலுள்ள கற்பக வனத்திற்குப் பன்னி ரண்டு மணிக்கு வரச்சொல்,' என்று அவனிடம் கூறிவிட்டு,

அம்பலவாணனுடன் கீழிறங்கிவந்து வெளியிலிருந்த மோட்டார் வண்டியில் ஏறினதும் வண்டி கற்பகவனத்தை நோக்கி விரைந்து சென்றது.

வண்டியில் போய்க்கொண்டிருக்கும் போதே குணசீலர், அம்பலவாணனைப்பார்த்து, 'அம்பலவாணரே, உங்களுடைய வழக்கில் நான் தலையிடுவதற்குமுன் நீங்கள் எல்லோரும் என்மீது பூரண நம்பிக்கை வைக்கவேண்டும். உண்மைகளை ஒரு சிறிதும் ஒளித்துக்கூறுதலாவது இல்லாத விஷயங்களைக் கூட்டிச் சொல்லுதலாவது கூடாது. நான் கேட்கும் கேள்விகள் எவையாயினும் அவைகளுக்கு நீங்கள் முழுமையாகவும் உண்மையாகவும் பதில் கூறவேண்டும். நான் இப்பொழுது கூறியவற்றை யறிந்து கொண்டீர்களா?' என்று கேட்டார்.

'குணசீலரே, நீங்கள் இதைப்பற்றி ஒன்றும் கூறவேண்டுவதேயில்லை. நீங்கள் என்ன சொல்லுகிறீர்களோ அதன்படி நாங்கள் நடந்து கொள்ளுவதில் ஒரு விதத் தடையுமிராது. நீங்கள் உண்மையைக் கண்டு பிடித்தல் வேண்டுமென்பதே எங்கள் கோரிக்கை,' என்றான் அம்பலவாணன்.

குணசீலர் :—இப்பொழுது உங்கள் குடும்பத்திலிருப்பவர்கள் எத்தனை பெயர்?

அம்பலவாணன் :—கற்பகவனத்தி லுள்ளவர்களைத் தானே கேட்கின்றீர்? என் தாயார், நான், என் தமையனார், அவர் மனைவி, என் தமையனார் மூத்தமைத்துனி ஆகிய ஐவரே. ஆனால் என் தாயாரும் நானும், எங்களுக்குரிய வீட்டை விற்றுவிட்டதால், சிறிது காலமாகத்தான் அங்குத் தங்கியிருக்கிறோம்.

குணசீலர் :—வேலைக்காரர்கள் நீங்கலாக நீங்கள் ஐவர் தாமோ? விருந்தாளிகள் யாரேனும் இருக்கிறார்களா?

அம்பலவாணன் :—விருந்தாளிகள் எவரும் வீட்டில் தங்குவதில்லை. நேற்று மாலை, பழைய குடும்பச் சிநேகிதர்களிற் சிலர் அங்கு வந்திருந்தனர்..........................ஆ! போலீஸ் உத்தியோகஸ்தர்கள் வீட்டில் வந்திருப்பதால் என்ன குழப்பம் நடக்கிறதோ தெரியவில்லை. குணசீலரே, எவ்வளவுக்கெவ்வளவு குழப்பத்தை நீக்கலாமோ அவ்வளவுக்கவ்வளவு நீக்குவதில் என் தாயார் உம்மைத்தான் நம்பியிருக்கிறார்.

குணசீலர்:—அம்பலவாணரே, தற்செயலாக ஏற்படும் கொலை வழக்குகளில்—அவை எக்காரணத்தால் ஏற்பட்டாலும் சரியே—நீர் கூறிய குழப்பமும் துன்பமும் இருந்தே தீரும் என்பதிற் சந்தேகமேயில்லை. அவ்வழக்குகளில் காரணந்தோன்றாதபோது அக்குழப்பமும் துன்பமும் இருமடங்காவதும் உண்டு. உண்மை வெளியாகவேண்டுமானால் அவை கட்டாயம் இருந்தே தீரும்.

அம்பலவாணன் :—குணசீலரே, வீட்டிலுள்ள சில சச்சரவுகளால் போலீஸ் அதிகாரிகள் குற்றமில்லாதவர்கள் மீதும் குற்றம் ஏற்படுத்துதல் கூடும் அல்லவா? அவர்கள் அவ்வாறு செய்யாமலிருக்கும்படி செய்யவேண்டுவதை உம்முடைய முதல் காரியமாகக் கொள்ளவேண்டும் என்று நான் உம்மைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

குணசீலர் :—சச்சரவுகளா? போலீஸ் அதிகாரிகள் குற்றமில்லாதவர்களைக் குற்றவாளிகளாகச் சந்தேகிக்கும்படியான சச்சரவுகள் என்ன இருக்கப்போகின்றன?

அம்பலவாணன் :—உண்மையில் ஒன்றுமில்லை. வீட்டு விஷயங்களை வெளிப்படுத்துவதென்றால் எவருக்கும் விருப்பமிராது. என் தாயாரும் நானும் என் தமையனாருடைய மனைவியையும், மைத்துனியையும் வெறுக்கிறோம்.

அவர்களுடைய குணங்களைக்காண எங்களுக்குப்பிடிக்க வில்லை. துரும்பைத் தூணாகவும் தூணைத் துரும்பாக வும் மாற்றவல்ல போலீஸ் அதிகாரிகள் அதைக்காரண மாகக்கொண்டு காரியங்களைத் தாறுமாறாகச் செய்ய முயன்றாலும் முயலலாம். அவ்வளவுதான். ஒவ்வொரு குடும்பத்திலும் சச்சரவுகள் இருந்தேதீரும். தம்மைப் பேரறிவாளர்களென்றும், தம்மால்தான் உலகம் நடை பெறுகிறதென்றும் கருதிச் செருக்கித்திரியும் சில போலீஸாருக்குப் பார்ப்பதெல்லாம் குற்றமாகத்தா னே தோன்றும்? குணத்தையும் குற்றத்தையும் சீர் தூக்கிப்பார்க்க அவர்களுக்கு இயலுமோ? அவர்கள் எதைப்பிடித்தாலும் ஒரே பிடிதான்.

குணசீலர் :—நான் எல்லாம் உணர்ந்தேன். முதல் முதல் பிரேதத்தைப் பார்த்தவர் யார்? அதை அவர் எப் பொழுது பார்த்தார்?

அம்பலவாணன்:—வீட்டுவேலைக்காரியான தங்கம் என்பவள் இன்று ஐந்து மணிக்கு என் தமையனார் அறையைப் பெருக்குவதற்காகச் சென்றவள் அங்கு அவர் கொலை யுண்டு கிடப்பதைக்கண்டு பயந்து, நெருப்பினிடையில் அகப்பட்டுக் கொண்டவளைப்போலப் பெருங்கூச்சலிட் டாள். அவளிட்ட அப்பெருங்கூக்குரல் வீட்டிலுள்ள எல்லோரையும் எழுப்பிவிட்டது.

குணசீலர் :—அவர்கள் எல்லோருடனும் நீரும் எழுந்து கீழே ஓடி வந்தீரோ?

அம்பலவாணன் :—இல்லை...இல்லை. குணசீலரே, நான் உண்மையில் எப்பொழுதும் அயர்ந்து தூங்குவது வழக்கம். நேற்று இரவு நான் வெளியிற்சென்று நெடு நேரம் கழித்து வீட்டுக்கு வந்ததால் என்தேகம் அலுத்

திருந்தது. அவ்வலுப்பு தீர நன்றாகத் தூங்கி விட்டேன். வேலைக்காரி தங்கம் என் தமையனார் கொலையுண்டு கிடப்பதைக்கண்டு பெருங்கூச்சலிட்டதைக் கேட்டு எல்லோரும் கீழிறங்கிச் சென்று பெருங்குழப்பம் உண்டாக்கினர். அவர்கள் செய்த பெருங்குழப்பத்தால் நான் விழித்துக்கொண்டு, வீட்டில் ஏதோ கொடுமை ஏற்பட்டிருக்கிறது என்பதை யுணர்ந்து என் படுக்கையறையை விட்டுக்கீழே வந்தேன். அப்பொழுது என் தமையனார் அறையினிடத்தில் வீட்டிலுள்ளவர்களெல்லோரும் சூழ்ந்திருப்பதையும், வேலைக்காரர்கள் அவ்வறையின் வாயிலை யடைத்துக் கொண்டு நிற்பதையுங்கண்டேன். என் தாயார் டாக்டரை அழைத்துவரும்படி ஓர் ஆளையனுப்பி யிருந்தார். ஆனால் எந்த டாக்டர் வந்து பார்த்திருந்தாலும் பயனுண்டாயிராது என்பது உண்மை. என் தமையனார் மனைவி தேகம் நடுங்கப் பைத்தியம் பிடித்தவள்போல் காணப்பட்டாள்; அவள் தமக்கையாகிய காமகோட்டி யென்பவள் அவளைச்சாந்தப் படுத்திக்கொண் டிருந்தாள். என்னுடைய தமையனாருடைய பிரேதம் அங்கிருந்த ஒரு நாற்காலியில் அமர்த்தப்பட்டிருந்தது. ஆ! ஆ!! குணசீலரே! அவர் முகத்தோற்றத்தைப் பார்த்த உடனே எனக்குப்பயம் அதிகரித்தது. அப்படிப்பட்ட தோற்றத்தை நான் இதுவரையில் கண்டதே யில்லை.

அம்பலவாணன் இவ்வாறு கூறியபோது மோட்டார் வண்டி பூவிருந்தவல்லிச்சாலையிலுள்ள கற்பகவனத்தில் நுழைந்து மாளிகையின் முன் நின்றது. அம்பலவாணன்

குணசீலரை அழைத்துக்கொண்டு உள்ளே சென்றான். அதற்குள் அங்குப் போலீஸ் அதிகாரிகள் சிலர் கூடியிருந்தனர்.

அம்பலவாணனும் குணசீலரும், அம்பலவாணனுடைய சகோதரராகிய மோகனசுந்தர முதலியாருடைய சவம் இருந்த அறையினிடத்திற் சென்று நின்றனர். உடனே அம்பலவாணன் பயந்து குணசீலருடைய கையை அழுத்திப் பிடித்துக்கொண்டு நடுங்கினான்.

குணசீலரைக் கண்டதும் அக்கூட்டத்திலிருந்த ஒருவர் முன் வந்து, குணசீலர் கையைப் பிடித்துக் குலுக்கி, 'குணசீலரே, நீங்கள் இங்கு எப்படி வரநேரிட்டது? நீங்கள் வந்தது எனக்குப் பெரிய சந்தோஷத்தை யுண்டுபண்ணுகிறது,' என்று கூறினார்.

இவர்தாம் சென்னையில் பெயர் பெற்ற போலீஸ் கமிஷனர் கருணாநிதிநாயடு என்பவர். இவர்கூறியதற்குக் குணசீலர் பதில் கூறுவதற்குமுன் அம்பலவாணன் தாயாராகிய மரகதவல்லியம்மாள் இவரைப்பார்த்து, 'ஐயா, குணசீலரை அழைத்து வரும்படி நான் என் புத்திரனை யனுப்பியிருந்தேன். இக்கொடிய கொலையைப்பற்றிய விஷயங்களையெல்லாம் அவரே ஆராய்ந்து உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று கருதி நான் இவ்வழக்கைப் பார்க்கும்படி அவரிடம் கேட்டுக் கொள்ளுகிறேன்,' என்று கூறிக் குணசீலரிடம் வந்து, 'ஐயா, நான் அருளாநந்தர் மனைவி. மரகதவல்லி என்பது எனது பெயர். நான்.இப்பொழுது இறந்துகிடக்கும் மோகனசுந்தரனுக்கு...................,' என்று கூறி, மேலே ஒன்றும் சொல்லாமல் திடுக்கிட்டவள்போல் அசைவற்று நின்றாள். அவளுடைய கண்களில் இருந்து சில நீர்த்துளிகள் முத்துக்களைப்போல உதிர்ந்தன. அவள்

தான் 'மோகனசுந்தரருக்குத் தாயார்,' என்று கூற முயன்று இடையில் நிறுத்திவிடக் காரண மென்ன?

குணசீலர் சிறிதுநேரம் பேசாதிருந்து, பிறகு, மரகத வல்லியைப் பார்த்து, 'அம்மா, என்னாலாகும் உதவியை உமக்கு இவ்விஷயத்தில் செய்வதில் எனக்கு அதிக சந்தோஷமே. ஆனால் அவ்வாறு செய்யத் தொடங்குவதற்கு முன் நான் உம்மோடு சிறிதுநேரம் இதை யொட்டிப்பேச விரும்புகிறேன்; பின்பு இவ்வீட்டு வேலைக்காரர்களையும் நேரிற்கண்டு பேசவேண்டும். சற்றுப்பொறுங்கள்,' என்று சொல்லிவிட்டு, போலீஸ்கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்களைப்பார்த்து, 'நாயடு அவர்களே, நீங்கள் எனக்கு முன்பே இவ்விஷயத்தைப்பற்றி உணர்ந்திருப்பீர்கள் என்று எண்ணுகிறேன். நான் இப்பொழுது மோகனசுந்தரர் தேகத்தைச் சோதிக்கலாமோ?' என்று கேட்டார்.

'குணசீலரே, என்ன அவ்வாறு கேட்கிறீர்களே! நீங்கள் பார்ப்பதில் என்னதடை யிருக்கிறது! நீங்கள் அதைக் கட்டாயம் பார்க்க வேண்டும் என்பதே என்னுடைய விருப்பம். அத்தேகம் இன்னும் நாற்காலியிலேதான் இருக்கிறது. டாக்டர் சோதனையைவிட வேறு ஒன்றும் நடக்கவில்லை. மோகனசுந்தரர் இருதயத்தில் துப்பாக்கியால் சுடப்பட்டு உயிர்துறந்து சிலமணிநேரமாயிற்று,' என்று கூறினார்போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு.

உடனே இருவரும் அவ்வறையினுட் புகுந்தனர். அங்குச் சற்றேறக்குறைய இருபது வயதுள்ள அழகிய பெண்ணொருத்தி, அப்பிணத்தினருகிலிருந்து, 'ஐயோ! ஐயோ!! இக்கோரத்தை நான் எப்படிக்கண்டு சகிப்பேன்? என்னால் முடியவில்லையே! எனக்குப்பைத்தியம் பிடித்து

விடும்போ லிருக்கிறதே! தலை கிறு கிறுக்கிறதே!' என்று கூறி வாய்விட்டு அழுதாள்.

அதைக்கண்ட மரகதவல்லி யம்மாள், கோபங்கொண்டு, அவளைப்பார்த்து, 'அடீ, மதனசுந்தரி, பிழைத்திருப்பவர்களிடத்தில் உனக்கு மரியாதை இல்லாவிட்டாலும் இறந்தவனிடத்திலாவது மரியாதை காட்டக்கூடாதா? கட்டுக்கடங்காத உன்குரலெடுத்து அழுது வீண்புரளி செய்வதற்குரியகாலம் இதுவன்று. சற்றுநேரம் பேசாமலிரு,' என்று கடிந்து கூறினாள்.

உடனே மதனசுந்தரியின் தமக்கையாகிய காமகோட்டி யென்பவள் மதனசுந்தரியின் கண்களைத் துடைத்து, 'மதனசுந்தரி, அழவேண்டா. இறந்தவர்களைப்பற்றி அழுதென்ன பயன்? அணைகடந்த வெள்ளம் அழுதாலும் நிற்கப்போகிறதில்லை. நாம் அழுவதனால் இறந்தவரைப் பிழைப்பிக்க நம்மாலியலுமா? வேண்டா; வேண்டா. அழவேண்டா,' என்று கூறினள்.

காமகோட்டியின் பொறுமைக் குணத்தைக்கண்ட குணசீலர் அவளைப்பற்றித் தம் மனத்திற்குள் புகழ்ந்தார். மதனசுந்தரி, காமகோட்டியைப் பார்த்து, 'அக்கா, என்னால் நிற்கமுடியவில்லை. என்னைத் தயவு செய்து என்னுடைய அறைக்கு அழைத்துச்செல். இனி ஒரு நிமிஷமும் என்னால் சகித்துக்கொண் டிருக்க முடியாது. என்னையே வெறித்து நோக்கும் அவருடைய கண்கள்—என்னுடைய கணவருடைய கண்கள்—என்னைப்பயமடைந்து பயித்தியம் பிடிக்கச் செய்து விடும் போல் தோன்றுகின்றன,' என்று கூறினள்.

காமகோட்டி குணசீலரைப்பார்த்து, 'ஐயா, என் தங்கை மதனசுந்தரியை அவள் அறைக்கு அழைத்துக்கொண்டு

போவதே நன்மையாகும் என்றெண்ணுகிறேன். இப்பொழுது அவளை இங்கிருந்து வருந்தச் செய்யக்கூடாது என்பதற்குப் பல காரணங்களிருக்கின்றன. அவசியமானால் அவளை என்ன கேள்விகள் கேட்க நீங்கள் விரும்புகிறீர்களோ அக் கேள்விகளுக்கு நானே அவளுக்குப்பதிலாக இருந்து பதிற் சொல்லுகிறேன்,' என்றாள்.

அவள் கூறிய வார்த்தைகளைக் கேட்ட மரகதவல்லியம்மாளுக்குக் கண்கள் சிவந்தன; உதடுகள் துடிதுடித்தன. அவள் கோபக்குரலில், 'அது கூடாது. என் மருமகளாகிய மதனசுந்தரி இங்கேயே இருக்கவேண்டும். அவள் கணவன் பிணம் இருக்கும் இடம் அவள் இருப்பதற்கு ஏற்ற இடம். காமகோட்டி, நீ இதற்குள்ளே என் மகன் வீட்டிற்குத் தலைவியாய் விட்டதாக நினைத்துக் கொண்டாய் போலிருக்கிறது! நீ ஒன்றும் கட்டளையிடவேண்டியதில்லை. இதற்குள்ளேயே உன் அதிகாரத்தை ஆரம்பித்துவிடாதே,' என்று கூறினாள்.

காமகோட்டி மரகதவல்லியம்மாளைப்பார்த்து, 'அம்மா, நீர் அப்படிக் கூறவேண்டியதில்லை. இஃது இப்பொழுது என் தங்கை வீடேயல்லாமல் உங்களுடைய வீடன்று. என் தங்கை இங்குள்ள வரையில் உம்மைவிட அதிகமாகப் பேச எனக்கு இங்குச் சுதந்திரம் உண்டு,' என்று தாழ்ந்த குரலிற் கூறிக்குணசீலரை நோக்கி, 'ஐயா, என் தங்கை மிகுந்த வருத்தத்திற்குள்ளானாள். இவ்வம்மாள் பேசுஞ் சொற்கள் எரியும் நெருப்பில் நெய்யிட்டு வளர்ப்பது போல் அவளுடைய வருத்தத்தை வளரச்செய்கின்றன. தாங்களும் கமிஷனர் நாயடு அவர்களும் அவளை அப்புறம் அழைத்துச் செல்ல எனக்கு அநுமதி கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்,' என்றனள்.

அவள் கூறியதைக்கேட்ட போலீஸ் கமிஷனர், கருணு

நிதி நாயடு, அவளைப்பார்த்து, 'அம்மா, நீர் அவ்வாறே அழைத்துக்செல்லலாம். மாரகதவல்லியம்மாள் அவர்களும் அம்பலவாணருங்கூட இவ்விடத்தைவிட்டுச் செல்லுவது நன்மையாகும். நான் என் நண்பர் குணசீலருடனும் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையுடனும் இவ்வறையைச் சோதனையிட விரும்புகிறேன். உங்களை ஏதாகிலும் கேட்க வேண்டியிருந்தால் அப்புறம் கேட்டுக் கொள்ளுகிறோம்,' என்று சொன்னார்.

மரகதவல்லியம்மாள் அவர் கூறியதைத் தடுத்துக் கூறக் கருதினாள். ஆனால் அவ்வாறு செய்வது தன் பெருமைக்குக் குறைவாகும் என்பதைக் கருதியோ வேறெதனாலோ அவ் வறையை விட்டு வெளியே சென்றாள். அம்பலவாணனும் அவளைப்பின்பற்றிச்சென்றான். அங்குக் கூடியிருந்த வேலை யாட்கள் எல்லோரும் திறந்தவாய் திறந்தபடியே அவ் விடத்தை விட்டுச் சென்றார்கள்.

அவ்வறையில் துப்பறிவதில் சிறந்த பெயர்பெற்றவரா கிய குணசீலரும், போலீஸ் கமிஷனரும், இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையும் தவிர வேறு ஒருவரும் இல்லை. போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயுடு அவர்கள் துரைசிங்கம் பிள்ளையைப் பார்த்து, 'ஏ. 213 எங்கே?' என்று கேட்டார். உடனே இன்ஸ்பெக்டர் துரை சிங்கப் பிள்ளை, 'அடே! இருநூற்றுப் பதின்மூன்று,' என்று கூவினார். உடனே தடித்த தேகத்தையுடைய நாராயணசாமி என்னும் போலீஸ் சேவகன் ஒருவன், 'இதோ, வந்தேனையா,' என்று கூறிக் கொண்டே அவ்வறைக்குள் ஓடிவந்தான். இன்ஸ்பெக்டர் துரைசிங்கப் பிள்ளை அவ்வறையின் கதவை மூடித்தாழிடும் படி அச் சேவகனுக்குக் கூறினார். அவனும் அவ்வாறே கதவைச் சாத்தித்தாழிட்டு அவர்கள் முன் வந்து நின்றான்.

பிறகு குணசீலர் கமிஷனரை நோக்கி, 'நாயடு அவர்களே, இனி நாம் நம்முடைய காரியத்தைத் தொடங்குவோம். இவ்வீட்டுக்குரியவரான மோகனசுந்தர முதலியார் இரவு எத்தனை மணிக்கு உயிர் விட்டார் என்பதைப் பற்றி உங்களுக்கு ஏதாகிலும் தெரியுமோ?' என்று கேட்டார்.

'குணசீலரே, இரவு சற்றேறக்குறைய ஒரு மணியிருக்கலாம் என்று தோன்றுகிறது. ஆனால் எதையும் உறுதியாகக் கொள்வதற்கு இடமில்லை,' என்று கூறினர் கருணாநிதி நாயடு.

பின்பு குணசீலர் மோகனசுந்தரருடைய உடல் அருகிற் சென்று அதைச் சிறிது நேரம் உற்றுப்பார்த்தார். பிறகு அவர் கருணாநிதி நாயடு அவர்களைப்பார்த்து, 'இக் கொலைக்குக் களவுதான் காரணம் என்று சொல்லுவதற்கு இடமுண்டோ?' என்றார்.

இன்ஸ்பெக்டர்:—ஏன் இல்லை? கொலைக்கருவியொன்றும் காணப்படவில்லை. ஜன்னல் திறக்கப்பட்டிருக்கின்றது. தரையின் மீது விரித்துள்ள கம்பளத்தில் காலடி காணப்படுகிறது. மோகனசுந்தரர் அணிந்திருந்த சில ஆபரணங்களும் அவரிடமிருந்த பணமும் காணமற் போய் விட்டன.

குணசீலர், 'அவையாவும் எனக்குந் தெரிகின்றன,' என்று கூறிக் கீழேகுனிந்து மோகனசுந்தரருக்குக் குண்டு பாய்ந்த இடத்தை முகந்து பார்த்து விட்டு, மோகனசுந்தரர் கொலையாளியை அறிந்தே இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. மோகனசுந்தரருக்கு அக்கொலையாளியிடம் நெருங்கிய பழக்கமும் உண்டு போலும்! ஏன் என்றால் கொலையாளி அவரை எவ்வளவு அருகிலிருந்து சுடலாமோ அவ்வளவு அருகிலிருந்து சுட்டிருப்பதாகத் தோன்றுகிறது.

அவ்வளவு அருகில் வருகிறவரையில் அக்கொலையாளியை மோகனசுந்தரர் அறியாமலிருந்தார் என்பது ஆச்சரியத்தி லும் ஆச்சரியமாகும். அப்படி யறிந்திருந்தால் அவர் உடனே எழுந்திருந்து, அவனிடமிருந்து தப்ப முயன்று, பெருங்கூச்ச லிட்டிருக்க வேண்டும். அப்படி யொன்றும் காணப்படவில்லையே!" என்றார்.

இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை, சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு, 'அவர் அப்பொழுது குதித்து எழுந்திருந்திருக்கக்கூடும். உடனே அவர் இருதயத்தில் துப்பாக்கிக்குண்டு பாய்ந்ததனால் மறுபடியும் நாற்காலியிலேயே விழுந்துவிட் டிருக்கலாம் என்று நான் நினைக்கிறேன்,' என்று கூறினார்.

'மோகனசுந்தரர் தமது இரண்டுகரங்களாலும் நாற்காலி யின் கைகளைப் பிடித்துக்கொண் டிருந்திருக்கிறார். இல்லா விட்டால் அவர் தமது இருதயத்தில் குண்டுபாய்ந்த வுடனே அவ்விடத்தைத் தம் கைகளினால் அழுத்திப்பிடித்திருப் பார். இதோ பாருங்கள்: அவருடைய கைகள் நாற்காலி யின் கைகளைப்பிடித்த பிடியிலேயே விரைத்துக் கொண் டன. அவர் இந்நாற்காலியில் நெடுநேரமாக உட்கார்ந் திருந்ததாகத் தெரிகிறது. திடீரென்று—எதிர்ப்பாராதபடி —துப்பாக்கிக்குண்டு வெகு நுட்பமான இடமாகிய இரு தயத்திற் புகுந்ததால் அவர் உயிர், உடலை விட்டு உடனே பறந்திருத்தல் வேண்டும். இதைத்தவிர வேறொரு விஷய மும் தெரிகிறது. அவர்மீது இருந்த பொருள்களைக் கவர்ந்த வர்கள் வெகு சர்வசாதாரணமாக அக்காரியத்தைச் செய் திருக்கிறார்கள். பிறர் கண்டு பிடித்துவிடப் போகிறார்கள் என்னும் பயம் அவர்களுக்குச்சிறிதும் இருந்ததாகத் தோன் றவில்லை. ஏன் என்றால், கொலை செய்யக் கருவியாயிருந்த

அத்துப்பாக்கி காரியம் முடிந்த பிறகு இம்மேஜையின் மேல் நெடுநேரம் வைக்கப்பட்டிருந்திருக்க வேண்டும். அதன் வாய்ப்புறமாக வெளிவந்த புகையின் மணம் இன்னும் இவ் வறையில் இருக்கிறது. அவர் அணிந்திருந்த கடுக்கன், மோதிரம் முதலியவை வெகு தாமதமாகக் கழற்றப்பட்டிருக்கின்றன. தவிர நாற்காலியின் பின்புறமாக மாட்டப் பட்டிருக்கும் இச்சட்டையிலிருந்த கடிகாரமும் அதன் சங்கிலியும் காணப்படவில்லை. இவைகளை யெல்லாம் நீங்கள் குறித்துக்கொண்டீர்களா?' என்று கேட்டார் துப்பறியும் குணசீலர்.

'காணுமற்போன பொருள்களை யெல்லாம் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை ஒரு பட்டியில் எழுதி வைத்திருக்கிறார்,' என்றார் கமிஷனர் கருணாநிதி நாயடு.

'சரி; அதிருக்கட்டும். இதுதான் கள்வன் தப்பியோடியதெனக் கருதப்படும் சன்னல்போலிருக்கிறது!' என்று தமக்கெதிரிலிருந்த ஒரு சன்னலைக்காட்டிக் கூறிக்கொண்டே குணசீலர் அந்தச் சன்னலிடம் சென்று, அதைச் சிறிது நேரம் உற்றுநோக்கினார். அவர் நின்றுகொண்டிருந்த இடத்திலிருந்த கம்பளி சிறிது சுருங்கியிருந்தது. அதை அவர் குனிந்து சிறிது நேரம் பார்த்துவிட்டுத் தலை நிமிர்ந்து மற்றவர்கள் இருந்த புறமாகத் திரும்பினார்.

அவர் அவ்வாறு திரும்பியபோது அவரது முகம் மலர்ந்து காணப்பட்டது. அது பல பொருள்களைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது. குணசீலர் தம்முடைய சட்டைப் பையில் இருந்த மாசற்ற வெள்ளைக் கைக்குட்டையொன்றை யெடுத்துத் தம் கைகளைத் துடைத்துக்கொண்டே மெள்ள நடந்து, மோகனசுந்தரர் உடல் இருந்த நாற்காலியினிடம் வந்தார். அவர் செய்கை

களெல்லாம் மற்றப்போலீஸ் உத்தியோகஸ்தர்களுக்கு வேடிக்கையாகவே தோன்றின. அவர் அதனருகில் வந்து நின்று, பின்னும் சிறிது நேரம் அதை உற்றுநோக்கினர். கடைசியில் அவர் மற்றவர்களிடம் திரும்பினர்.

உடனே போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு, அவரைப்பார்த்து, 'குணசீலரே, இக்கொலை சம்பந்தமான விஷயம் ஏதாவது தென்பட்டதோ?' என்று கேட்டார்.

'கருணாநிதி நாயடு அவர்களே, இன்னும் நான் இவ்வறை முழுவதையும் பரிசோதிக்கா விட்டாலும் ஒரு சில விஷயங்கள் எனக்குப் புலப்படுகின்றன. இக்கொலை வழக்கில் பற்பல விநோதமான விஷயங்கள் காணப்படுகின்றன. அவற்றையெல்லாம் உள்ளவாறுணர உங்களுக்குக் காலமிராது என்று எண்ணுகிறேன். முதலாவது அச்சன்னலிடத்தில் கம்பளியின்மேல் காணப்படும் ஈரக்குறிகள் பாதக் குறிகள் அல்ல; கைகளினால்—இரத்தந்தோய்ந்த கைகளினால்—வேண்டுமென்றே செய்யப்பட்ட குறிகளே,' என்று கூறினர் குணசீலர்.

'அஃது உண்மைதான்; நாங்களும் அதை முதலிலேயே அறிந்தோம். அக்குறிகள் வெளிச்சென்ற கள்வனால் வேணுமென்றே செய்யப்பட்ட குறிகள் என்பதிற் சந்தேகமேயில்லை,' என்றார் போலீஸ்கமிஷனர் கருணாநிதி நாயடு.

அவர் கூறியதைக்கேட்ட குணசீலர், 'நல்லது, நாயடு அவர்களே, அக்கள்வன் எப்படி உள்ளே வந்திருக்கக் கூடும்? அப்படி வந்திருந்தால் அவன் காலடிகள் இருக்க வேண்டாவோ? மண் குறியொன்றும் காணப்படவில்லையே! அது கிடக்க, அந்தச் சன்னல் அறைக்குள்ளிருந்து திறக்கப்பட்டிருக்கிறதே ஒழிய வெளியிலிருந்து திறக்கப்படவில்லை. தவிர, சன்னலிற் காணப்படும் இரத்தக்கறையை நீங்கள்

கவனித்தீர்களா? சன்னலில் பூசப்பட்டிருப்பது புதிய இரத்தமல்ல; கொலையாளி தான் அகப்படாமல் இருக்கக் கருதி நெடு நேரம் பொறுத்துக் கொலையுண்டவரின் இரத்தத்தை யெடுத்து அதிற்பூசியிருக்கவேண்டும். சன்னலின் அருகிலுள்ள படுதாவிலும், கீழே இடப்பட்டுள்ள கம்பளியிலும் அவ்வாறே செய்திருக்கிறது. அவ்விரத்தக்கறையைப் பாருங்கள். சன்னலில் இவ்விரத்தக் கறை ஏற்படுத்தப்பட்டதற்கும், களவு நடந்ததற்கும் நெடுநேரத்திற்கு முன்பே இக் கொலை நடந்திருக்கிறது என்பது இவற்றால் விளங்கவில்லையா?' என்று விஷயங்களை ஒன்றன்பின் ஒன்றாகக் கமிஷனர் கருணாநிதி நாயடுவுக்குக் கூறினார்.

போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு, ஒன்றும் பதில் கூறாமல் நின்றார். இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை, குணசீலரையும், கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்களையும் மாறி மாறிப் பார்த்தார். போலிஸ் சேவகன் விஷயம் ஒன்றும் விளங்காமல் வெறித்து நின்றான்.

---

## இரண்டாம் அத்தியாயம்

---

### கொலைக்கருவி கண்டு பிடிக்கப்பட்டது.

சிறிது நேரம் அவ்வறையில் நிம்மதி குடிகொண்டிருந்தது. பிறகு இன்ஸ்பெக்டர் துரைசிங்கம்பிள்ளை, துப்பறிவதில் சமர்த்தரான குணசீலரை நோக்கி, 'குணசீலரே, உங்களுக்கு இரத்தக்கறையின் மாறுதல் எவ்வாறு தெரியும்? நீர் அதைப்பற்றி அவ்வளவு உறுதியாகக் கூற முடியுமா?' என்று விரைந்து ஒரு கேள்வி கேட்டார்.

அதைக்கேட்ட குணசீலர் அதிக பொறுமையுடன் துரைசிங்கம் பிள்ளையைப் பார்த்து, 'ஐயா, அதைக்கூர்ந்து கவனித்தால் உங்களுக்கே விஷயம் விளங்கக்கூடும். எவ் விஷயத்தையும் ஆழ்ந்து கவனிக்காமல் நான் என்னுடைய கருத்தை ஒருவருக்குந் தெரிவிப்பதில்லை. அவ்விரத்தக்கறை தடித்துத் திரித்திரியாகக் காணப்படுகிறது. உண்மையாகக் கூறவேண்டுமானால் அந்தச் சன்னலிற் காணப்படும் இரத்தக் கறை கொலையாளியின் கையினால் செய்யப்பட்டதன்று. கொலை நடந்து இரண்டொரு மணி நேரங்கழித்தே அது வேறு யாரோ ஒருவரால் அவ்வாறுசெய்யப்பட்டிருக்கிறது. எல்லாம் போகப்போக உங்களுக்கு உண்மையாகப் புலப் படும்,' என்று சொன்னார்.

போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு, அந்தச் சன்னலி னருகிற் சென்று சிறிது நேரம் அதை உற்றுப்பார்த்தார். பிறகு அவர் ஆச்சரியத்துடன், 'ஆம் ஆம்!! குணசீலர் அவர்கள் கூறியது உண்மையே. துரைசிங்கம் பிள்ளை அவர்களே, இங்கே வாருங்கள். இக்கொலை வெளியார் ஒருவரால் நடந்தேறியதுபோல் பிறர்க்குத் தோன்றும்படி வேறு யாரோதான் இவ்வாறு செய்திருக்கவேண்டும். ஆனால் வேறு ஒருவர் இவ்வாறு செய்ததற்குக் காரணம், மோகன சுந்தரர் கொலை செய்யப்பட்ட பிறகு அவரிடமிருந்த பொருள்களைக் களவாடவேண்டும் என்னும் கருத்தேயாகும். அப்பொருள்களைக் களவாடியதும் இவ்வீட்டு வேலைக்காரர்க ளில் ஒருவர் செய்கையாகவே இருக்கவேண்டும். ஆனால் அவ்வேலைக்காரன் இத்திருட்டுச் செய்கையைப் பயமின்றி தாமதமாகச் செய்திருப்பதற்குக் காரணம் மாத்திரம் எனக் குப் புலப்படவில்லை. அப்பொருள்களும் கொலைக்கருவியும் என்னவாயின என்பதும் எனக்கு இப்பொழுது தோன்ற

வில்லை. யாவும் பிறகு தெரியவரும் என்று எண்ணுகிறேன்,' என்றார்.

உடனே போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை மிகுந்த பரபரப்புடன், 'அப்படியானால் நான் இப்பொழுதே இவ்வீட்டிலுள்ள வேலைக்காரர்களை யழைத்து வினவி உண்மையை அறிந்துவிடுகிறேன். உண்மையை யுரைக்கா விட்டால் அவர்களுடைய கதி யென்னவாகும் என்பது அவர்களுக்கே தெரியும். இவ்வீடுமுழுவதையும் சோதித்துப்பார்த்தால் உண்மை விளங்கும். நான் அவ்வாறே செய்கிறேன்,' என்று கருணாநிதி நாயடு அவர்களைப் பார்த்துக் கூறினார்.

அப்பொழுது துப்பறியும் குணசீலர், மோகனசுந்தரர் உடல் இருந்த நாற்காலிக்கு முன்புறத்தில் குனிந்து, எதையோ உற்று நோக்கினார். அவ்விடத்தில் சில மஞ்சள் கலந்த அரிசிகளும், மல்லிகை மலரின் இதழ்களும் இறைந்து கிடந்தன. அவர் அவற்றை ஒன்று விடாமற் பொருக்கி, ஒரு சிறு காகிதத்துண்டில் மடித்துத் தம்முடைய சட்டையின் உட்பையில் போட்டுக்கொண்டு எழுந்து நின்றார். இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை கூறிய வார்த்தைகள் அவர் செவிக் கெட்டாமற் போகவில்லை.

உடனே குணசீலர், இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையைப் பார்த்து, 'பிள்ளையவர்களே, அவ்வளவு அவசரம் கூடாது. நாம் அவ்வாறு வேலையாட்களுக்கு—நிரபராதிகளான வேலையாட்களுக்கு—வீணாகத் துன்பங் கொடுப்பதில் எனக்கு விருப்பமில்லை. வீடு முழுவதையும் சோதித்துப் பார்ப்பதில் எனக்கு இஷ்டமுண்டு. ஆனால் நீர் சொல்லுகிறபடி வேலையாட்களைக் கேள்வி கேட்டுத் துன்புறுத்துவதால் நாம் உண்மையை உணரவில்லையென்றும், இக்காரியம் வெளியார் ஒருவராலும் செய்யப்

படவில்லை என்பது நமது உண்மைக் கருத்தென்றும் அவர்கள் தெரிந்துகொள்ளக் கூடும். அவ்வாறு தெரிந்து கொள்வதனால் உண்மைக் கொலையாளியோ அல்லது திருடனோ நம்ஆராய்ச்சிக்கு அகப்படாமல் மறைந்துவிடக்கூடும். புதரிலுள்ள முயலை வெருட்டி அப்புறப் படுத்திவிட்டால் பிறகு அதைப் பிடிப்பது அருமையாகுமல்லவா? நீர் இவ்வாறு செய்வீரானால் நம்முடைய காரியம் முழுவதும் வீணாகும்,' என்று கூறிப் போலீஸ் கமிஷனரைப் பார்த்து, 'நாயுடு அவர்களே, நீங்கள் ஆராயும் விஷயத்தை அமைதியாக ஆராய்ந்து உமக்குத் தோன்றும் விஷயங்களை எனக்குத் தெரிவிக்கக் கோருகிறேன்,' என்று கூறினார்.

'இவ்வழக்கில் எனக்குத் தோன்றும் விஷயங்களை உமக்குத் தெரிவிப்பதில் எனக்குச் சந்தோஷமே. இன்று முழுவதும் நீங்கள் இங்குத்தானே இருக்கப் போகிறீர்கள்?' என்று வினவினார் போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயுடு.

குணசீலர் :—ஆம்! நான் இங்கேயேதான் இருக்க நேரிடும் என நினைக்கிறேன். நான் இப்பொழுது இவ்வறை முழுவதையும் நன்றாகச் சோதிக்க வேண்டும். பிறகு இதையொட்டி இவ்வீட்டிலுள்ள சிலரிடத்தில் பேச விரும்புகிறேன். இதுவரையில் ஒன்றும் உறுதியாக ஏற்படவில்லை. ஒவ்வொன்றும் புதுமை புதுமையாகத் தோன்றுகிறது. இப்பிணத்தின் முகத்தை நன்றாகக் கவனித்தீர்களா?

கருணாநிதி நாயுடு :—'என்ன! என்ன!! பிணத்தின் முகத்தையா? அதில் என்ன இருக்கிறது?' என்று கேட்டுக்கொண்டே திரும்பிப் பார்த்தார்.

குணசீலர்:—அதைப்பாருங்கள். பெருந்திகிலும் வெறுப்பும் அதனிடத்திற் குடிகொண்டிருக்கின்றன அல்லவா?

கருணாநிதி நாயடு:—குணசீலரே, இக்குறிகளால் நீங்கள் என்ன உணரக்கூடும் என்பது எனக்கு விளங்கவில்லை. அவை மோகனசுந்தரர் இறக்குந் தருணத்தில் உண்டானவையாக இருக்கலாம்.

குணசீலர்:—விஷயத்தை நன்முகக் கவனியுங்கள். மோகன சுந்தரர் எதிர்ப்பாராதபடி திடீரென்று எதிர்த்துக் கொல்லப்பட்டார் என்று உமக்குத் தோன்றுகிறதா? அவர் தம்மைக் கொன்ற கொலையாளியைத் தெரிந்து கொள்ளவில்லையென்று கருதுகிறீர்? தம்மையெதிர்த்துக் கொலை செய்த கொலையாளியின் நன்றியற்ற செய்கையை அவர் அறிந்தும், அக்கொலையாளியை எதிர்க்கச் சக்தியற்றவராய் இருந்தார் என்பதை அவருடைய முகத்தில் இப்பொழுதும் காணப்படும் வெறுப்புக் குறி தோற்றுவிக்க வில்லையா? ஒருவர் மனத்திலுள்ள விஷயத்தை முகம் பளிங்குபோல் எடுத்துப் பிறர்க்குக் காட்டிவிடும் என்பது உண்மையல்லவா? இது பற்றியல்லவா உலக விஷயத்தை உள்ளபடி யனுபவித்துணர்ந்த உத்தமராகிய திருவள்ளுவ நாயனார்,

'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.'

என்று கூறியிருக்கின்றூர்? அவ்வுண்மைப் புலவர் உரையை மறுக்க எவராலியலும்?

குணசீலர் இவ்வாறு ஒன்றன்மேல் ஒன்றுகத் தக்க ஆதாரங்களுடன் பல கேள்விகளைக் கேட்கப் போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்கள் ஒன்றுங்கூறுமல் மௌனமுற்றிருந்தார். குணசீலர் மேஜையினருகிற் சென்று அதன் மீதிருந்த காகிதங்களை யெல்லாம் புரட்டிப்பார்த்தார். பிறகு அவ்வறையிலுள்ள ஒவ்வொரு பொருளின் மீதும் அவர் கண் பார்வை சென்றது. அவர் ஒவ்வொரு பொரு

ளையும் கூர்ந்து கவனித்துக்கொண்டே அவ்வறையில் அங்கு மிங்கும் உலவினர்.

திடீரென்று அவ்வறையின் இடையில் மாட்டித் தொங்கவிடப்பட் டிருந்த ஒரு பித்தளை விளக்கு, அவர் கண் பார்வையைக் கவர்ந்தது. அவ்விளக்கு உயரமான வர்களின் தலையைத் தொடக்கூடிய உயரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. குணசீலர் அதனருகிற் சென்று பார்த்தார். அதன் கொடிவேலையில் பெண்பிள்ளையினுடையது என்று கருதத்தகுந்ததும், சுருண்டு நீண்டதும், பளபளப் புள்ளதுமான தலைமயிர் தொங்குவதைக்கண்டார். அவர் உடனே மற்றவர்களுக்குத் தெரியாதபடி அதை யெடுத்துத் தம் விரலில் நன்றாகச் சுற்றிச் சுருணையாகச்செய்து அதற்கு முன் கண்டெடுத்த மஞ்சளரிசி மல்லிகை யிதழ்களுடன் தம் சட்டைப் பையில் வைத்துக் கொண்டார்.

இதற்கிடையில் மற்றவர்கள் மோகனசுந்தரர் தேகத்தை வேறோர் அறைக்கு எடுத்துச்சென்றார்கள். அவர்கள் வெளியிற் சென்றதும் குணசீலர் தம் காலடிச் சத்தம் அவர்களுக்குக் கேளாதபடி அடிமேல் அடிவைத்து அவ்வறையின் கதவினருகிற் சென்று, ஓசையெழுப்பாமல், அக்கதவைச் சாத்தி, உட்புறம் தாழிட்டுவிட்டு, மோகனசுந்தரர் உடல் இருந்த இடத்திற்குப் பின்புறத்தில் பெரிய அழகிய மேஜைகளின் மேல் பல அருமையான புத்தகங்களைத் தாங்கி நின்ற அலமாரிகளிடத்திற்குச் சென்று, அம்மேஜைகளின் அறைகளை ஒவ்வொன்றாகத்திறந்து, அவைகளுள் ஒன்றில் தாம் எதையோ வைத்து மறந்து விட்டவர்போல் தேடிக்கொண்டிருந்தார். மோகனசுந்தரருக்கு எவரேனும் பகைவரிருக்கும் பட்சத்தில்—அப்பகைவர்களுக்காக அவர் பயந்திருந்திருக்கும் பட்சத்தில்—அவர் தமக்கு எப்பொழுதாவது

தீங்குநேரிடக்கூடும் என்பதை உணர்ந்து, அப்பொழுது தம்மைத்தாமே காப்பாற்றிக் கொள்ளக் கருதி, ஏதாயினும் ஒரு கருவியை வைத்திருந்திருக்க வேண்டுமென்பது ஆழ்ந்து பார்ப்பவர்க்குப் புலப்படலாம். தவிர, சென்னையில் பல பிரபுகள், கள்வர் முதலியவர்களிடமிருந்து தம்மைப் பாது காத்துக்கொள்ளக் கருதிக் கவர்ன்மெண்டாரிடம் உத்தரவு பெற்றுத் தம் வீடுகளில் கைத்துப்பாக்கி வாங்கி வைத்துக் கொள்ளுவது வழக்கம். இவ்வுண்மையை உணர்ந்த குண சீலர் பெரிய பிரபுவின் புதல்வராகிய மோகனசுந்தரர் தம் மிடத்தில் ஒரு கருவியை வைத்திராமலிரார் என்று கருதி யோ வேறெதனாலோ மேஜையின் அறைகளை ஆராய்ந்து கொண்டிருந்தார். அவர் கருதியபடியே ஓர் அறையில் சிறிய கைத்துப்பாக்கியொன்று இருக்கக் கண்டு அதிசயித்து அதை வெளியிலெடுத்தார்; தம் மூக்கினிடத்தில் அத்துப்பாக்கியின் வாய்ப்புறத்தை வைத்து முகர்ந்து பார்த்தார். உடனே அவர் முகம் மலர்ந்தது. அவரதைக் கவனித்துக் கொண் டிருந்தபோது யாரோ அவ்வறையின் கதவண்டை வருவதாக அறிந்து அதைத் தம் சட்டையின் மற்றொரு உட்பையில் வைத்துக்கொண்டு சென்று கதவைத் திறந்தார். உடனே போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை அவ்வறைக் குள் நுழைந்து, 'குணசீலரே, இவ்வறையில் பார்க்க வேண்டிய விஷயங்களை யெல்லாம் பார்த்து விட்டீர்களோ?' என்று கேட்டார்.

குணசீலர் :—ஆ! ஆ!! முடிந்து விட்டது. இப்பொழுது நான் இவ்வீட்டிலுள்ள மரகதவல்லியம்மாள் அவர்களை யும் மற்றுஞ் சிலரையும் பார்க்கவேண்டும்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் :—வேறு விஷயம் ஏதாயினும் புதுமையாகக் கண்டு பிடித்தீர்களா?

குணசீலர் :—இல்லை...இல்லை........புதுமையாக ஒன்றையும் கண்டு பிடிக்கவில்லை. களவைப்பற்றிக் கவனித்தீர்களா? வேலையாட்களில் யாரையேனும் அதைப்பற்றி விசாரித்தீர்களா?

போலீஸ் இன்ஸ்பெக்டர் :—ஆம்! குணசீலரே, இவ்விஷயம் நமக்குள்ளேயே இருக்கட்டும். நான் ஒரு விஷயத்தை அறிந்து கொண்டேன். மோகனசுந்தரர் குணங்களைப் பற்றிக் கேள்விப் படப்போனால் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. நான் அறிந்தவரையில் அவர் சிறிது முன்கோப முடையவரென்றும், ஒரு சிறு குற்றத்தையும் பொறுத்துக் கொள்ளாதவரென்றும் நான் கருதுகிறேன். அவர் தம்முடைய மனைவியையும் மற்றும் இவ்வீட்டிலுள்ளவர்களையும் வெகு இழிவான நிலையில் நடத்தி வந்தார் என்று தெரிகிறது. ஒரு மாதத்திற்கு முன் அவர் தம்முடைய வேலைக்காரனான சுந்தரன் என்பவனை இவ்வீட்டைவிட்டுக் கடிந்து துரத்தி விட்டாராம். அவ்வேலையாள் போகும்பொழுது ஏதேதோ முணுமுணுத்துக்கொண்டு சென்றானாம். சுந்தரன் இவ்வீட்டு வேலைக்காரிகளில் ஒருத்தியாகிய கமலம் என்பவளுடன் பெருஞ் சிநேகம் பாராட்டி வந்தானாம். கமலம் என்னும் அவ்வேலைக்காரியே நேற்று இரவு சுந்தரனை ஒருவருக்கும் தெரியாமல் உள்ளேவிட்டிருக்கவேண்டும். சுந்தரன் என்பவனே தன் எஜமானருடைய பொருள்களைக் களவாட நினைத்து, முன் யோசனையில்லாமல் அவரைக் கொலை செய்திருக்க வேண்டும். இதுதான் உண்மையென்று நான் நினைக்கிறேன். இன்று காலையில் சுந்தரன் செய்த கொடிய செய்கையைக் கண்ட கமலம் பயமடைந்து, அவன் இங்கு வந்திருந்ததை ஒரு

வரிடமும் சொல்லாமல் மறைத்திருக்க வேண்டும். இதுவே என்னுடைய கருத்து. நீங்கள் இப்பொழுது எங்குச் செல்லுகிறீர்கள் ?

போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை கூறிய விஷயங்களைக்கேட்ட குணசீலர், பதிலொன்றுங் கூருமல் சிறிது நேரம் மௌனமாயிருந்தார். பிறகு இன்ஸ்பெக்டர் கடைசி கேள்விக்குப் பதிலாக, 'நான் இப்பொழுது மரகத வல்லியம்மாளைக் கண்டு அவருடன் சில விஷயங்களைப் பற்றி விசாரிக்கப் போகிறேன்,' என்று கூறி அவ்வறையை விட்டு வெளியே சென்ருர்.

மரகதவல்லியம்மாள் அவ்வறைக்கு எதிரிலுள்ள ஓர் அறையில் தனியே உட்கார்ந்து, எதைப்பற்றியோ யோசித்துக்கொண் டிருந்தாள். அவள், குணசீலர் வரும் காலடிச் சத்தங் கேட்டுத் தலை நிமிர்ந்து, 'ஐயா, தாங்கள் என் மகனைக் கொன்ற கள்வனைப் பற்றி ஏதாகிலும் புலம் கண்டு பிடித்தீர்களா ?' என்று கேட்டாள்.

குணசீலர் :—'அம்மா, திருடன் சாதாரணமானவனல்ல என்பது மாத்திரம் தெரிகிறது. உம்முடைய புத்திரருடைய மரணம் பல விநோதங்களைத் தன்னுள் அடக்கிக்கொண் டிருக்கிறது. அதற்காக நீங்கள் கவலைப் படவேண்டியதில்லை. உண்மை எப்படியாகிலும் வெளிப் படாமற் போகாது. ஆனல் நான் முன்னமே உம்முடைய சிறிய புத்திரர் அம்பலவாணரிடம் கூறியபடி இவ்வழக்கை நான் ஏற்றுக் கொள்ளுவதற்குமுன் உங்களுடன் ஒரு விதி ஏற்படுத்திக்கொள்ள................' என்று கூறி முடிப்பதற்குள், மரகதவல்லியம்மாள் அவரைப் பார்த்து, 'ஐயா, தாங்கள் அதைப்பற்றிச்

சிந்திக்க வேண்டியதில்லை. தங்களுக்குச் சேரவேண்டிய தொகைதானே?' என்று கேட்டாள்.

குணசீலர் புன்னகை புரிந்து, 'அம்மா, எனக்குச் சேர வேண்டிய பணத்தொகைக்கும் நான் இப்பொழுது கூறும் விஷயத்திற்கும் ஒருவித சம்பந்தமுமில்லை. அதைப்பற்றிப் பிறகு யோசித்துக் கொள்ளுவோம். நான் விரும்புவது, நீங்கள் என்மீது முழு நம்பிக்கை வைக்கவேண்டுமென்பதே. நான் உம்மைக் கேட்கும் கேள்விகளுக்கு நீங்கள் விஷயத்தை மறைக்காமலும், குறைக்காமலும், பெருக்காமலும் பதில் சொல்லவேண்டும். நான் உங்களுடைய குடும்ப சரித்திரத்தைப்பற்றி முற்றுந் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். அதை யெனக்குக் கூறுவதில் நீங்கள் எப்படிப்பட்ட விஷயத்தையும் ஒளித்தல் கூடாது,' என்றார்.

மரகதவல்லியம்மாள்:—ஐயா, நீங்கள் விரும்புகிறபடியே நான் குடும்ப விஷயத்தைச் சொல்லுகிறேன். ஆனால் குடும்ப விஷயத்திற்கும் இவ்வழக்குக்கும் என்ன சம்பந்தம்?

குணசீலர்:—அம்மா, அதைப்பற்றி முடிவு கட்டுவது என்னுடைய வேலை. ஆகையால் சம்பந்த மிருக்கிறதோ, இல்லையோ, அதைப்பற்றி நீங்கள் கவலை கொள்ள வேண்டியதில்லை. தயவு செய்து நான் கேட்கும் கேள்விகளுக்கு மாத்திரம் பதிற் சொல்லுங்கள். உம்முடைய புத்திரர் மோகனசுந்தரருக்குத் திருமணம் நடந்து எவ்வளவு காலம் ஆகின்றது?

மரகதவல்லியம்மாள்:—மூன்று வருஷம் ஆயிற்று.

குணசீலர்:—அவர் மனைவியார் எந்தவூர்ப்பெண்? அவர் பெயரென்ன?

மரகதவல்லியம்மாள் :—“பட்டினத்துப் பெண்தான்; அதிலென்ன குறைவு? பெயர் மதனசுந்தரி என்பது. பெயரிலும், ஆடம்பரத்திலும், பட்டினத்துப் பெண்களைப் போல வேறு எங்கு அகப்படுவார்கள்? பட்டினத்துப் பெண்களின் நாகரிகமே நாகரிகம்! ஹார்மோனியம் வாசிப்பதும், தெரிந்ததும் தெரியாததுமாக நான்காம் வகுப்பு வரையில் கிறிஸ்தவ பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் கல்வியுமே அவர்களுடைய ஞானத்திற்குக் கருவிகள். அந்தச் சங்கீத ஞானத்தாலும், இந்தப் பெருங் கல்வியாலும் அப்பெண்கள் புருஷர்களை மதிப்பதேயில்லை. இந்தக் கோலத்தில் கலியாண சமயத்தில் பெண்ணுக்குரியவர்கள் செய்யும் பிகுவோ கொஞ்ச நஞ்சமல்ல. இந்திராணியையும், அகலிகையையும், அருந்ததியையும் கூட அப்பெண்ணுக்கு ஒப்பாகச் சொல்லப் பெற்றோர்களுக்கு மனம் வாராது. இன்னும் அவர்களைக்காட்டிலும் மேலானவர்களிருக்கிறார்களோ என்று அவர்கள் தம் அறிவுக்கெட்டும் வரையில் தேடிப் பார்த்துக் கடைசியில்,....‘உம்’.... என்று ஒரு பெருமூச்சுவிட்டு, ‘இந்த மகாலட்சுமியை மணக்க எந்தப் புண்ணியவான் கொடுத்து வைத்திருக்கிறானோ? ‘பெண் வாய்ப்பது புண்ணியவானுக்கு,’ என்னும் முதுமொழி பொய்யாகுமா?’ என்று தம்முடைய பெண்ணின் பெருமையைத் தாமே பலமுறை போற்றிக் கூறுவார்கள். இவ்வளவு பெருமையும் எங்குக் காணப்படுகிறதோ அங்கிருந்து பெண்கொள்பவர்களைப் பேய் கொள்பவர்கள் என்றேசொல்லலாம். கலியாணம் முடிந்து மூன்று நாள் வரையில் பெண் முத்துப்போல் இருப்பாள். நான்காம் நாள் பிறந்தால் நாசமும் பிறக்

கும். நானும் என் புத்திரனுக்குத் தேடித் தேடிப் பட்டினத்தில் தான் திருமணம் முடித்தேன்," என்று கூறிக்கொண்டே விம்மி விம்மி யழத் தொடங்கினாள். அவள் கண்களிலிருந்து நீர், தாரை தாரையாய் ஆறு போல் பெருகியது. அவள் அவ்வாறு அழுவதைக் கண்ட குணசீலர், அவளைப் பலவாறு தேற்றிப் பிறகு, திருமணம் முடிந்ததிலிருந்து உம்முடைய புத்திரரும் மருமகளாரும் இங்கேயேதான் வசித்துவந்தார்களோ?' என்று கேட்டார்.

மரகதவல்லியம்மாள்:—ஆம்! ஆம்!! இந்த மாளிகையில் தான் வசித்துவந்தார்கள். என்னுடைய கணவர் இம் மாளிகையைக் கட்டி இதில் இவர்களைக்குடியேற்றினர்.

குணசீலர்:—அம்மா, உங்களுடைய புத்திரர் குடும்பம் அதுமுதல் சுகமாக நடைபெற்று வந்தது என்று நீங் கள் கருதுகிறீர்களா?

மரகதவல்லியம்மாள்:—ஐயோ, அதையேன் கேட்கிறீர்கள்? நான் என் புத்திரனைச் சார்ந்து பேசுகிறேன் என்று கருதவேண்டா. அவனுக்கு ஒன்றுந் தெரியாதுபாவம்! குடும்பத்துன்பத்துக்குக் காரணம் அவன் மனைவிதான். பட்டினத்துப் பெண்கள்தாம் டாம்பீகத்திற் சிறந்த வர்களாகக் காணப் படுகிறார்களே! ஆ! நான் என் புத்திரனுக்கு இவளைக் கொண்டுவந்து மணஞ்செய்யா மல் வேறு எங்கேனும் தாழ்ந்த குடியிலாகிலும் நல்ல குணவதியான ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து மணம் முடித்திருப்பேனானால் என் மகனுடைய வாழ்க் கை எவ்வளவு இன்பமாகக்கழியும்! பாவியைக்கட்டி னேன், மகன் பறந்தான். சரி, ஐயா, இந்த விஷய மெல்லாம் இவ்வழக்குக்கு என்ன உதவியைச் செய்யும்!

மரகதவல்லியம்மாள் கூறிய கடைசி வாக்கியத்தைக் கவனியாதவரைப் போல் குணசீலர், நீங்கள் இப்படிக் கூறுவதிலிருந்து உம்முடைய மருமகளார் மிகுந்த அழகியார் என்பது தோற்றுகிறது!' என்று கூறினர்.

மரகதவல்லியம்மாள் :—அழகிலென்ன குறைவு? சித்திரப் பாவைபோல்தா னிருக்கிருள். அழகுக்கும் குடும்பத்தை நடத்தும் சீருக்கும் என்ன ஒற்றுமை இருக்கிறது?

குணசீலர் :—ஆகையினுல் உங்களுக்கு இக்கலியாணத்தில் சிறிதும் விருப்பமில்லை போலும்?

மரகதவல்லியம்மாள் :—என் மனமார நான் முதலிலிருந்தே இதைக்கொஞ்சமும் விரும்பவில்லை. இது கடைசியில் எவ்வாறு முடிந்தது என்பதுதான் உங்களுக்கே தெரியும்.

குணசீலர் :—ஆனுல் இந்தத்திருமணத்திற்கும் உமது புத்திருடைய மரணத்திற்கும் எவ்விதத்திலும் சம்பந்தமில்லை என்பதை நீங்கள் ஒத்துக்கொள்ளுவீர்களா?

சிறிதுநேரம் வரையில் மரகதவல்லியம்மாள் ஒன்றும் கூருமலிருந்தாள். பிறகு பெருமூச்சு விட்டுக்கொண்டே 'ஐயா, நான் அதை ஒத்துக் கொள்ளவில்லை. நீங்கள் இப்படிக்கேட்ட கேள்விக்கு இன்ன பதில் சொல்லுவது என்று எனக்குத் தோன்றவில்லை,' என்ருள்.

குணசீலர் :—அம்மா, நான் இக்குடும்பத்திலுள்ளவர்களுக்குள் ஒருவர்க்கொருவர் கொண்டுள்ள சம்பந்தத்தை ஒருவாறு அறிந்துகொள்ள வேண்டியே உங்களை இப்படிக் கேட்கிறேன். நீங்கள் கூறியதிலிருந்து உமது புத்திருக்கும் அவர் மனைவியாருக்கும் இடையில்

துன்பமே குடிகொண்டிருந்ததாகத் தெரிகிறது. காம கோட்டியம்மாள் அவருடைய தங்கையாருடன் இங்கு வசித்து வருவது அதற்குக் காரணமாக இருக்கலாம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

மரகதவல்லியம்மாள்:—அநேகமாக நான் அப்படித்தான் எண்ணுகிறேன். இன்று காலையில் கொலை நடந்த அவ்வறைக்குள் அவள் செய்கையைக் கவனித்தீர்களோ இல்லையோ? அவள் என் புத்திரனுக்குக் கலியாணம் ஆனவுடனே தன் தங்கையுடன் இங்கு வந்துவிட்டாள். தன் தங்கை அவள் கணவனுடன் முரணிக்கொண்டிருக்கும்போதெல்லாம் இவள் அவளுக்கு உதவியாக இருந்து அவளைத் தூண்டிவிட்டுப் போரையுண்டாக்கி வேடிக்கை பார்ப்பது வழக்கம். என் புத்திரனால் அவ்வளை வெளியிலனுப்பிவிட இயலவில்லை. தங்கையின் பலம் இருக்கும்வரையில் அவள் எப்படிப்போவாள்? அவளுக்கு இங்கு உணவும் உடையும் வேடிக்கையும் சந்தோஷமும் குறைவின்றி யிருக்கையில் போக மனம் வருமா? அப்படிப் போனாலும் அவளை யார் அழைத்து இவ்வளவு பணிக்கைகள் செய்யப் போகிறார்கள்?

குணசீலர்:—அம்மா, இது கிடக்கட்டும். சிறிது நேரத்திற்குமுன் காமகோட்டியம்மாள் தம் தங்கையாருக்கு இப்பொழுது இருக்கும் தேக நிலைமையில் மேன்மேலும் வருத்தத்தை யுண்டுபண்ணுதல் கூடாது என்று சொன்னாரே; அதற்குக் காரணமென்ன?

மரகதவல்லியம்மாள்:—அவள் தங்கை மதனசுந்தரி இப்பொழுது கருப்பமாக இருக்கிறாள்.

இதைக் கேட்டவுடனே குணசீலருக்குப் பற்பல எண்ணங்கள் தோன்றின. அவர் நெடுநேரம் ஒன்றுங் கூறுமல் இருந்தார். அவர் முன்பு சந்தேகித்த பல விஷயங்கள், இப்பொழுது அவருக்கு விளக்கமாயின.

பிறகு அவர் மரகதவல்லியம்மாளை நோக்கி, 'அம்மா, நான் சில நாட்களுக்குமுன் பத்திரிகையில் ஒரு விஷயம் கண்ணுற்றேன். அதில் உங்களுடைய சிறிய குமாரர் அம்பலவாணர் பெயர் குறிப்பிடப்பட்டிருந்தது. அவர் ஏதோ உயில் பத்திரமொன்றை ரத்துசெய்ய முயன்றதாக அறிந்தேன். ஆனுல் அதைப்பற்றிய முழுவிவரமும் எனக்கு இப்பொழுது ஞாபகத்தில் இல்லை. இருந்தாலும் என் குமாரஸ்தாவைக் கேட்டால் விஷயம் விளங்கும். பத்திரிகைகளைப் பார்த்து அறியும் விஷயங்கள் அவ்வளவும் உண்மையாக இருக்கும் என்றும் கொள்ளுவதற்கில்லை. ஆகையால் அதைத் தங்களிடமிருந்து கேட்டறியவேண்டும் என்பது என் விருப்பம். தாங்கள் தயைகூர்ந்து அதைப்பற்றிய விவரங்களை விளக்கமாகச்சொல்ல முடியுமா ?' என்று கேட்டார்.

குணசீலர் கூறிய மொழிகளைக்கேட்ட மரகதவல்லியம்மாள், நெடுநேரம் மௌனமாக இருந்தாள். பிறகு பெருமூச்சுவிட்டு அவரைப்பார்த்து, 'ஐயா, நீங்கள் என் புத்திரன் கொலை செய்யப்பட்டதற்குரிய விஷயங்களை ஆராயாமல் இத்தகைய கேள்விகளைக் கேட்டுக்கொண்டிருப்பதால் காலம் கழிகிறதுமன்றிக் கொலையாளி தப்பித்துக்கொள்ளவும் ஏதுவுண்டு. இக்கொலை வழக்குக்கும் நீங்கள் கேட்கும் கேள்விகளுக்கும் எவ்விதத்திலாவது சம்பந்தமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. காலஞ்சென்ற எனது கணவர் எழுதிவைத்த உயில் பத்திரத்தைப்பற்றிய (Will) கேள்வி இவ்வழக்கில் அநாவசியம் என்றே எண்ணுகிறேன்,' என்று அவர் கேட்

கும் கேள்விகளுக்குப் பதில் கூற விருப்பமற்றவளைப்போல் கூறினள்.

'அப்படியானல் நீங்கள் அதைப்பற்றி யொன்றுங் கூற மாட்டீர்கள் என்று எண்ணுகிறேன். நான் இவ்வீட்டிலுள்ள டெலிபோன் (Telephone) மூலமாக என் குமாஸ்தாவை யழைத்து அவ்விஷயத்தைத் தெரிந்துகொள்ளலாமோ?' என்று கேட்டார் குணசீலர்.

மரகதவல்லியம்மாள் மனங்கசிந்து, 'ஐயா, அதைக் கட்டாயம் கூறித்தான் ஆகவேண்டும் என்று நீங்கள் கூறினல் நான் அவ்வாறேகூறத் தடையில்லை. அவ்விஷயம் எல்லோரும் அறிந்ததே. அதைப்பற்றிக் கூறிக்கொண்டிருப்பது காலதாமதமேயாகும். ஆனல் உங்கள் விருப்பப்படி நான் சொல்லுகிறேன். என்னுடைய கணவர் உயிரோடு இருந்த பொழுது எனது இருபுத்திரர்களாகிய மோகனசுந்தரனையும், அம்பலவாணனையும் படிப்பிக்கக்கருதிச் சென்னைக்கு அனுப்பிவைத்தார். அப்பொழுது நாங்கள் தஞ்சாவூரிலிருந்தோம். அவர்கள் இருவரும் சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் சேர்ந்து உயர்தரக்கல்வி கற்றுவந்தார்கள். அப்பொழுது அவர்கள் பல துர்நடவடிக்கையுள்ள பிள்ளைகளுடன் கூடித்திரிந்ததால் அவர்களுடைய நல்லொழுக்கம் கெட்டது. இதைக்கண்ட எனது கணவர், அவர்கள் பி.ஏ. வரையில் கற்ற கல்வி போதுமென்று அவர்களைக் கல்லூரியிலிருந்து நிறுத்திவிட்டார். அதற்கு முன்பே எனது பெரிய புத்திரன் மோகனசுந்தரன், தன்னுடன் படித்துக்கொண்டிருந்த ஒருவன் வீட்டிற்கு அடிக்கடி சென்று வந்ததால் அவ்வீட்டிலிருந்த மதனசுந்தரியைக்கண்டு அவள் ஹார்மோனியம் வாசிக்குந்திறத்தினல் அவள்மீது காதலுற்று, அவளையே மணந்துகொள்ளப் பிரியப்பட்டான். அதை உணர்ந்து

அவன் தந்தையார், அவள் பெற்றோரிடஞ்சென்று அவளை மணம்பேசி அவனுக்குத் திருமணம் முடித்தார். என் கணவர் கள்ளமற்ற உள்ளத்தவராகையால் அவருக்கு வெளுத்ததெல்லாம் பாலாகவும், கறுத்ததெல்லாம் தண்ணீராகவும் தோன்றின. பின்பு சில நாட்களுக்கெல்லாம் மோகனசுந்தரன் பட்டினத்து வாசத்தையே விரும்பியதால் அவனுக்கு இந்த மாடிவீட்டைக் கட்டிக்கொடுத்தார். போகப்போகப் புத்திரர்கள் நடக்கை அவருக்குப் பிடிக்காமையால் தம் தேக நிலையைக் கருதித் தம்மிடமிருந்த செல்வத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிடக் கருதினர். அதனால் அவர் எனக்கு என் தாய் வீட்டார் சீதனமாகக் கொடுத்த நிலங்களையும் அவற்றுடன் தாமே தேடிய பொருள்களையும் சேர்த்து இரண்டு பகுதியாக்கி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பகுதியைக் கொடுத்தார். பிறகு அவரிடம் கைப்பொருளாக இருந்த ஐந்து லக்ஷம் ரூபாவையும் சென்னை நேஷனல் பாங்கியில் கட்டிவிட்டு அதற்கு ஓர் உயில் எழுதினர். அதாவது அப்பொருளைத் தம் புத்திரர்களில் ஒருவனும் எடுத்துக்கொள்ளக்கூடாதென்றும், அது மதனசுந்தரிக்குப் பிறக்கும் பிள்ளைகளின் கல்வி முதலியவற்றுக்காக உபயோகப்படுத்தப்பட வேண்டுமென்றும், அப்படி மதனசுந்தரிக்குப் பிள்ளைகள் பிறக்காவிட்டால் மேற்படி பாங்கியின் அதிகாரிகள் அந்தப் பொருளைத் தம்மிரு புத்திரர்களுக்கும் அதற்குண்டான வட்டியுடன் பங்கிட்டுக் கொடுத்துவிடலாமென்றும் அவ்வுயிலில் எழுதப்பட்டன. இதற்குத் தவணை பத்து வருடங்களே. என் சிறிய புத்திரன் அம்பலவாணனுக்கு ஏற்பட்ட பாகத்தையும் என் கணவர் அந்தப் பாங்கியிலேயே கட்டிவிட்டு, அவன் கலியாணமாகாத சிறுவனுதலால் அதில் வரும் வட்டியைமாத்திரம் அவனுக்குக் கொடு

த்து வரவேண்டுமென்றும் கலியாணமானபின் அவன் இஷ்டப்படி அப்பொருளை அவனுக்குக் கொடுத்துவிடலாமென்றும் பாங்கியின் அதிகாரிகளுக்குத் தெரிவித்திருந்தார். ஐயா, நான் சொல்லும் விஷயம் சரியாக இருக்கிறதா?' என்று கடைசியில் ஒரு கேள்வி கேட்டாள்.

குணசீலர் :—ஆ! ஆ!! முழுவதும் விளங்குகிறது; சொல்லுங்கள்.

மரகதவல்லியம்மாள் :—பாகம் பிரித்தது சரியாக இல்லை என்று என் சிறிய மகன் முணுமுணுத்தது வாஸ்தவமே. பிறகு அவன் தந்தையார் இறந்துவிட அவனுக்குப் பணக்கஷ்டம் அதிகமாயிற்று. பெரியவனோ ஏராளமாகச் செலவுசெய்துகொண்டு திரிந்தான். சில மாதங்களுக்குமுன் மதனசுந்தரி கருத்தரித்தாள். இதைக் கண்டு அவளுக்குப் பிள்ளை பிறந்தால் தனக்குச் சேர வேண்டிய பாதித்தொகை போய்விடுமென்று கருதி, அம்பலவாணன் தன் பாகமாகிய தொகையையும் தனக்கு என்று தன் தந்தையார் வைத்த சொத்தையும் தன்வசப்படுத்த வேண்டுமென்றும், அவ்வாறு செய்யத் தவறினால் தான் முறைப்படி வழக்காடி அதைப் பெற்றுக்கொள்ளப் போவதாகவும் கூறித் தன் தமயன்மீதும் நேஷனல் பாங்கியார்மீதும் வழக்குத் தொடுத்தான். அதனால் ஒரு கெடுதியும் உண்டாகவில்லையாயினும் என் சிறிய மகன் எடுத்த வழக்குத் தள்ளிவிடப்பட்டது. இவ்வளவுதான்.

குணசீலர் :—இதைப்பற்றி அதற்குமுன் தமயன் தம்பிகளுக்கிடையில் ஒருவித சச்சரவும் ஏற்படவில்லையோ?

மரகதவல்லியம்மாள் :—அதற்கென்ன? ஒவ்வொரு சமயம் சச்சரவு ஏற்படுவதுதான். எல்லாக் குடும்பங்களிலும்

பண விஷயத்தைப் பற்றிப் பங்காளிகளுக்குள் சச்சரவு நேரிடத்தான் நேரிடும். ஆனால் பிறகு அவர்கள் இருவரும் ஒருவாறு ஒத்துப்போய் விட்டார்கள். அதனால் தான் நானும் என் சிறிய குமாரனும் இங்கு வசித்து வருகிறோம்.

குணசீலர் :—ஓ! அப்படியா? அவ்விஷயத்தில் நீங்கள் உங்களுடைய சிறிய புத்திரரைச் சார்ந்துதா னிருக்கிறீர்களோ?

மரகதவல்லியம்மாள் :—ஐயா, நான் ஒருவரையும் சாருவதில்லை. அப்படிச் சாரவேண்டிய அவசியமு மெனக்கில்லை. அவர்கள் இருவரும் இப்பொழுது ஒற்றுமையாய் விட்டார்கள் என்பதைத் தெரிவிப்பதற்காகவே நான் அதைச் சொன்னேன்.

குணசீலர் :—இக்கொலையால் நீங்கள் இனி இவ்வீட்டை விட்டுப் போய்விட நேரிடுமோ?

மரகதவல்லியம்மாள் :—என் மருமகளும் அவள் தமக்கையும் இருக்கும் மாதிரியைக் கண்டும், என்னுடைய புத்திரனும் நானும் இங்குத் தங்க முடியுமா? உடனே புறப்பட்டு வேறிடத்திற்குப் போய் விடுவோம். என் மகன் ஒரு மணி நேரத்திற்கு முன்பே டெலிபோன் மூலமாக ஒருவருடன் பேசி, நுங்கம்பாக்கத்தில் ஒரு பங்களாவை வாடகைக்குக் கொடுக்கும்படி முடிவு செய்துவிட்டான். இன்னும் சில நாட்களில் தஞ்சையில் உள்ள என்னுடைய வீடு கட்டியாய் விடும். பிறகு நாங்கள் அங்கேயே போய்விடப் போகிறோம்.

குணசீலர் :—அம்மா, தங்கள் சிறிய குமாரர் இவ்வாறு செய்தது தங்களுக்குச் சம்மதந்தானா?

மரகதவல்லியம்மாள் :—ஐயா, தங்களுடைய கேள்விக்குப் பொருள் விளங்கவில்லை. என் சிறிய புத்திரன் என்ன, இன்னும் குழந்தையா? இனி அவன் இஷ்டப்படி செய்யலாமோ அல்லவோ? அதைப்பற்றி யெனக்கென்ன? அவன் எங்கு அழைக்கிறானோ அங்குப் போய் என் காலத்தைக் கழிக்க நான் சித்தமாயிருக்கிறேன்.

குணசீலர் :—உம்முடைய சிறிய புத்திரரைப் பற்றி நீர் இவ்வளவு பரிந்து பேசுவதில் ஏதோ காரணம் இருக்க வேண்டும் என நினைக்கிறேன்.

மரகதவல்லியம்மாள் :—நீங்கள் கேட்கும் கேள்விகள் ஒழுங்கற்றனவாகவும் அளவுகடந்தனவாகவும் காணப்படுகின்றன.

இச்சமயம் அவளுக்குக் கோபம் அதிகரித்தது. அவள் தன்னையே மறந்து பேசுபவள் போல் காணப்பட்டாள். அவள் உதடுகள் துடித்தன; தேகம் நடுங்கியது. ஆனால் குணசீலரோ, அதிக பொறுமையுடன் அவளை நோக்கி, 'அம்மா, நீங்கள் இவ்வளவு கோபங் கொள்ளுதல் கூடாது. நான் ஒவ்வொருதரமும் உம்முடைய சிறிய புத்திரரைப் பற்றிக் கேட்கும் போதெல்லாம் நீங்கள் கோபங் கொள்ளுவதற்குக் காரணம் விளங்கவில்லை,' என்று கூறினார்.

'ஐயா, நானா கோபமாகப் பேசுகிறேன்! எந்தத் தாயாகிலும் இப்படிப்பட்ட தருணத்தில்—தன்னுடைய மூத்தமகன் தன் எதிரில் இறந்துகிடக்கும் தருணத்தில்—அநியாயமாகக் கொல்லப்பட்டுக் கிடக்குந் தருணத்தில்—மன அமைதியுடன் ஒருவர்கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லிக்கொண் டிருப்பாளா? என்னுடைய சிறிய மகன் விஷயத்தை யெடுத்துப் பேசும் போ

தெல்லாம் நான் கோபங் கொள்ளுகிறேன் என்று நீர் நினைப்பது சரியன்று. அவ்வித எண்ணத்திற்கு நீர் ஏன் இடங் கொடுக்க வேண்டும்?' என்று கடுகடுத்துப் பதில் கூறினாள் மரகதவல்லியம்மாள்.

குணசீலர், அவள் கூறிய மொழிகளைக் கேட்டுக் கொண்டு பேசாமலிருந்தார். கடைசியில் அவள், 'இப்படிப்பட்ட விஷயத்தில் எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. இஃது எவ்வளவு அவலமானகாரியம்?' என்று கூறினாள். அவள் அவ்வாறு கூறியபோது பயங்கொண்டவள்போல் தோன்றினாள். பிறகு அவள், 'ஐயா, இவ்விஷயத்தைப் பற்றி என்னைக் கேட்க வேண்டிய கேள்விகள் இன்னும் இருக்கின்றனவோ? வீணில் காலம் கழிகிறது என்பதை நான் உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியதில்லை என்று எண்ணுகிறேன்,' என்றாள்.

உடனே குணசீலர், வேறு விஷயமாகக் கேள்விகேட்க ஆரம்பித்து, 'அம்மா, உங்களுக்குத் தெரிந்த வரையில் மோகனசுந்தரருக்கு யாராகிலும் பெரும்பகைவர்கள் இருக்கிறார்களா?' என்று கேட்டார்.

அவர் அவ்வாறு கேட்டதற்கு மரகத வல்லியம்மாள், 'இல்லை,' என்று கூறவாயெடுத்தாள். அதற்குள் யாரோ ஓர் அழகிய பெண் பெருங்குரலோடு அழுது கொண்டே வந்து அவள் மடிமீது விழுந்தாள். அப்பெண், மரகதவல்லியம்மாளை நோக்கி அழுதுகொண்டே, 'அத்தையம்மாள், நாங்கள் ஒரு துன்ப சமாசாரம் கேள்விப்பட்டோம். அஃது உண்மைதானா? ஐயோ, அஃது எப்படி உண்மையாக இருக்கக்கூடும்? அத்தான் மோகனசுந்தரர்.....................,' என்று கூறி மேலே ஏதோ கூற முயன்றாள்.

மரகதவல்லியம்மாள், அவள் வார்த்தையை இடை மறுத்து, 'அம்மா, கலாவதி, அழாதே. மோகனசுந்தரன் இறந்துவிட்டது உண்மைதான். இன்று காலையில் அவன் தன் வாசிப்பறையில் கொலை செய்யப்பட்டுக் கிடந்தான். அம்மா, எங்கள் மீது நீங்களெல்லாம் எவ்வளவு விருப்பம் வைத்திருக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். அமைதி யாக இரு. அவனைப் பெற்று வளர்த்துப் பெரும்பிள்ளை யாக்கிய நான் துன்பத்தைச் சகித்துக்கொண் டிருப்பது உனக்குத் தெரியவில்லையா? நான் இப்பொழுது துப்பறி வதில் வல்லவரான குணசீலரை வரவழைத்து இவ் வழக்கை ஆராயும்படி கேட்டுக்கொண்டேன். அவர், உண்மைக் குற்றவாளியைக் கண்டு பிடித்து விடுவார் என்பதிற் சந்தேகமில்லை,' என்று சொல்லிக் குணசீலரைப் பார்த்து, 'ஐயா, இப்பெண் எங்கள் குடும்பத்தின் பழைய நண்பராகிய நீதிபதி நீலகண்ட முதலியார் அவர்களுடைய புத்திரி,' என்று கூறினாள்.

கலாவதி, 'ஆ! அத்தான் இறந்தது உண்மைதானா? நான் அதை நம்பமாட்டேன். அஃது உண்மையென்று எனக்குத் தோன்றவில்லை. இறந்துவிட்டாரா? ஐயோ! நேற்று இரவுதான்..............,' என்று கூறித் திடீரென்று நிறுத்திவிட்டாள். மரகதவல்லியம்மாள், அவள் கையைப் பிடித்து அழுத்தினதே, அவள் அவ்வாறு செய்ததற்குக் காரணம் என்பதைக் குணசீலர் அறிந்துகொண்டார்.

அதற்குள் மரகதவல்லியம்மாள், அவரை நோக்கி, 'நேற்றுச் சாயந்திரம் நீதிபதி நீலகண்ட முதலியார் அவர்க ளும் அவருடைய புத்திரியும் இங்கு வந்திருந்தார்கள். அப் பொழுது மோகனசுந்தரன் ஆடிப் பாடிக்கொண்டு உல்லாச மாகவே இருந்தான். இளையவர்களுக்கு உண்மையை உணர

..............' என்று எதையோ கூறவந்தவள், 'மரகதவல்லி யம்மாள், நீங்கள் வருத்தப் படாதீர்கள். நானும் என் மகளும் உங்கள் துன்பத்தை ஆற்றக்கருதியே இங்கு வந்தோம்,' என்று கூறிய ஒரு பெரியவர் குரலைக் கேட்டு நிறுத்திவிட்டுத் தலை நிமிர்ந்து நோக்கினாள். கலாவதியின் தந்தையார் அவள் முன் நின்றார்.

உடனே அவள் தாழ்ந்த குரலோடு, 'அண்ணா, வாருங்கள்; உட்காருங்கள். மோகனசுந்தரன் கொலை செய்யப் பட்டான். கொலையாளியைக் கண்டு பிடிக்க வேண்டுமென்று இதோ உட்காந்திருக்கும் துப்பறியுஞ் சமர்த்தர் குணசீலர் அவர்களை யழைத்தேன். இவரைப்பற்றி உங்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கலாம் என எண்ணுகிறேன்,' என்றாள்.

நீதிபதி நீலகண்ட முதலியார் அவர்கள், உடனே குணசீலருக்குக் கைலாகு கொடுத்து, 'குணசீலரே, என்னுடைய பழைய நண்பருடைய மனைவியார் உம்மை அழைத்தது அவர்களுடைய நற்காலத்திற்கு அறிகுறி யென்றே சொல்லலாம். நீங்கள் சில மாதங்களுக்கு முன் திவான் பகதூர் சங்கா ராவ் வீட்டில் நடந்த கொலை வழக்கிலும், திருநெல்வேலியில் பலர் நடமாடும் பாதையில் ஒருவன் கொலை செய்யப்பட்டுக் கிடந்த வழக்கிலும் தலையிட்டுச் செய்த துப்பறியும் தீரச் செயல்களைப் பற்றி நான் கேள்விப் பட்டிருக்கிறேன். நீர் இவ்வழக்கில் ஆராய்ச்சி செய்ய ஒப்புக்கொண்டது எனக்குப் பேரானந்தத்தை உண்டுபண்ணுகிறது. நீங்கள் அந்த அம்மாளைக் கேள்வி கேட்டுக் கொண்டிருக்கும் போது இடையில் தடுத்து விட்டேன். நானும் என் புத்திரியும் வெளிச்செல்கிறோம். அப்புறம் பேசவேண்டிய விஷயங்களைப் பேசிக் கொள்வோம்,' என்று கூறினார்.

குணசீலர் :—நீதிபதியவர்களே, நான் அந்த அம்மாளைக் கேட்கவேண்டிய விஷயங்களையெல்லாம் கேட்டுவிட்டேன். உங்களைச் சில கேள்விகள் கேட்க விரும்புகிறேன். தயை புரிந்து அவற்றிற்குப் பதிலளிக்க வேண்டும். நீர் இக்குடும்பத்தின் பழைய நண்பர் என்பதை மரகதவல்லியம்மாள் அவர்கள் சற்று முன்பாகத்தான் கூறினார்கள். நீங்கள் நேற்றிரவு இங்கு வந்திருந்ததாகத் தெரிகிறது.

நீதிபதி :—குணசீலரே, நேற்று நானும் என் மகளும் இவ்விடம் வந்திருந்தோம்.

குணசீலர் :—அப்பொழுது இங்கு வேறு விருந்தினர்கள் இருந்தார்களா ?

அதற்குள் மரகதவல்லியம்மாள், அவர்கள் சம்பாஷணையின் இடையில் நுழைந்து, ‘இல்லை... இல்லை. நீதிபதியவர்களும் அவர் மகளும் இம்மாளிகையிலுள்ள நாங்களும் தவிர வேறொருவரும் இல்லை,’ என்று கூறினாள்.

குணசீலர் :—நீதிபதியவர்களே, தாங்கள் நேற்று மாலை இங்கிருந்தபொழுது மோகனசுந்தரரின் தோற்றத்தில் ஏதாகிலும் மாறுதலிருக்கக் கண்டீர்களா ?

நீதிபதி :—‘அப்படியொன்றும் எனக்குத் தோன்றவில்லையே!’ என்று ஆச்சரியத்துடன் கூறித் தம் மகளைப் பார்த்து, ‘அம்மா, கலாவதி, நீ அப்படிப்பட்ட மாறுதல் ஏதாகிலும் கண்டாயா ?’ என்று கேட்டார்.

‘இல்லை அப்பா! அப்படிப்பட்ட மாறுதல் அவர் முகத்தில் தோன்றுவதற்குக் காரணம் ஒன்றுமில்லையே!’ என்று கலாவதியும் ஆச்சரியத்தோடே தன் தந்தையார் கேட்ட கேள்விக்குப் பதில் கூறினாள்.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண் டிருக்கையில் அம்பலவாணன் அங்கு வந்து குணசீலரைப் போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்கள் காண விரும்புவதாகக் கூறினான்.

குணசீலர், அவனைப் பார்த்து, அம்பலவாணரே, தயை செய்து அவரை இங்கு வரும்படி கூறியழைத்துக் கொண்டு நீங்களும் வாருங்கள்,' என்றார். உடனே அம்பலவாணன் வெளியிற் சென்று, கமிஷனரை அழைத்துக் கொண்டு உள்ளே வந்தான்.

குணசீலர், கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்களைப் பார்த்து, 'நாயடு அவர்களே, மோகனசுந்தரர் மார்பில் புகுந்திருந்த துப்பாக்கிக் குண்டை யெடுத்துச் சோதித்துப் பார்த்தீர்களா? அதனால் உங்களுக்கு என்ன தோன்றுகிறது? இப்பொழுது நீதிபதியவர்கள் முன்னிலையிலும், மற்றவர்களுக் கெதிரிலும் நான் அதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்,' என்றார்.

கருணாநிதிநாயடு:—குணசீலரே, அந்தக் குண்டைச் சோதித்துப் பார்த்தேன். அது சிறிய கைத்துப்பாக்கியிலிருந்து வெளிக் கிளம்பியதென்பது நன்றாகத் தெரிகிறது.

குணசீலர்!—'கைத்துப்பாக்கியி லிருந்தா! கைத்துப்பாக்கியி லிருந்தா!' என்று ஆச்சரியத்துடன் கேட்டு அம்பலவாணனைப் பார்த்து, 'அம்பலவாணரே, உம்முடைய தமயனார் அத்தகைய கைத்துப்பாக்கி யொன்றை வைத்திருந்தாரா?' என்று கேட்டார்.

இதற்குள் மரகதவல்லியம்மாள், 'இல்லை....இல்லை, அப்படிப்பட்ட துப்பாக்கியை அவன் ஏன் வைத்திருந்திருக்கப் போகிறான்? நீங்கள் ஏன் இப்படியெல்லாம் நினைக்கிறீர்கள்?' என்று வெறுப்போடு கேட்டாள்.

குணசீலர் :—அம்பலவாணரே, நீர் என் கேள்விக்குப் பதில் சொல்லும். பணக்காரர்கள் தற்காப்புக்காக அப்படிப் பட்ட கருவியை வைத்திருப்பது வழக்கந்தான். ஆகை யால் நீர் எப்பொழுதாயினும் உமது தமயனாரிடம் கைத்துப்பாக்கி யிருப்பதைக் கண்டதுண்டா ?

அம்பலவாணன் :—ஆம்! எனக்கு இப்பொழுதுதான் ஞாப கம் வருகிறது. அவர் எங்கேயோ அத்தகைய துப் பாக்கியொன்றை வைத்திருந்ததாக எனக்குத் தெரிகி றது.

அம்பலவாணன் அவ்வாறு கூறியதைக் கேட்ட அவனு டைய தாயாரின் முகம் சுளித்தது. ஆனால் அதைக் குண சீலரைத் தவிர வேறொருவரும் கவனிக்கவில்லை.

குணசீலர் :—அஃது எப்படியிருக்கும் ?

அம்பலவாணன் :—அஃது எனக்குத் தெரியாது. நான் ஏன் அதை அவ்வளவு கூர்ந்து கவனிக்கவேண்டும்?

குணசீலர் :—உம்முடைய தமயனார் அதை உபயோகப் படுத்தியபோது நீர் பார்த்ததுண்டா?

அம்பலவாணன் :—அதுவும் எனக்குத் தெரியாது.

குணசீலர் :—வேறு யாராகிலும் அதை உபயோகிக்கக் கண்டதுண்டா ?

அம்பலவாணன் :—நான் வேறு ஒருவரும் அதை உபயோ கிக்கக் காணவில்லை. என் தமயனார் அதை வெகு காலமாக வைத்திருந்தார். ஆனால் எதற்காக வைத் திருந்தார் என்பதையும் நான் அறியேன். ஒரு வேளை நீங்கள் சொல்லுகிறபடி தற்காப்புக்காக வைத்திருந் திருக்கலாம் என்று எண்ணுகிறேன்.

குணசீலர் :—அவர் அதை எங்கே வைத்திருந்தார் தெரியுமா?

அம்பலவாணன் :—எனக்கு ஞாபகமில்லை. அதை நான் பார்த்துப் பல மாதங்களாயின.

குணசீலர் :—கடைசி முறையாகப் பார்த்தபொழுது அஃது எங்கிருந்தது?

அம்பலவாணன் சிறிது நேரம் யோசித்து, 'அஃது என் தமயனுருடைய வாசிப்பறையில் தான் இருந்தது,' என்று கூறினுன்.

குணசீலர் :—அம்பவாணரே, அப்படியானல் நீர் தயவு செய்து சென்று அதை யெடுத்துக்கொண்டு வர முடியுமா ?

அம்பலவாணன் முகத்தில் வெயர்வை நீர் கொட்டியது. அவன், 'ஐயா, குணசீலரே, அஃது இப்பொழுது எங்கிருக்கிறது என்பது எனக்குத் தெரியாது என்று முன்னமே சொல்லவில்லையா ?' என்று உரத்துக் கூறினுன்.

குணசீலர் :—' தயவு செய்து அவ்வறையிற் சென்று தேடிப் பாருங்கள்,' என்று கூற, அம்பலவாணன் தாமதிப்பதைக் கண்டு, 'மோகனசுந்தரர் பிணத்தை அப்புறப் படுத்தி விட்டோம். நீர் தாராளமாக அறைக்குட் செல்லலாம்,' என்ருர்.

அம்பலவாணன் அவ்வறையை விட்டு மோகனசுந்தரர் கொலை செய்யப் பட்ட அறைக்குச் சென்ருன். அங்கிருந்த மற்றவர்கள் அதிக ஆச்சரியத்தோடு அவனை எதிர்ப்பார்த்திருந்தார்கள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அம்பலவாணன், 'ஆ! அது போய் விட்டது; போய் விட்டது. யாரோ அதை யெடுத்துக்கொண்டு போய் விட்டார்கள்! என்தமயனுர்

எப்போதும் அதை வைக்கும் அறையிலிருந்து அது மாய மாய்ப் போய்விட்டது,' என்று உரத்தகுரலில் கூறிக் கொண்டே அவ்வறைக்குள் வந்தான்.

குணசீலர், தம் சட்டையின் உட்பையில் கையையிட்டுத் துப்பாக்கியை எடுத்து அவன்முன் நீட்டி, 'இதுதானே அது?' என்று கேட்டார்.

அம்பலவாணன் அதை அவரிடமிருந்து பிடுங்கித் திருப் பித் திருப்பிப் பார்த்துவிட்டு, 'ஆம்; இதுதான். ஆனால் இதற்கும் இக்கொலைக்கும் சம்பந்தம் இருக்கும் என்று நீங் கள் நினைப்பது தவறாகும். இது கையாளப்பட்டிருந்தால் இதில் இடப்பட்டிருக்கும் குண்டுகளில் ஒன்றாகிலும் குறைய வேண்டாவா? இதிற் போடப்பட்ட குண்டுகள் அப்படியே இருக்கின்றதை நீங்களே பாருங்கள்,' என்று கூறி அத்துப் பாக்கியை அவரிடம் கொடுத்தான்.

குணசீலர் :—ஆம்; போடப்பட்ட குண்டுகள் அப்படியே தான் இருக்கின்றன. ஆனால் இக்குண்டுகள் சில மணி நேரத்திற்குமுன்பே இதிற் போடப்பட்டன என்பது துண்மை. இதைக் கையாண்டவர்கள் மறுபடியும் சுத் தம்செய்து முன்பிருந்ததைப்போலவே குண்டுகளை நிரப்பிவைத்துவிட முயன்றார்கள். ஆனால் முழுவ தும் சுத்தம் செய்யப்படவில்லை. இதன் வாய்ப்புறத் தை முகர்ந்து பாருங்கள்: அதில் இன்னும் அம்மரு ந்து நாற்றம் வீசுகிறது.

அம்பலவாணன்:—'நீங்கள் அதை எங்கிருந்து எடுத்தீர்கள்?' என்று வெகு கோபத்துடன் அவரைக் கேட்டான்.

குணசீலர் :—அம்பலவாணரே, வாசிப்பறையிலுள்ள மேஜை யின் அறையிலேயே இது காணப்பட்டது. உம்மு டைய தமயனார் வழக்கமாக வைத்துவந்த அந்த இடத்

திலிருந்தே நான் இதை யெடுத்தேன். கொலையாளி யின் கையினாலேயே சுத்தம் செய்யப்பட்டு அவ்விடத் தில் வைக்கப்பட்டது. இதுவே மோகனசுந்தரரின் உயி ரைக் கொள்ளைகொண்ட கருவி. அவரால் கையாளப் பட்டுவந்த இக்கருவியே அவர் உயிரைக் கொண்டது.

---

## மூன்றும் அத்தியாயம்.

---

### பொருள்விளங்காப் பொய்ம்மொழிகள்.

சிறிது நேரம் அவ்வறைமுழுதும் சந்தடியின்றி யிருந் தது. பின்பு மரகதவல்லியம்மாள் திடீரென எழுந்து நின்று, துப்பறிவதில் வல்லவரான குணசீலரை நோக்கி, 'ஐயா, இதனால் நீங்கள் என் மகன் மோகனசுந்தரன் தற்கொலை புரிந்துகொண்டான் என்று கருதுகிறீர்களோ? அவ்வாறு அவன் தற்கொலை புரிந்துகொண்டதைச் சிறிது நேரங் கழித்து யாரோ பார்த்துவிட்டு அவன் செய்கையை மறைத் துவிடக் கருதியும், களவும் கொலையும் வேறொருவர் செய்தா ரெனப் பிறர் நினைத்துக்கொள்ளும்படி செய்ய வெண்ணியும் இவ்வாறு செய்தார்கள் என்பது உம்முடைய நோக்கம்போ லும்? ஐயா, நீர் இவ்விஷயத்தில் அணைகடந்து செல்லு கிறீர். உம்முடைய மனங் குழப்பமடைந்து விட்டதென நினைக்கிறேன்,' என்றாள்.

அதைக்கேட்ட குணசீலர், மரகதவல்லியம்மாளை நோக்கி, 'அம்மா, அஃது என் கருத்தன்று. உம்முடைய குமாரர் வேறொருவரால் கொல்லப்பட்டா ரென்பது உண்மையே.

ஆனல், அத்தகைய கொலையைச் செய்யத்துணிந்த கொலையாளி, சன்னலின் வழியாகவந்து, அக்கொடிய காரியத்தைச் செய்யவில்லையென்பது நிச்சயம். கொலை நடந்தபின் சிறிது நேரங்கழித்து யாரோ அவ்வறைக்குள் வந்து அத்தீய செய்கையை மறைக்க வெண்ணிப் பொய்த் தோற்றங்களை யுண்டாக்கியிருக்க வேண்டுமென்பதே என்னுடைய கருத்து. இப்பொழுது எனக்கு இவ்வழக்கில் தோன்றும் விஷயம் இதுவே,' என்று பொறுமையாகக் கூறினர்.

மரகதவல்லியம்மாள் :—'நான் அதை நம்பமுடியாது. ஒருவரும் இவ்விஷயத்தில் இவ்வாறு நினைக்க இடமே இல்லை. கொலையாளி ஒருவரிருக்க வேறொருவர் அக்கொலைத்தொழிலை மறைக்கக் கருதவேண்டிய அவசியமென்ன இருக்கின்றது? என்ன கருத்துடன் அவர் அப்படிச் செய்யவேண்டும்? என் வீட்டிலுள்ள ஒருவரும் இப்படிப்பட்ட செய்கையைச் செய்யத் துணியார் என்பது எனக்குத் தெரியும். என்னுடைய வேலைக்காரரும் அப்படிப்பட்டவரல்ல,' என்று தீவிரமாகக் கூறினள்.

மரகதவல்லியம்மாள், இப்பொழுது தன்னைத் தானே மறந்து பேசுகிருள். இப்பொழுது, தான் இருப்பது தன்னுடைய மருமகளின் வீடென்பதும், தன்னுடைய வேலைக்காரர்கள் என்று கூறியவர்கள், தன் மருமகளுடைய வேலைக்காரர்களே என்பதும் அவள் ஞாபகத்திலிப்பொழுது இல்லை போலும்!

குணசீலர் கண்களில் பயங்கரத்தோற்றம் காணப்பட்டது. அதைக் கண்ட அம்பலவாணன், 'அவர் என்ன விஷயம் கூறப்போகிருரோ?' என்னும் ஆச்சரியத்துடன்

நின்ருன். அவனுடைய நெற்றியிலிருந்து வியர்வை நீர் துளித்துளியாகச் சொட்டியது.

பின்பு குணசீலர், அம்பலவாணனைப் பார்த்து, 'அம்பல வாணரே, நீரும் உம்முடைய தாயாரும் இன்று வேறெவ் விடத்திற்கோ குடிபோக நிச்சயித்திருப்பதாகச் சற்று நேரத்திற்கு முன் உமது தாயார் கூறக்கேட்டேன். அவ் வாறு நீர் வெளிச்செல்லுவதற்கு முன், நான் உம்முடன் தனிமையில் ஒரு விஷயம் பேச வேண்டும்,' என்ருர்.

'ஆ! ஆ!! அப்படியே செய்யலாம். குணசீலரே, நீர் என்னுடைய அறைக்கு வர முடியுமோ? அங்கு என்னுடைய ஆள் இப்பொழுதுதான் சாமான்களையெல்லாம் மூட்டை கட்டிக்கொண் டிருக்கிருன். நான் அவனை வேண்டுமானல் சிறிது நேரம் வெளியிலனுப்பி விடுகிறேன்,' என்று கூறினன் அம்பலவாணன்.

குணசீலர், 'நான் போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்களிடம் ஒரு விஷயம் பேசவேண்டி யிருப்பதால் பேசி விட்டு வந்து விடுகிறேன்,' என்று கூறினர்.

இவர்கள் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்த நீதிபதி நீலகண்ட முதலியார், அம்பலவாணனைத் தம்மருகில் அழைத் து, 'அம்பலவாணு, நீயும் உன்னுடைய தாயாரும் இவ் வீட்டை விட்டுப் போய்விடப்போகிறீர்களா, என்ன? கண வனிறந்த துன்பத்தால் வருந்தும் மதனசுந்தரியைத் தனியே வருந்த விட்டுச் செல்லுதல் சரியோ? அவளை அப்புறம் தேற்றுகிறவர் யார்?' என்று வினவினர்.

அம்பலவாணன், தன் தந்தையின் உயிர் நண்பரான நீதிபதி நீலகண்ட முதலியாரைப் பழக்கத்தின் மேல் முறையிட்டு அழைப்பது வழக்கமாகையால், அவ

ரைப்பார்த்து, 'மாமா, தாங்கள் நினைக்கிறபடி மதன சுந்தரி அவ்வளவு துன்பத்திற்காளாக வில்லை யென்பது உண்மை. கணவன் இறந்ததால் அவ்வளவு துக்கமுண்டா யிற்று என்று எண்ணுவதற்கு இடமில்லை. அவள் வேறெ தனுலோ மனமுடைந்து பெரும்பயம் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. அவள் அலறு சன்னி கொண்டவளைப் போல் நடுங்குவதை நான் நன்ருகப் பார்த்தேன். அவளுக்கு ஆறுதல் கூறுவதற்கு நீங்கள் எண்ணுகிறது போல் ஒருவரும் இல்லாமற்போக வில்லை. அவளுடைய தமக்கை— இவ்வீட்டுக்குள் பேரதிகாரஞ் செலுத்தும் காமகோட்டி யாகிய அவளுடைய தமக்கை—ஒருத்தி போதும் அவளுக்கு ஆறுதல் கூறுவதற்கு. நாம் என்னதான் ஆறுதல் கூறினும் அவளுக்கு எரியும் நெருப்பில் நெய்யிட்டதைப் போலாகுமே அல்லது, அஃது அவளுக்கு வேறெரு நன்மையும் செய்யாது என்பதுண்மை,' என்று ஆத்திரத்துடன் கூறினன்.

நீதிபதி நீலகண்ட முதலியார், இதை யெல்லாங் கேட்டுக்கொண்டிருந்த மரகதவல்லியம்மாளைப் பார்த்து, 'அம்மா, அம்பலவாணன் சிறுவன்; உலக நடையை ஒரு சிறிதும் அறியாதவன். ஆகையால் அவன் இவ்வாறு கூறுகிருன். நீயும் அதற்கு உடன் படுவது என்ருல் பார்ப்பவர்கள் உன்னையல்லவோ பழிப்பார்கள்? அஃது எனக்கு அழகாகத் தோன்ற வில்லை,' என்று கூறினர்.

மரகதவல்லியம்மாள், 'அண்ணு, நீங்கள் கூறுவது உண்மைதான்; ஆனுலும் துன்பம் நிறைந்து காணும் இவ்வீட்டிலிருந்து மனம் வருந்துவதைக் காட்டிலும் அப்படி உலகத்தார் கூறும் பழிமொழிகள்—உண்மை யறியார் கூறும் பழிமொழிகள்—பலவற்றைக் கேட்டுச் சகித்துக் கொண்டி

ருப்பதில் எனக்குச் சம்மதமே. நான் இவ்வீட்டில் இனி ஓர் இரவுகூடத் தங்க முடியாது. இவ்வீட்டைக் காணவே என் கண்கள் கூசுகின்றன,' என்று கூறினாள்.

நீதிபதி நீலகண்ட முதலியார், '.................உம்...........' என்று ஒரு பெருமூச்சு விட்டு, 'அம்மா, மதனசுந்தரியைப் பார்த்துப்பேச வேண்டும்,' என்றார்.

'அப்படி யானால் சற்றுப்பொறுங்கள்; பார்த்துக் கொண்டு வருகிறேன்,' என்று கூறி, மரகதவல்லியம்மாள் அதிக விரைவாக அவ்வறையை விட்டு அப்புறஞ் சென்றாள், நீதிபதி நீலகண்டமுதலியார், தம் குமாரத்தி கலாவதி யமர்ந் திருந்த புறமாகத் திரும்பினார்.

இதற்கிடையில் போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்கள், குணசீலரைப் பார்த்து, 'குணசீலரே, நீங்கள் சொல்லிய விஷயங்கள் சரியாக இருக்குமென்று உமக்குத் தோன்றுகிறதா? நீங்கள் செய்த முடிவு ஒருவாறு சாதுரிய மாகத்தான் தோன்றுகிறது. ஆனால் அதை முடிக்கத் தகுந்த சாட்சி வேண்டாவோ?' என்றார்.

குணசீலர் :—நாயடு அவர்களே, எனக்கு அவ்வளவு தெரியாதா, என்ன? சாட்சி யில்லாமலா இவ்வளவு கூறு கிறேன் என்று நினைக்கின்றீர்? இல்லை; இல்லை. இப் பொழுது கிடைத்துள்ள கைத்துப்பாக்கி யொன்றே போதும். இதிலிருந்தே மற்ற விஷயங்களை யெல்லாம் உணருதல் கூடும். பானைச்சோற்றுக்கு ஒரு சோறு தானே பதம்?

குணசீலர் இவ்வாறு கூறியபோது மதனசுந்தரியினிடஞ் சென்ற மரகதவல்லியம்மாள், திரும்பி வந்து, நீதிபதி நீல கண்டமுதலியாரைப் பார்த்து, 'அண்ணா, என்னோடு வாருங் கள். மதனசுந்தரியும் உங்களுடன் பேச விரும்புகிறாள்,'

என்று கூறி, அவரை அழைத்துச்சென்ருள். உடனே போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடுவும் வெளிச் சென்றனர். கலாவதி எதையோ சிந்திப்பவளைப்போல ஒருபுறம் சோபா ஒன்றில் உட்கார்ந்திருந்தாள். குணசீலர், தாம் உட்கார்ந் திருந்த இடத்தைவிட் டெழுந்து அவளருகிற் சென்ருர்.

அவர் அவளைப்பார்த்து, 'அம்மா, நேற்று மாலை நீயும் உன்னுடைய தந்தையாரும் நெடுநேரம் இவ்வீட்டிலிருந்து, விருந்து புசித்துப் போனதாகத் தெரிகிறது. ஆகையினுல் நான் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். இப்பொழுதோ மோகனசுந்தரர் அநியாயமாகக் கொலை செய்யப்பட்டார். அவர் கொலையுண்டதைப் பற்றி நீ அதிகமாக வருந்துகிருய் என்பதும் எனக்குத் தெரியும். உண்மைக் கொலையாளியைக் கண்டு பிடிப்பதே எல்லோருடைய வருத்தத்தையும் நீக்கத்தகுந்த வழி. ஆகையினுல், தயவு செய்து நேற்று மாலை இவ்விடத்தில் நடந்த விஷயங்களையெல்லாம் ஞாபகத்திற்குக் கொண்டுவந்து எனக்கு நீ சொல்லக்கூடுமா ?' என்று கேட்டார்.

கலாவதி :—எனக்கொன்றும் ஞாபகத்திலில்லை. ஐயா, நீங்கள் என்னைப்பயப்படச் செய்ய வேண்டாம். இங்கிருந்த எங்களில் ஒவ்வொருவரைப்பற்றியும் நீங்கள் சந்தேகம் கொள்ளுவதாகத் தெரிகிறது. எவனே திருடன்தான் அப்படிப்பட்ட கோரக் கொலையைச் செய்திருக்க வேண்டும். தவிர, மோகனசுந்தாருடைய ஆபரணங்களும் பொருளும் களவு போனது உங்களுக்குத் தெரியாதோ? அதனுல் திருடனை யன்றி இப்படிச் செய்யத் துணிந்தவர் ஒருவருமிரார் என்பது உமக்குத் தோன்ற வில்லையா ?

குணசீலர் :—அம்மா, 'பதருத காரியம் சிதருது,' என்பது உனக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். ஆகையால் அவசரப்படாமல் நேற்று மாலை இங்கு நடந்த விஷயங்களை ஞாபகப்படுத்திக் கொண்டு, முடியுமானுல் ஒன்று விடாமல் சொல்ல வேண்டும்.

கலாவதி :—நேற்று மாலை அப்படி யொன்றும் புதுமையாக நடக்கவில்லையே! எங்கள் குடும்பத்துக்கும் இந்தக் குடும்பத்துக்கும் நெடுநாளாகப்பழக்கமாம். அதனுல் நாங்கள் எப்பொழுதும் ஒருவர் வீட்டுக்கு ஒருவர் வந்து போவது சாதாரணம். நேற்றுச் சாயுங்காலம் நானும் என் தந்தையாரும் இங்குவந்திருந்தோம். எங்களுக்கு மரகதவல்லியம்மாள் வேடிக்கையாக ஒரு விருந்துவைத்தார். விருந்து புசித்து விட்டு நாங்கள் நெடுநேரம் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டும் விளையாடிக் கொண்டு மிருந்தோம். ஆனுல் காமகோட்டியம்மாள் மாத்திரம் எங்களுடன் இருக்க வில்லை. அந்தம்மாள் நுங்கம்பாக்கத்தில் யார் வீட்டிலோ திரட்சிக் கலியாணம் என்று கூறிப்போய் விட்டார்.

குணசீலர் :—என்ன! திரட்சிக் கலியாணமா?

கலாவதி :—ஆம்! யாரோ மிகவும் வேண்டியவர் வீட்டில் கலியாணம் நடை பெறுவதாகவும், அதற்கு அவசியம் போய் வரவேண்டுமென்றுங் கூறிச் சென்றுர் காமகோட்டியம்மாள். பிறகு அத்தான் அம்பலவாணரும் அழகாக உடுத்துக் கொண்டு மோடார் வண்டியிலேறி வெளியிற் சென்றுர். அவர் எங்குச் சென்றுர் என்பது எனக்குத் தெரியாது. நானும், பெரிய அத்தான் மோகனசுந்தரரும், அவர் மனைவி மதனசுந்தரியும் சிறிது

நேரம் ஒருவரோடொருவர் காலப் போக்குக்காகப் பேசிக்கொண் டிருந்தோம். இடையில் மதனசுந்தரி, தனக்கு உடம்பு சரியில்லை என்றும், தான் படுத்துக் கொள்ளப் போவதாகவும் கூறி, மாடியிலுள்ள தன் படுக்கையறைக்குச் சென்றாள். என் தந்தையார், அத்தை மரகதவல்லியம்மாளிடம் ஏதோ குடும்ப விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தார். அவர் பேசி முடியும் வரையில் நான், பெரிய அத்தான் மோகன சுந்தரருடன் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்து, பிறகு நானும் என் தந்தையாரும் எங்கள் வீட்டுக்குச் சென்றோம். இவ்வளவுதான் விஷயம்.

குணசீலர் :—நீங்கள் இவ்வீட்டை விட்டுப் போகும் பொழுது என்ன மணி யிருக்கலாம்?

கலாவதி :—ஒருவரோடொருவர் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்ததால் பொழுதுபோனது தெரியவில்லை. நாங்கள் வீட்டுக்குச் சென்றபோது சுமார் இரவு பதினொன்றரை மணி யிருக்கலாம் என்று நினைக் கிறேன்.

குணசீலர் :—நீங்கள் நேராக வீட்டுக்குப் போனீர்களா?

கலாவதி :—நாங்கள் வேறெங்கும் போகவில்லை. இப்பொ ழுது கிறிஸ்தவப் பண்டிகைக் கொண்டாட்டத்திற் காகப் பொதுஜன சிங்காரத் தோட்டத்திலுள்ள பந்தய வெளியில் (People's Park, S.I.A Grounds.) இரவில் வேடிக்கைகள் நடப்பது உமக்குத் தெரியுமல் லவா? அவ்வேடிக்கைக்குப் போகலாமென்று நான் என் தந்தையாரைக் கேட்டேன். அவர், 'நாளைக்குப் போகலாம்,' என்று கூறினார். அதனால் நாங்கள்

நேரே வீட்டுக்குச் சென்று, என் தந்தையார் அவரு டைய படுக்கையறைக்குச் செல்ல, நான் என் படுக்கை யறைக்குச் சென்றேன். இரவில் படுப்பதற்கு முன் னுல் ஏதாகிலும் வாசித்துவிட்டுப் படுப்பது வழக்கமா கையால், நான், சுமார் ஒரு மணி அல்லது ஒன்றரை மணி நேரம் படித்துக் கொண்டிருந்துவிட்டுப் படுத் துறங்கினேன்.

குணசீலர் :—அம்மா, நீ கூறியன எல்லாம் எனக்கு விளங் கின. நீ, நேற்று மாலை யாருடன், எத்தனை மணிக்கு, இந்த வீட்டிலுள்ள மோகனசுந்தரரின் வாசிப்பு அறை யில் இருந்ததாகக் கூறிஞய் ?

குணசீலர் இவ்வாறுகேட்ட கேள்வி, அவளைப் பயங் கொள்ளச் செய்தது. அவள் நடுக்கத்துடன், 'என்ன! வாசிப்பு அறையிலா ?' என்று கேட்டாள்.

குணசீலர் :—'ஆம்! வாசிப்பு அறையில்தான்—மோகனசுந் தரர் பிறகு கொலை செய்யப்பட்ட அந்த அறையில் தான்,' என்று கூறினர்.

அதைக்கேட்டுக் கலாவதி, 'வாசிப்பு அறையிலா ? வாசிப்பு அறையிலா ? இஃதென்ன இப்படிக் கேட்கிறீர்களே! அஃது ஒருபோதுமில்லை. நான் ஒரு விநாடியாயினும் நேற்று மாலை அவ்வறையில் இருந்தது கிடையாது. நான் அதைப்பற்றி உறுதியாகக் கூறுவேன். ஏன்? பிரமாணிக்க மும் செய்வேன்,' என்ருள்.

குணசீலர் திடுக்கிட்டு, 'அம்மா, கோபித்துக் கொள்ள வேண்டாம். சற்று முன்பு நீயும் மோகனசுந்தரரும் அவர் மனைவியும் ஒருவரோடொருவர் நேற்று மாலை நெடுநேரம் பேசிக்கொண்டிருந்ததாகக் கூறினையல்லவா? அதனுல் நீங்

கள் ஒரு வேளை அந்த அறையில்தான் பேசிக்கொண்டிருந்தீர்களோ என்னவோ என்று நினைத்தேன்,' என்றார்.

'இல்லை....இல்லை; நாங்கள் அதற்குப் பக்கத்திலுள்ள ஓர் அறையில் பேசிக்கொண் டிருந்தோம்,' என்று கூறிக் கலாவதி குணசீலர் முகத்தைச் சந்தேகத்துடன் உற்று நோக்கினாள்.

உடனே குணசீலர், விஷயத்தைச் சிறிது மாற்றி, 'அம்மா, மதனசுந்தரியம்மாள் தனக்கு உடம்பு சரியில்லை என்று கூறிப் படுக்கைக்குச் சென்றதாகச் சொன்னாயே! அந்த அம்மாள் முகத்தில் அப்பொழுது ஏதாகிலும் துன்பக் குறி தோன்றியதா?' என்று கேட்டார்.

கலாவதி:—எனக்கு அஃது எப்படித் தெரியும்? நான் அதையேன் அவ்வளவு கூர்ந்து கவனிக்கவேண்டும்? அவள் மற்ற நாட்களில் எனக்குக் காணப்பட்டதைப் போல் நேற்றும் காணப்பட்டாள்!

குணசீலர்:—நீங்களெல்லாம் நெருங்கிப் பழகியவர்களாத லால் நீ ஒருவேளை அதை யறிந்திருக்கக் கூடுமென்று நான் நினைத்தேன்.

கலாவதி:—நான், என் தந்தைக்கும் எனக்கும் மோகனசுந்தரர் குடும்பத்தில் வெகுநாட் பழக்கத்தால் அவர்களிடத்தில் மிகுந்த சிநேகமுண்டு என்று சொன்னேனே ஒழிய, மதனசுந்தரியிடத்திலும் அவள் தமக்கையாகிய காமகோட்டியம்மா ளிடத்திலும் நெருங்கிய பழக்கமுண்டென்று சொல்லவில்லை. எனக்கு அவர்கள் இருவரையும் சாதாரணமாகத் தெரியும். அவ்வளவே.

குணசீலர்:—'அம்மா, நீ இவ்வளவு கூறியதில் எனக்குச் சந்தோஷமே. நான் வேலைக்காரர்களைப் பார்த்துச்

சில சங்கதிகளைப் பற்றி விசாரிக்கவேண்டும்,' என்று கூறிவிட்டு வெளியே சென்றார். அவருக்குப் பலவித எண்ணங்கள் தோன்றின. அவர், 'கலாவதியின் பாவனையிலிருந்து அவள் ஒரு சில விஷயங்களை மறைத்துக் கூறுவதாகத் தெரிகிறது. அவள் நேற்று மாலை அவ்வறையில் தான் பேசிக்கொண் டிருந்தாளென்பதும், ஆனால் அதை எக்காரணம் பற்றியோ மறைத்துக் கூறுகிறாள் என்பதும் அவள் முகத் தோற்றத்தால் தெரிகின்றன,' என்று நினைத்துக் கொண்டே அம்மாளிகையின் உட்பக்கத்திலுள்ள கூடத்திற்குச் சென்றார்.

அவ்விடத்தில் இருந்த வேலையாள் ஒருவன், 'ஐயா, எஜமானர் அம்பலவாண முதலியார் அறைக்கா போகிறீர்கள்? அவர் உங்களை எதிர்ப்பார்த்துக்கொண்டிருக்கிறார். நான் தான் அவருடைய சமையற்காரன். வாருங்கள்; அவருடைய அறையைக் காட்டுகிறேன்,' என்றான்.

குணசீலர் :—அப்பா, நீ அவரிடமிருந்துதான் கீழே வருகிறாயோ? சரி; நீ வைத்துக்கொண் டிருக்கும் இந்தத் தட்டு எதற்காக? உன் பெயரென்ன?

அதற்கவன், 'என் பெயர் மாணிக்கம். நான் அவருக்கு உணவுகொண்டு போய்க் கொடுத்துவிட்டு வருகிறேன்,' என்றான்.

குணசீலர் :—மாணிக்கம், இப்பொழுது உன் எஜமானர் சாப்பிட்டாரா? இவ்வளவு துன்பத்தில் அவர் எப்படிச் சாப்பிட்டாரப்பா? சரி; அது கிடக்கட்டும். மாணிக்கம், நேற்று இராத்திரி உன் எஜமானர் வெளியிலிருந்து எத்தனை மணிக்கு வீட்டுக்கு வந்தார்?

மாணிக்கம் :—ஏறக்குறைய இரவு மூன்று மணி யிருக்கும்.

குணசீலர்:—உனக்கு எப்படித்தெரியும்? அவர் எங்காகிலுஞ் சென்றால் திரும்பி வருகிற வரையில் நீ காத்துக் கொண்டிருப்பது வழக்கம்போ லிருக்கிறது?

மாணிக்கம் :—ஆம், ஆம்! அப்படித்தான். அவர் படுக்கைக் குப்போகும் பொழுது பால் கேட்பது வழக்கம். அதற்காக அவர் வருகிற வரையில் விழித்துக்கொண் டிருந்து, பாலைக்காய்ச்சி, அவருக்குக் கொடுத்துவிட்டு நான் படுக்கைக்குப் போவது வழக்கம். ஆனால் நேற்றுக் கொஞ்சம் நேரம் ஆய் விட்டது.

குணசீலர் :—சரி; அவர் இராத்திரி திரும்பி வந்த பொழுது எவ்வாறு காணப்பட்டார்?

மாணிக்கம் :—எனக் கொன்றுந் தோற்ற வில்லை. வழக்கம் போலத்தான் இருந்தார்.

இவ்வாறு கூறிக் கொண்டே, மாணிக்கம், குணசீலரை மாடிக்கு அழைத்துச் சென்று, அம்பலவாணன் அறையை அவருக்குக் காட்டி, அவ்வறையின் கதவைத் தட்டினான். உடனே அவ்வறைக்குள் இருந்த அம்பலவாணன், கதவைத் திறந்து, குணசீலரைப் பார்த்து, 'ஓ! நீங்களா! உள்ளே வாருங்கள். என்னை ஏதோ கேட்க வேண்டுமென்று கூறி னீர்களே! அஃது என்ன? நான் எனக்குத் தெரிந்ததை யெல்லாந்தான் உம்மிடங் கூறி விட்டேனே!" என்றான்.

குணசீலர் :—அம்பலவாணரே, உம்முடைய தமையனரிட மிருந்து என்னென்ன ஆபரணங்கள் களவு போயின என்பது எனக்குத் தெரியவேண்டும்.

அம்பலவாணன் :—ஓ! அவைகளைப் பற்றித்தான் முன்னமே ஒரு பட்டி குறித்துக் கமிஷனர் அவர்களிடம் கொடுத்து விட்டேனே!

குணசீலர் :—இருந்தாலும் திரும்பவும் நீர் அவைகளைப் பற்றி எனக்குக் கூற வேண்டும்.

அம்பலவாணன் :—அவர் காதில் அணிந்திருந்த வைரக்கடுக்கனும், விரலில் அணிந்திருந்த ஐந்து கல் வைரமோதிரமும், அவருடைய சட்டைப் பையிலிருந்த வெள்ளிக் கடிகாரமும் பொன் சங்கிலியும், பணம் வைத்துக் கொண்டிருந்த ஒரு சிறு தோற்பையுங் காணவில்லை. இவ்வளவு தான் எனக்கு ஞாபகத்திலிருக்கிறது.

குணசீலர் :—சரி; அம்பலவாணரே, நேற்று இரவு நீர் எங்குச் சென்றிருந்தீர்? சாப்பிட்டானதும் உடுத்துக் கொண்டு வெளியிற் போய் விட்டதாகக் கேள்விப்பட்டேன் ; உண்மைதானா ?

அம்பலவாணன் :—ஆம் ; அஃது உண்மையே.

குணசீலர் :—எங்குச் சென்றிருந்தீர் ?

அம்பலவாணன் :—சிறிது நேரம் விக்டோரியா பப்ளிக் ஹாலிலுள்ள சுகுண விலாச சபைக்குச் சென்று, அங்கு வந்திருந்த என் நண்பர் சிலருடன் வேடிக்கையாகச் சீட்டு விளையாடிக் கொண்டிருந்து, பிறகு அவ்விடத்தை விட்டுச் சென்றேன்.

குணசீலர் :—அவ்விடத்திலிருந்து எங்குச் சென்றீர் ?

அம்பலவாணன்:—என் நண்பன் ஒருவன் வீட்டிற்குப் போய் அவனை யழைத்துக்கொண்டு நேற்று இரவு பொது ஜனசிங்காரத்தோட்டத்தில் நடந்த பாண வேடிக்கைக்குச் சென்றிருந்தேன். நெடுநேரம் அங்கு வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்து விட்டுப் பின்பு என் நண்பனை மோடார் வண்டியில் ஏற்றிக்கொண்டுபோய்,

அவன் வீட்டில் விட்டுவிட்டு, வீட்டுக்கு வந்து படுத்துக்கொண்டேன்.

குணசீலர் :—நீர் சுகுண விலாச சபையை விட்டு எத்தனை மணிக்குச் சென்றீர்?

அம்பலவாணன் :—அது தான் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. சற்றேறக்குறைய இரவு பன்னிரண்டரைமணி இருக்கலாம் என்று நினைக்கிறேன்.

குணசீலர் :—உம்முடைய சிநேகிதர் வீட்டுக்குச் சென்ற போது என்ன மணியிருக்கலாம்?

அம்பலவாணன்:—சற்றேறக்குறைய ஒரு மணி இருக்கலாம்.

குணசீலர் :—உம்முடைய நண்பர் அதைச் சந்தேக மில்லாமல் கூற முடியுமா?

அம்பலவாணன் :—ஆ! ஆ!! கூடுமென்றே நினைக்கிறேன். நான் சுகுண விலாச சபையை விட்டுச் செல்லும் போது அங்கிருக்கும் வாயில் காப்போன்தான் என் வண்டியைக் கூப்பிட்டான். அவனுக்கும் நான் சென்ற நேரம் ஒரு வேளை தெரிந்திருந்தாலும் இருக்கலாம். குணசீலரே, நீர் கேட்கும் இத்தகைய கேள்விகளால் என்தமயனாரைக் கொலை செய்தவன் நான் தான் என்று நீர் கருதுகிறீர் என்று நினைக்கிறேன்! என் ஐயா! அப்படித்தானே? நீர் அப்படிக் கருதுவது தப்பெண்ணம் என்பதை நான் உமக்குத் தெரிவிப்பதற்காக நீர் என்னை மன்னிக்கவேண்டும். அநேக கொலை வழக்குகளில் உண்மைக் கொலையாளிகளைக் கண்டு பிடித்துக் கவர்ன்மென்டாரிடமிருந்து நன்மதிப்புப் பதக்கம் பெற்றுள்ள நீர், இவ் வழக்கில் உண்மை

யின்ன தென்பதை யுணராமல் கண்டபடி யெல்லாம் சந்தேகங் கொள்ளுவதற்குக் காரணமென்ன ?

குணசீலர் :—அம்பலவாணரே, இப்படிப்பட்ட வழக்குகளி லெல்லாம் திடீரென்று ஒரு முடிவு கட்டி விடக்கூடாது. எதையும் யோசித்தே செய்யவேண்டும். 'ஆய்ந்து ஓய்ந்து பாரான் தான் சாகக்கடவன்,' என்னும் பழமொழி நீர் அறியாத தல்லவே ? கேட்க வேண்டிய முறைப்படி கேட்டேனே ஒழிய, இதனாலேயே நான் உம்மைக் குற்றவாளியாகக் கருதியதாக நீர் எண்ண வேண்டா. நான் இப்படியெல்லாம் செய்யாவிட்டால் போலீஸார் இவ்வழக்கில் பெருங்குழப்பத்தை யுண்டு பண்ணிவிடுவர் என்பது நிச்சயம். நேற்றைய இரவு இக்கொலை நடந்தபொழுது இவ்வீட்டிலுள்ள ஒவ்வொருவரும் எங்கெந்த இடத்தில் இருந்தனர் என்பது அவர்களுக்குத் தெரியவேண்டியது முக்கியமல்லவா ? ஒவ்வொரு விஷயத்தையும் ஊகித்துணரா விட்டால் இப்படிப்பட்ட வழக்குகளில் உண்மை வெளிப்படாமற் போய்விடும். குற்றமற்றவர்கள் சில சமயங்களில் குற்றவாளிகளாகக் கருதப்படுவதும் உண்டு....உம்முடைய சிநேகிதர் வீடு சுகுண விலாச சபைக்கு அருகில் தானிருக்கிறதோ ?

அம்பலவாணன் :—மோடார் வண்டியிற் சென்றால் ஐந்து நிமிஷத்தில் அவ்வீட்டுக்குப் போய் விடலாம்.

குணசீலர் :—அப்படியானால் நீர் அங்குப் போவதற்குமுன் இருபது இருபத்தைந்து நிமிஷங்கள் வரையில் என்ன செய்தீர் ?

அம்பலவாணன் :—ஆம் ! எனக்கு இப்பொழுது தான் ஞாப

கம் வருகிறது. நான் வீட்டுக்கு—வரலாம்—என்று—வந்துகொண்டிருந்தேன். பிறகு என் எண்ணம்—வீட்டுக்கு வரலாம் என்ற எண்ணம்—மாறியது. சிறிது நேரம் வண்டியை நிறுத்தும்படி மோடாரோட்டிக்குக் கூறினேன். உடனே எனக்கு என் நண்பனைப் பார்க்க வேண்டும் என்னும் எண்ணம் வந்தது. ஆகையால் நண்பன் வீட்டுக்கு வண்டியையோட்ட அவனுக்குக் கூறிச் சிறிது நேரத்திற்கெல்லாம் என் நண்பனைக் கண்டேன். அவன் பாணவேடிக்கை பார்க்க விரும்பியதால் இருவரும் பொதுஜன சிங்காரத் தோட்டத்திற்குச் சென்றோம்.

குணசீலர் :—சரி! நீர் கடைசியாக இம்மாளிகைக்கு வரும் பொழுது எத்தனை மணி யிருக்கலாம்?

அம்பலவாணன் :—அதுவும் எனக்குச் சரியாகத் தெரியாது சற்றேறக்குறைய மூன்றுமணி யிருக்கும் என்று எண்ணுகிறேன்.

குணசீலர் :—நீர் வீட்டுக்கு வந்தபோது ஒருவிதமான புதுமையும் உமக்குத் தோற்றவில்லையோ?

அம்பலவாணன்:—இல்லை....இல்லை. என்னுடைய வேலைக்காரன் நான் வருகிற வரையில் விழித்துக்கொண் டிருந்தான். நான் வீட்டுக்கு வந்ததும் என் உடையைக் களைந்துவிட்டு நேராகப் படுக்கைக்குச் சென்றேன். சிறிது நேரம் எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. படுக்கையில் அப்படியும் இப்படியும் புரண்டுகொண் டிருந்தேன். சிறிது நேரங்கழித்து என்னையும் அறியாமல் தூக்கம் வந்து விட்டது. அயர்ந்து தூங்கி விட்டேன்.

குணசீலர் :—அம்பலவாணரே, தயவு செய்து தங்களுடைய

நண்பர் பெயரையும் விலாசத்தையும் தெரிவிக்கவேண்டும்.

அம்பலவாணன் :—மரகதசுந்தரன்,—தணிகை விலாஸம், தங்கசாலைத் தெரு, சென்னை.

அம்பலவாணன் இதைக் கூறியவுடன், குணசீலர், தம் சட்டைப்பையிலிருந்த தினக்குறிப்புப் புத்தகத்தை யெடுத்து, அதில் இவ்விஷயத்தைக் குறித்து வைத்துக்கொண்டார். பிறகு அம்பலவாணன் கையில் ஏதோ காயம்பட்டு, அவன் அதைத் துணியால் சுற்றிக் கட்டியிருப்பதைக் கண்டு, ' அம்பலவாணரே, கையில் ஏன் துணி சுற்றிக்கொண்டிருக்கிறீர்?' என்றார்.

அம்பலவாணன் :—என் கையில் காயம் பட்டிருக்கிறது. அதற்கு என் வேலையாள் சிறிது மருந்திட்டுத் துணியொன்றைச் சுற்றினன்.

குணசீலர் :—அக்காயம் உண்டானதற்குக் காரணமென்ன?

அம்பலவாணன் :—நேற்று இரவு மோடார் வண்டியின் கதவைச் சாத்தும்பொழுது, அதில் கை பட்டுக் காயமாயிற்று.

குணசீலர் :—அம்பலவாணரே, உம்முடைய தமயனுருக்கு யாராகிலும் பெரும் விரோதி உண்டோ?

அம்பலவாணன் :—ஐயோ! அவர் யாரையும் விரோதியாக்கிக் கொள்ளுவதில்லை. சிலர் அறியாமையால் அவரிடம் விரோதங் கொண்டிருத்தல் கூடும். ஆனலும் அவரைக் கொலை செய்யத் தகுந்த விரோதிகள் எவரும் இல்லை. ஆனல்—ஒருவன்—இல்லை—இல்லை—அவனையும் அப்படி எண்ணுவதற்கு இடமில்லை.

குணசீலர் :—யாரவன்? யாரவன்?

அம்பலவாணன் :—என் தமயனுர் மீது பொருமை கொண்டவன்—பெண் விஷயமாகப் பொருமை கொண்டவன்—மதனசுந்தரியின் விஷயமாகப் பொருமை கொண்டவன்—ஒருவனிருக்கின்றுன். அவன், மதனசுந்தரியின் அத்தை மகனும். மதனசுந்தரியின் தாய் தந்தையர், அவனை அவனுக்கே மணம் செய்து கொடுப்பதாகக் கூறி வந்தார்களாம். அவனோ, கல்வி சிறிதும் இல்லாதவன்; டாம்பீகன். படிக்காதவனுக இருந்த போதிலும் படித்தவனைப்போல் காட்டிக் கொள்ளுவதில் அவனுக்கு வெகு விருப்பம். அவன் உடையைப் பார்த்தால், பெரும் பணக்காரனைப்போல் அவனைத் தோன்றச் செய்யும். அவன் மிகுந்த அழகுடையவன். ஆகையினுல் மதனசுந்தரிக்கு அவனை மணப்பதில் விருப்பம் இருந்ததாகத் தெரிகிறது. 'கருதியவாறு ஆமோ கருமம்?' என்பதற்கேற்பக் கடைசியில் அவளுடைய எண்ணம்—மதனசுந்தரியின் எண்ணம்—நிறைவேருமற் போயிற்று. அவளுடைய பெற்றேர், முடிவில் என்னுடைய தமயனுர் கல்விச் செல்வத்தையும், பொருட்செல்வத்தையும், நடையுடை பாவனைகளையும் கண்டு மயங்கினர். உடனே, தம்முடைய மகளாகிய மதனசுந்தரியை அவளுடைய அத்தை மகனுக்கு மணஞ்செய்து கொடுக்கவேண்டும் என்று அவர்கள் கொண்டிருந்த எண்ணம், அவர்கள் மனத்தை விட்டு மாயமாய்ப்பறந்தது. பின்பு அவர்கள், மதனசுந்தரியை என் தமயனுர் மோகனசுந்தரரை மணக்கும்படி வற்புறுத்தினுர்கள்போல் தோற்றுகிறது. அவள், என் தமயனுரைப் பொய்யாகக் காதலித்து வந்தாள் போலும்! முடிவில் அவளுடைய பெற்றேர்கள் கருதியபடியே என் தமயனுருக்கு என் தந்தையார்,

அவளைமணம்பேசி முடித்தார். இத்திருமணம் முடிந்ததைக் கேள்விப்பட்ட மதனசுந்தரியின் அத்தை மகன், ஏதேதோ முணுமுணுத்தானும். அவன், 'இக்கலியாணம் சுகமுள்ளதாக இருக்கப்போகிறதா? நான் அதையும் பார்த்து விடுகிறேன்,' என்று ஒருமுறை ஒருவரிடம் கூறிய விஷயமும் எங்கள் செவிக்கெட்டாமற் போகவில்லை. அப்படிப்பட்ட அவனுக்கு மாத்திரந்தான் இப்பொழுது என் தமயனுர் கொலையுண்டதைக் கேட்க ஒருவேளை சந்தோஷமுண்டானல் உண்டாகலாம்.

குணசீலர் :—அவன் பெயர் என்ன ?

அம்பலவாணன் :—அவன் பெயர் அருளாநந்தன் என்பது. அவன் இப்பொழுது சைதாப்பேட்டையில் காரணீஸ்வரர் கோயில் தெருவில் இருந்து வருகிறுன்.

குணசீலர் :—அம்பலவாணரே, இனிநான் உங்களைக்கேட்க வேண்டிய விஷயம் ஒன்றுமில்லை. அப்படிவேண்டியிருந்தால் நான் உம்மை உம்முடைய புதிய இடத்தில் வந்து பார்க்கிறேன். அவ்விடத்தின் பெயரென்ன?

அம்பலவாணன் :—நுங்கம்பாக்கத்தில் உள்ள மனோரஞ்சித விலாசமே என்னுடைய புதிய இடம். அங்குவந்து விசாரித்தால், யாராயிருந்தாலும் அம்மாளிகையை உங்களுக்குக்காட்டுவார்கள்.

குணசீலர் :—சரி; அப்படியானல் வேண்டும்போது நான் உம்மை அங்குவந்து பார்க்கிறேன்.

அம்பலவாணன் :—செய்யுங்கள். நான் நேராக என்தாயாருடன் இப்பொழுது அங்குத்தான் போகப் போகிறேன். இந்த வீட்டில் இருப்பதற்கு எங்களுக்குச் சிறிதும் பிடிக்கவேயில்லை.

குணசீலர் :—அம்பலவாணரே, நான் இப்பொழுது காமகோட்டியம்மாளுடன் இரண்டொரு விஷயங்கள் பேச விரும்புகிறேன். தயவுசெய்து ஓர் ஆளைபனுப்பி அந்த அம்மாளை வாசிப்பறைக்கு அழைத்துவரச் சொன்னால் நன்மையாக இருக்கும்.

இதைக்கேட்ட அம்பலவாணன், 'அப்படியே ஆகட்டும்,' என்று கூறித் தன்வேலையாளாகிய மாணிக்கத்தைக் கூப்பிட்டுக் காமகோட்டியம்மாளை வாசிப்பறைக்கு அழைத்து வரும்படி கூறிக் குணசீலரை அழைத்துக்கொண்டு மேலேவந்தான். அப்பொழுது இன்ஸ்பெக்டர் துரைசிங்கம்பிள்ளை, அவர்களுக்கெதிரில்வந்து குணசீலரைப்பார்த்து, 'குணசீலரே, நான் உங்களுடன் சில விஷயங்கள் பேசவேண்டும். நீங்கள் எங்கேயாகிலும் முக்கிய காரியமாகப் போகிறீர்களா, என்ன?' என்று கேட்டார்.

குணசீலர் :—காமகோட்டியம்மாளுடன் சில விஷயங்கள் பேசுவதற்காக வாசிப்பறைக்குச் செல்லுகிறேன் நீர் ஏதாகிலும் கூறவேண்டி யிருந்தால் கூறலாமே?

குணசீலர் இவ்வாறு கூறியதும், இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை, சிறிது நேரம் தயங்கினார் அதைக்கண்ட அம்பலவாணன், அவர் ஏதோ கூறப்போகிறார் என்று எண்ணி, மாடிக்குச் சென்றான். பிறகு இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை, குணசீலரைப் பார்த்து, 'குணசீலரே, நான் பேச விரும்பிய விஷயம் மோகனசுந்தரனுடைய தேகத்தைப் பற்றியதே. அவர் இருதயத்தில் காணப்பட்ட குண்டைத் தவிர அவர் தோளின்மீது ஒரு பலமான குத்து விழுந்து, அங்கு இரத்தம் கட்டிக்கொண் டிருக்கிறது. யாரோ அவரைக் கொல்ல வந்தவர்கள், முதலில் கைச் சண்டையிட்டிருக்க வேண்டும் என்பதும், அதைத் தடுக்க

அவர் பலவிதங்களிலும் முயன்றிருக்க வேண்டு மென்பதும், பிறகு முடிவில் அக்கொலையாளிக்குக் கோபம் அதிகரித்து அவன் துப்பாக்கியால் சுட்டிருக்க வேண்டுமென்பதும் இதனால் தெரிகின்றன அல்லவா ?' என்று கேட்டார்.

குணசீலர், 'ஆம்; அஃது அப்படித்தான் தோன்றுகிறது. தேகத்தில் வேறு ஏதாகிலும் காயம் காணப்படுகிறதா ?' என்று புன்சிரிப்புடன் கேட்டார்.

இன்ஸ்பெக்டர் :—வேறொன்றும் இல்லை. குணசீலரே, இதைப் போன்ற ஒரு கொலை வழக்கை நான் என் ஆயுளில் இது வரையில் கண்டதே இல்லை. மோகனசுந்தரரைக் கொலை செய்தவர் யார் என்பதும், அக்கொலையாளி கொலை செய்து சிறிது நேரங்கழித்து மறுபடியும் உட்புகுந்து மற்றக் காரியங்களை யெல்லாம் ஏன் செய்திருக்கவேண்டும் என்பதும் விளங்கவேயில்லை.

குணசீலர் :—அவைகளைக்கண்டு பிடிப்பதற்காகத் தானே நாம் இங்கு வந்தோம் ? நீர் வேறு வேலைக்காரரையும் இதைப்பற்றி யேதாகிலும் கேட்டதுண்டா ?

இன்ஸ்பெக்டர் :—கேட்டேன். ஆனால் அதனால் பயனில்லை.

இதைக்கேட்ட குணசீலர், இன்ஸ்பெக்டரைப் பார்த்து, 'ஐயா, இதைப்பற்றிப் பினபு யோசிப்போம். இப்பொழுது நான் காமகோட்டியம்மாளுடன் சில விஷயங்கள் பேச வேண்டும்...............' என்று கூறிக்கொண்டிருக்கும்போதே காமகோட்டியம்மாள் அவ்விடம் வந்தாள். உடனே இன்ஸ்பெக்டர், குணசீலரைத் தனியே விட்டுச்சென்றார். காமகோட்டியம்மாள், குணசீலரைப்பார்த்து, 'குணசீலரே, நீங்கள் என்னுடன் பேச விரும்பினீர்களா ? நீங்கள் கேட்கும் கேள்விகளுக்கு என்னால் கூடிய வரையில் பதில் சொல்லத் தடையில்லை,' என்று கூறினாள்.

குணசீலர் :—அம்மா, உம்முடைய தங்கையார் மதனசுந்தரி அம்மாள், எப்படி யிருக்கிறார் ?

காமகோட்டியம்மாள் :—இப்பொழுது கொஞ்சம் தேவை யில்லை. மதனசுந்தரி இப்பொழுது சாந்தமாகவே இருக்கிறாள். இன்னுஞ்சிறிது, நேரத்தில் நீங்கள் அவளு டன் பேச விரும்பினால், சிறிதுநேரம் பேசலாம். ஆனால் நீங்கள் அவளுக்குத் துன்பந்தரத் தகுந்த கேள் விகளைக் கேளாமலிருத்தல் நன்மை யென்று நினைக் கிறேன். அவளால் இத்துன்பத்தைச் சகிக்க முடிய வில்லை.

குணசீலர் :—அப்படியே ஆகட்டும். நான் அந்த அம்மாளுக் குத் துன்பத்தைத் தரக்கூடிய கேள்விகளைக் கேட்க மாட்டேன்; என்னால் கூடிய வரையில் அந்தம்மாளு டைய துன்பத்தைத் தீர்க்கவே வழி தேடுவேன். ஆனால் அதற்கு முன் நான் உம்மைச் சில கேள்விகள் கேட்க விரும்புகிறேன். நீங்கள் நான் கேட்கும் கேள் விகளுக்கு ஒன்றையும் ஒளிக்காமல் பதில் சொல்ல வேண்டும். அப்படிச் செய்வீரானால் உம்முடைய தங்கையாருக்குள்ள துன்பத்திற் பாதி துன்பத்தை ஒழித்தல் கூடும். நீர் நேற்று மாலை வெளியே சென் றிருந்தீர் அல்லவா ?

காமகோட்டியம்மாள் :—ஆம்; ஒரு கலியாணத்திற்குப் போ யிருந்தேன். அது முக்கியமா : எனக்கு வேண்டியவர் களுடைய கலியாணமாகையால் நான் போய்த் தீர வேண்டியதாய் இருந்தது. இரவு அங்கிருந்து வருவ தற்கு நெடுநேரமாய் விட்டது.

குணசீலர் :—எத்தனை மணிக்குத் திரும்பி வந்தீர் ?

காமகோட்டியம்மாள்:—சற்றேறக்குறைய இரவு ஒரு மணியிருக்கலாம்.

குணசீலர்:—உடனே படுக்கைக்குப் போய்விட்டீரா?

காமகோட்டியம்மாள்:—இல்லை. நான் வந்ததும் என் தங்கை மதனசுந்தரியின் வேலைக்காரி, அவளுக்கு உடம்பு சௌக்கியமில்லை யென்று கூறினள். உடனே நான் போய் அவளைப் பார்த்தேன். அவள் தேக அசௌக்கியத்தினல் வருந்திக்கொண் டிருந்தாள். ஆகையினல் நான் நெடுநேரம் அவள் பக்கத்திலிருந்து தேறுதல் கூறித் தூங்கப்படுத்திவிட்டு, உடனேபோய் என் படுக்கையறையில் படுத்துக்கொண்டேன்.

குணசீலர்:—ஆகையினல் நேற்று நீர் வெளியே செல்லுவதற்கு முன்பாவது, வீட்டுக்குவந்த பிறகாவது, மோகனசுந்தரர் கொலையுண்ட செய்தி தெரிவதற்குமுன் அவர் கொலையுண்ட இடத்திற்குச் செல்லவே யிலலையோ?

காமகோட்டியம்மாள்:—ஐயா, நான் அங்குச் செல்லவேயில்லை. நான் அங்கு ஏன் போகப்போகிறேன்?

---

## நான்காம் அத்தியாயம்

---

### சகோதரிகளின் சாகஸம்.

குணசீலர், காமகோட்டியம்மாளைப் பார்த்து, 'நீங்கள் கூறுவது உண்மைதானே?' என்று கேட்டார்.

காமகோட்டியம்மாள்:—அதென்ன அப்படிக்கேட்கிறீர்களே? நேற்று முழுவதும் நானவ்வறையினருகிற் சென்றதே

யில்லை. அப்படிச்சென்றிருந்தால், அதை நான் ஏன் மறைத்துக் கூறப்போகிறேன்?

குணசீலர்:—அம்மா, ஒரு வேளை நீங்கள் அதைப்பற்றி மறந்துவிட்டிருக்கலாம் என்று எண்ணினேன். இவ்வீட்டிலுள்ளவர்களில் மோகனசுந்தரர் இறப்பதற்கு முன் எக்காரியத்தை முன்னிட்டாகிலும் அவ்வறையினிடம் யாராயினும் சென்றதுண்டா என்பதை நான் அறிந்துகொள்ளவேண்டுவது முக்கியம். நீங்கள் வீட்டிற்குத் திரும்பிவந்த போதாவது, அல்லது நேற்று இரவு எந்த நேரத்திலாவது, ஒரு விஷயமும் அறியவில்லையோ?

காமகோட்டியம்மாள்:—ஐயா, நான் ஒன்றையும் அறியவில்லை. தூக்கத்தில் ஒரு சிறு சத்தம் கேட்டாலும் நான் விழித்துக்கொள்ளுவது வழக்கம். அப்படியிருந்தும், இரவு நடந்த கொலையைப்பற்றி எனக்காவது, இந்த வீட்டிலுள்ள மற்றவர்களுக்காவது தெரியாமலிருந்தது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

குணசீலர்—அது புதுமையல்ல. இப்படிப்பட்ட கொலைகள் எத்தனையோ நடந்திருக்கின்றன. பலபேர் குடியிருக்கும் வீடுகளில் இப்படிப்பட்ட கொலை நடப்பதுண்டு. ஆனால் துப்பாக்கிச் சத்தம் ஒருவருக்கும் கேட்பதில்லை. நல்ல தூக்கத்தில் அப்படி யாராகிலும் சத்தங்கேட்டு எழுந்திருந்தாலும் பிறகு ஒருவிதச் சத்தமுமில்லாமலிருப்பதை யறிந்து என்னவோ என்று எண்ணிக்கொண்டு, சோமற் படுத்துக்கொள்ளுவது வழக்கந்தான். இவ்வீட்டு வேலைக்காரியாகிய தங்கம் என்பவள், பிணத்தைக் கண்டு கூவியவுடன் அக்கூச்சலுக்குக் காரணம் எதுவாயிருக்கலாம் என்று எண்ணினீர்கள்?

காமகோட்டியம்மாள்:—வீடுதான் தீப்பிடித்துக் கொண்டதோ, என்னவோ என்று நினைத்து, என் தங்கை மதனசுந்தரியின் படுக்கையறைக்கு ஓடினேன். அப்பொழுது கீழிருந்து, 'கொலை! கொலை!!' என்னும் பெருஞ் சத்தங்கேட்டது. இதைக்கேட்டால் ஏற்கனவே தேக அசௌக்கியத்தோடிருக்கும் என் தங்கைக்கு அதிகபயமுண்டாகும் என்று கருதி, இச்சத்தத்தை அடக்கலாமென்று கீழே ஓடிவந்தேன். பிறகு நான் கண்ட விஷயம் உங்களுக்கே தெரியும்.

குணசீலர்:—நீங்கள் கீழே ஓடிவருவதற்குமுன் அவ்வறையினிடத்தில் யார் யார் இருந்தார்கள்?

காமகோட்டியம்மாள்:—பிணத்தை முதல் முதல் கண்ட வேலைக்காரி தங்கமும், மற்றொரு வேலைக்காரியாகிய கமலமும், சமையற்காரனாகிய தியாகராயனும், அம்பலவாணருடைய வேலைக்காரனாகிய மாணிக்கமும், மதனசுந்தரியின் வேலைக்காரியாகிய மீனாக்ஷியுமே அங்கிருந்தார்கள்.

குணசீலர்:—அவர்கள் முகத்தோற்றத்தால் அப்பொழுது நீங்கள் ஏதேனும் அறிந்ததுண்டா?

காமகோட்டியம்மாள்:—எனக்கு ஞாபகமில்லை. அவர்களை நான்கூர்ந்து கவனிக்கவுமில்லை. மோகனசுந்தர முதலியாரவர்களுடைய பிணத்தைக் கண்டவுடன் எனக்குப் பிரமித்துப் போய்விட்டது. சிறிதுநேரத்திற்கெல்லாம் இவ்வீட்டிலுள்ள எல்லோரும் அவ்விடத்திற்கு வந்தார்கள்.

குணசீலர்:—அவர்களில் முதலில் வந்தவர் யார்?

காமகோட்டியம்மாள்:—'அதுவும் எனக்குத் தெரியாது. என் தங்கை மெள்ளவந்து, என் தோளைப் பிடித்துக்

கொண்டு, வாய்விட்டு அலறி அழ ஆரம்பித்தாள். மரகதவல்லியம்மாள், தம்முடைய புத்திரர் கொலையுண்டு கிடப்பதைக் கண்டு ஆறாத்துயரமடைந்தார்கள். கடைசியாக அம்பலவாணர், மாடிப்படியில் இறங்கி வந்தவர், அவ்வறைக்குள் புகுவதற்குப் பயப்படுபவர் போலத் தயங்கி நின்றார். அவருடைய கண்கள் மிரட்சியடைந் திருந்தன. பிறகு...' என்று சொல்லி மேலொன்றும் சொல்ல விரும்பாதவள் போல் தயங்கினாள்.

குணசீலர்:—பிறகு...என்ன ஆயிற்று ?

காமகோட்டியம்மாள்: —பிறகு அம்பலவாணர் வருகையைக் கண்ட அவர் தாயார் மரகதவல்லியம்மாள், அவரைப் பார்த்து ஏதோ சில வார்த்தைகளைச் சொன்னார்கள். அவற்றைக் கேட்டவுடன் அம்பலவாணர், பெருந் துயரத்தோடு அழத் தலைப்பட்டார். அதன்பின் மரகதவல்லியம்மாள், உங்களை உடனே அழைத்துக் கொண்டு வரும்படி அவருக்குக் கட்டளையிட்டார்கள். அவர் உங்களை அழைத்துக்கொண்டு வர வந்துவிட்ட பிறகு, சமையற்காரனாகிய தியாகராயன், இவ்விஷயத்தைப் போலீஸுக்குத் தெரிவித்து, இன்ஸ்பெக்டர் அவர்களையும், கமிஷனர் அவர்களையும், ஒரு போலீஸ் சேவகனையும் அழைத்துவந்தான். அதன் பிறகு நடந்த விஷயம் உங்களுக்குத்தெரியும்.

குணசீலர்:—ஏன் அம்மா, உம்முடைய தங்கையாருக்குக் கலியாணமானது முதல் நீர் அவருடன் இங்கேயே தான் இருந்து வருகிறீரோ ?

காமகோட்டியம்மாள்:—இல்லை...இல்லை. சென்ற ஒருவருஷமாகத்தான் நான் இங்கிருந்து வருகிறேன். எனக்கு

எங்களுடைய வீட்டிலேயே இருக்கவேண்டு மென்பது தான் விருப்பம். ஆனால் என் தங்கையின் கட்டாயத் தின்மேல் இங்கிருக்கவேண்டியதாயிற்று.

குணசீலர்:—அம்மா, நான் இவ்விஷயத்தைப்பற்றி மரகத வல்லியம்மாள் அவர்களையும் கேட்டேன். அவர்கள் இதைப்பற்றிக் கூறியது சிறிது முரண்பாடாகத் தோன்றுகிறதே!

குணசீலர் இவ்வாறு கூறியதைக் கேட்டவுடனே அவள் தேகம் நடுங்கியது; முகத்தில் பயக்குறி தோன்றியது. உடனே அவள் தாழ்ந்த குரலில், 'ஆ! மரகதவல்லியம்மாள் இதைப்பற்றிக் கூறினார்களா? அப்பொழுது இதைப்பற்றி யுங்களுக்கு அதிகமாகத் தெரிந்திருக்கலாம். ஐயா, என் தங்கைக்குக் கலியாணமான சிலநாட்களுக்கெல்லாம் எங்களுடைய தாய் தந்தையர் இருவரும், எங்களுடைய தமயனாரும் இறந்துவிட்டார்கள். ஆகையால், என்னை ஆதரிப்பவர் ஒருவரும் இல்லாமற்போகவே, நான் என் தங்கையின் விருப்பத்தின்படி இவ்விடத்திற்கு வந்துவிட் டேன். எனக்கு இன்னும் விவாகமே ஆகவில்லை. பெரியவ ளிருக்கச் சிறியவளுக்கு மணம் செய்வது எங்களில் வழக்க மில்லையானாலும் என் தாய் தந்தையர் பிரபுவின் புத்திரரான மோகனசுந்தரர் என் தங்கைமீது காதல் கொண்டிருப்பதைக் கண்டு, 'இச்சமயம் தவறினால் இப்படிப்பட்ட பணக்காரர் சம்பந்தம் நமக்குக் கிடைக்காது,' என்று கருதி, என் தங்கைக்கு வெகு தீவிரமாகக் கலியாணம் நடத்திவிட்டார் கள். 'பணமிருந்தால் பத்தும் நடக்கும்,' என்னும் வாக்கியம் உண்மைதானே? பிறகு அவர்கள் காலகதியால் இறந்துவிட் டார்கள். கலியாணமான சிலமாதங்கள் வரையில் என் தங்கையினிடம் எல்லோரும் பட்சமாயிருந்தார்கள். பிறகு

நாள்போகப் போக, மரகதவல்லியம்மாள் அவர்களும், அவருடைய சிறிய புத்திரர் அம்பலவாணரும் அவளை வெறுக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் வெறுப்புக்கு என் தங்கையையன்றி நானும் பிறகு பாத்திரியாய்விட்டேன். சில மாதங்களாக என் தங்கை மதனசுந்தரி, கருப்பவதியாயிருப்பதால், அவளுக்குப் பிள்ளை பிறந்தால் தமக்குரிய பாகம் போய்விடுமென்று அம்பலவாணர் கருதி, அந்த உயிலை (will) ரத்துசெய்ய முயன்றார். அம்பலவாணர், மரகதவல்லியம்மாள் அவர்களுடைய செல்வப்புத்திரர். கடைசியில் விஷயம் இப்படி முடிந்தது,' என்று கூறினள்.

குணசீலர்:—இதைக் கேட்பதற்கு எனக்குப் பரிதாபமாகத் தானிருக்கிறது. உம்முடைய தங்கையாருக்கு இக்கலியாணத்தில் விருப்பமில்லையென்று எப்பொழுதாகிலும் நீர் எண்ணியதுண்டா?

காமகோட்டியம்மாள்:—விருப்பமில்லாமையா? ஆ! நீங்கள் கூறுவதன் கருத்து எனக்குத் தெரிகிறது. அவர்களும்—மரகதவல்லியம்மாள் முதலியவர்களும்—இவ்வாறு கருதியதுண்டு. அப்படியும் இருக்கலாம் என்பது என்னுடைய கருத்து. ஆ! ஆ!! என் தங்கை மோகனசுந்தரரிடம் எவ்வாறு அன்போடு இருந்திருக்கக்கூடும்? அவர் எப்பொழுதும் அவளை வெறுத்து வந்ததாகத் தெரிகிறது. அவர் அவளைத் திட்டாதநேரம் கிடையவே கிடையாது. எப்பொழுதும் அவள் துன்பமனுபவித்தாளே யொழிய இன்பமனுபவிக்கவில்லை. இவற்றையெல்லாம் நான் இங்குவருவதற்கு முன் அவள் எனக்குக் கடிதமூலமாகவும் தெரிவித்ததில்லை. இங்குவந்து நேரிற்கண்ட பிறகுதான் எனக்கு விஷயம் தெரியவந்தது. ஐயோ! அவளுடைய வாழ்க்கையொரு வாழ்க்

கையா! அவளுடைய தலைவிதியை அவள்தானே அனுபவித்துத் தீரவேண்டும்? இல்லாவிட்டால் அழகி லும் ஆண்மையிலும் சிறந்த எங்களுடைய அத்தை மகன் அருளானந்தனுக்கு அவள் மாலைசூட்டி யிருக்க மாட்டாளா?

குணசீலர்:—சரி, அம்மா, ஆனது ஆய்விட்டது. இனி அதைப்பற்றிக் கவலைப்பட்டு ஆவதென்ன? நீங்கள் நான் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதிற் சொல்லிய தில் எனக்குச் சந்தோஷமே. ஆனால் மற்றொருவிஷயம்: நான் தங்களுடைய தங்கையாரை இப்பொழுது சில நிமிஷம் வரையில் கண்டு பேசமுடியுமா?

காமகோட்டியம்மாள்:—ஐயா, சற்று இங்கேயே இருங்கள். நான் போய் அவள் எப்படியிருக்கிறாள் என்று பார்த் துக்கொண்டு வருகிறேன். அவள் பேசத்தகுந்த நிலை மையிலிருந்தால் நீங்கள் அவளுடன் பேசுவதில் யாதொரு தடையுமிராது.

இவ்வாறு காமகோட்டியம்மாள் கூறிமுடித்து, மாடிக் குச்சென்றாள். துப்பறியும் குணசீலர், ஏதோ ஆழ்ந்த சிந்தனையோடு உட்கார்ந்துகொண் டிருந்தார். அவர் உட் கார்ந்திருந்த அறைமுழுவதும் அமைதியே குடிகொண்டிருந் தது. சிறிதுநேரங்கழித்து மாடிக்குச்சென்ற காமகோட்டி யம்மாள் கீழிறங்கி வந்து, குணசீலரைப்பார்த்து, 'ஐயா, தாங்கள் இப்பொழுது வந்தால் என் தங்கையோடு பேச வேண்டிய விஷயங்களைப் பேசலாம்,' என்று கூறினாள்.

பிறகு குணசீலரும் காமகோட்டியம்மாளும் மாடிக்குச் சென்று, மதனசுந்தரியின் அறைக்குட் புகுந்தார்கள். காம கோட்டியம்மாள் படுத்திருந்த தன் தங்கை மதனசுந்தரியைப் பார்த்து, 'அம்மா, மதனசுந்தரி, எழுந்திரு. துப்பறியும்

உத்தியோகஸ்தர் இதோ வந்திருக்கிறார். இவர், உன்னுடன் தனிமையில் ஏதோ விஷயம் பேசவிரும்புகிறார். இவர், நாம் இத்துன்பத்திலிருந்து நீக்குவதற்கு வேண்டிய உதவியை நமக்குச் செய்வார். இவர் கேட்கும் கேள்விகளுக்கு நீ பொறுமையாகப் பதில் சொல்லவேண்டும். எழுந்து உட்காரு,' என்று கூறிவிட்டுக் குணசீலருக்கு அங்கிருந்த நாற்காலியொன்றைக் காட்டி, அதில் அவரை உட்காரச்செய்து, அவ்வறையின் கதவை வெளிப்புறமாகச் சாத்திக்கொண்டு சென்றாள்.

மதனசுந்தரி, தன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டு, குணசீலரைப் பார்த்து, 'ஐயா, என் கணவரைக் கொன்றவர் யார்? உமக்குத்தெரியுமா?' என்று தன்தேகம் நடுங்க வாய்குழறக் கேட்டாள்.

குணசீலர், மதனசுந்தரியைப் பார்த்து, 'அம்மா, இவ்வறையில் வேறு யாராகிலும் இருக்கிறார்களா?' என்று கேட்டார்.

'ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? இங்கு என்னைத் தவிர வேறு ஒருவரும் இல்லை,' என்று கூறினாள் மதனசுந்தரி.

இதற்குள் அவ்வறையில் திரை மறைவில் ஏதோ காரியம் பார்த்துக்கொண்டிருந்த அவள் வேலைக்காரி மீனாக்ஷியென்பவள், அத்திரை மறைவிலிருந்து வெளிவந்தாள். அவளைக் கண்டவுடன் மதனசுந்தரிக்கு ஆச்சரியமுண்டாயிற்று. அவள் உடனே மீனாக்ஷியை நோக்கி, 'மீனாக்ஷி, நீ வெளியே போ. நான் இவருடன் சிறிதுநேரம் பேசவேண்டும்,' என்று கூறினாள். அவ்வேலைக்காரி, உடனே வெளியிற் சென்றாள்.

பிறகு மதனசுந்தரி, குணசீலரைப் பார்த்து, 'ஐயா, தங்களை ஏமாற்றவேண்டுமென்று நான் அப்படிச் செய்தேன்

என்று நீங்கள் எண்ணவேண்டா. வேலைக்காரி அறைக்குள் ளிருந்தது எனக்குத் தெரியாது,' என்றாள்.

குணசீலர்:—அது சரி. நான் அப்படி நினைக்கவேயில்லை. அம்மா, உம்முடைய கணவரைக்கொன்ற கொலையாளி யை இன்னும் கண்டுபிடிக்கவில்லை. என்னால் கூடிய வரையில் முயன்று அக்கொலையாளியைக் கண்டுபிடிக்க வேண்டுமென்றே நான் இங்குவந்தேன். இவ்விஷயத் தில் உங்களுடைய உதவியும் எனக்கு இருக்கவேண்டு வது அவசியம்.

மதனசுந்தரி:—என்னுடைய உதவியா? இவ்விஷயத்தில் தங்களுக்கு நான் என்ன உதவி செய்யக்கூடும்? இஃது எப்படி நடந்தது என்பது எனக்கு எப்படித்தெரியும்? நான் அப்பொழுது தூங்கிக்கொண்டிருந்தேன் என் பதை நீங்கள் கேள்விப்படவில்லையா?

குணசீலர்:—அம்மா, இப்பொழுது தங்களுக்கு ஞாபகமிருக் கும் வரையில் நன்றாக யோசித்து நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லுங்கள். நேற்றுச் சாயங்காலம் விருந்து நடைபெற்ற பிறகு என்ன விஷ யம் நடந்தது என்பதை நான் தெரிந்துகொள்ள வேண்டும்.

மதனசுந்தரி:—ஒன்றும் புதுமையாக நடைபெறவில்லை. எல்லாம் வழக்கம்போலத்தான் நடைபெற்றது. நீதி பதி நீலகண்ட முதலியாரும் அவர் புத்திரியும் இங்கு விருந்து சாப்பிட்ட பிறகு ஒருவரோடொருவர் வழக் கம்போல் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். என் தமக்கையார் காமகோடியம்மாள் நுங்கம்பாக்கத் தில் நடந்த ஒரு கலியாணத்திற்குப் போய் விட்டார். என் மைத்துனர் அம்பலவாண முதலியார், எங்கோ

சென்றார். அவர் எந்த இடத்திற்குச் சென்றார் என்பது எனக்குத் தெரியாது. எனக்குத் தேக சௌக்கியமில்லாமையினால் நான் சீக்கிரம் போய்ப் படுத்துக்கொண்டேன்.

குணசீலர்:—உங்களுடைய உடம்புக்கு என்ன?

மதனசுந்தரி:—ஒன்றுமில்லை. ஏதோ ஒருமாதிரியாக இருந்தது; அவ்வளவுதான்.

குணசீலர்:—நீங்கள் அப்பொழுது சந்தோஷமாக இல்லையென்று நினைக்கிறேன். உம்முடைய தமக்கையார், மாமியார், மைத்துனர் முதலியவர்களை விசாரித்ததிலிருந்து உமக்கு உம்முடைய கணவரிடத்தில் வருத்தம் ஏற்பட்டிருந்ததாக அறிந்தேன். அம்மா, நீர் என்னிடம் ஒன்றையும் ஒளிக்கவேண்டியதில்லை. நீங்கள் உமது கணவருடன் இருக்கப் பிடிக்காததனால் தனியே இருக்கக்கருதிப் படுக்கையறைக்கு வந்துவிட்டீர்களோ?

மதனசுந்தரி:—ஆம்! எனக்கு...அவளுடைய பார்வை சிறிதும் பிடிக்கவில்லை...அவள்...அக்கலாவதி ... என்மீது என் கணவருக்கு இருந்த அன்பு முழுவதையும்... கொள்ளை...கொண்டாள். அதனால் அவர் என்னைப் புறக்கணித்தார். என் முன்னிலையில் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்தபார்வை யென் மனத்தை வாட்டியது. அவர்கள் ஒவருரையொருவர் அவ்வாறு பார்த்து என்னைப்பார்த்த பார்வையானது, நான் அங்கிருத்தல் அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்பதை நன்றாக எனக்குக்காட்டி விட்டது. ஐயோ! அவர்கள் இன்பத்தை நான் ஏன் கெடுக்கவேண்டும்? ஆ! அந்தக் காட்சியைக் கண்டு அவ்விடமிருக்கப் பிடிக்காததால் நான் என் படுக்கை யறைக்கு வந்துவிட்டேன்.

குணசீலர் :—அம்மா, நீர் கலாவதியின் மீது அவ்வாறு கருதுவதற்கு என்ன இடமிருக்கிறது? பழைய நண்பராகிய நீதிபதி நீலகண்ட முதலியார் மகளாகையால் உம்முடைய கணவர் மோகனசுந்தர முதலியார் கலாவதியிடம் வேடிக்கையாக விளையாடி யிருக்கலாம். இதை விபரீதமாகக் கொள்ளலாமோ?

மதனசுந்தரி :—ஐயா, இஃது ஒரு முறை இரு முறையல்ல. பலமுறை யிப்படி நடக்க நான் கண்டதுண்டு. 'பாம்பின் கால் பாம்பறியும்' என்பது போல எனக்கு அக்கலாவதியின் எண்ணம் இன்னதென்பது தெரியும். ஆகையினால் நான் என் இடத்திற்கு வந்து விட்டேன். இவ்வெண்ணம் நெடுநேரம் என் தூக்கத்தைக் கெடுத்தது. என் தலை சுற்றுவதுபோல் தோற்றியது. பிறகு என் தமக்கையார் கலியாண வீட்டிலிருந்து வந்து, என்னைத் தேற்றிப் படுக்கவைத்து விட்டுத் தம்முடைய படுக்கையறைக்குப் போய்விட்டார். பிறகு நான் தூங்கி விட்டேன்.

குணசீலர் :—நீங்கள் உம்முடைய கணவர் வருகைக்காக எதிர்ப்பார்க்க வில்லையோ?

மதனசுந்தரி :—இல்லை. அவர் இங்கு வருவதில்லை. நெடுநேரம் வரையில் தம்முடைய வாசிப்பு அறையில் ஏதாகிலும் வாசித்துவிட்டுப் பிறகு அங்கேயே படுத்துக் கொள்வது வழக்கம்.

குணசீலர் :—சரி; உங்களுக்கு வேறு ஏதாகிலும் விஷயம் ஞாபகத்திலிருக்கிறதா?

மதனசுந்தரி :—பிறகு ஏதோ ஒரு பெருஞ்சத்தம் என்காதில் கேட்டது. மாடியிலிருந்து பலர் அங்குமிங்கும் ஓடி

வதுபோல் தோன்றியது. உடனே நான் என் படுக்கையை விட்டெழுந்து, அக்கூச்சல் கீழே என் கணவருடைய வாசிப்பறையினிடத்திலிருந்து வருகிறது என்பதை யுணர்ந்து, அங்குச் சென்றேன். அங்கு வீட்டிலுள்ள எல்லோரும் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். பிறகு என் கணவர் கொலையுண்டு கிடப்பதையுங் கண்டேன். ஆ! நான் என்ன சொல்லுவேன்? அவருடைய பயங்கரமான கண்கள் என்னையே உற்று நோக்குவன போலக் காணப்பட்டன. அக்காட்சி யென்னைப் பயங்கொள்ளச் செய்தது. பிறகு என்னை என் தமக்கையார் என் படுக்கையறைக்கு அழைத்து வந்ததுதான் எனக்குத் தெரியும். இப்பொழுதுதான் என் நினைவு எனக்கு வந்தது.

குணசீலர்:—அம்மா, நீர் நேற்று உம்முடைய கணவர் வாசிப்பறையிலிருந்த பொழுது சுமார் மணி எத்தனை யிருக்கலாம்?

மதனசுந்தரி:—என்ன?——வாசிப்பு அறையிலா? நான் நேற்று அங்குச் செல்லவே யில்லையே! கடைசியாக நான் அவ்வறைக்குச் சென்றது எப்பொழுது என்பதும் எனக்கு நினைவில்லை. ஒருவேளை அப்படிச் சென்றிருந்தால், பல நாட்களுக்கு முன் சென்றிருக்கக் கூடும். நீங்கள் ஏன் என்னை அதைப்பற்றிக் கேட்கிறீர்கள்?

குணசீலர்:—அம்மா, நன்றாக யோசித்துப் பதில் கூறுங்கள். நன்றாக யோசித்தால் நீர் அவ்விடத்தில் இருந்தது உங்களுக்கு ஞாபகத்திற்கு வரலாம். நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள்.

மதனசுந்தரி:—நான் நன்றாகச் சிந்தித்துத்தான் சொல்லுகி

றேன். நான் அங்குப் போனதேயில்லை...போனதே யில்லை. என்ன கருத்துக் கொண்டு நீர் இப்படியெல் லாம் கேட்கின்றீரோ எனக்குத் தெரியவில்லையே !

குணசீலர் :—உங்களுக்கு ஞாபகமில்லையா ? அவ்வறையில் தொங்கும் பித்தளை விளக்கில் உம்முடைய தலைமயிர் சிக்கிய விஷயம் உங்களுக்கு ஞாபகமில்லையா ?

இப்படிச் சொல்லிக்கொண்டே குணசீலர், தம்முடைய சட்டைப் பையில் பத்திரப் படுத்தி வைத்திருந்த மயிர்ச் சுருளிலிருந்து ஒரு மயிரிழையை யெடுத்துத் தம்முடைய இரு கரங்களாலும் நீட்டிப்பிடித்து அவளை நோக்கி, 'இதோ, பாருங்கள். இஃது உம்முடைய தலைமயிரல்லவென்று நீங்கள் கூற முடியுமா ? உம்முடைய தலை மயிரும் இதுவும் நிறத்தி லும் நீளத்திலும் ஒத்திருப்பது உங்களுக்குத் தெரியவில் லையா ? நான் அவ்வறையில் தொங்கும் பித்தளை விளக்கின் அடியில் இது தொங்குவதைக் கண்டு எடுத்தேன்,' என்று கூறினார்.

உடனே மதனசுந்தரி, அதை அவரிடமிருந்து பிடுங்கிப் பார்த்து, 'இஃது என்னுடைய தலைமயிரல்ல வென்பது உண்மை. உமக்குக் கண் குருடோ ? நீர் இதை எவ்வாறு மெய்ப்பிக்க முடியும் ?' என்று கடுகடுத்துக் கூறினாள்.

குணசீலர், அவளை உற்றுப் பார்த்து, 'அம்மா, நிதா னித்துக் கூறுங்கள். உம்முடைய பார்வையே உண்மையை விளக்கிவிட்டது. உண்மையைக் கூறுங்கள். நீங்கள் எப் பொழுது அவ்வறைக்குச் சென்றீர்கள் ? எப்பொழுது உங் களுடைய தலைமயிர் அங்குள்ள விளக்கிற் சிக்கிக் கொண் டது ?' என்று கேட்டார்.

மதனசுந்தரி, அவர்கூறியதைக்கேட்டு ஒன்றும்பேசாமல் சிறிதுநேரம் மௌனமாயிருந்தாள். பின்பு அவள் முகத்தில்

பொய்ச் சிரிப்புத் தோன்றியது. அவள் குணசீலரை நோக்கி "ஏன்?—ஏன்? உண்மைதான். ஐயா, நான் இவ்வாறு கூறியது என் அறியாமையினாலேயே. நான் அவ்வறையில் மூன்றாம் நாள்—உம்—உம்— இல்லை——இல்லை—நேற்றுக்காலையில் இருந்ததுண்டு. நான் அங்கே—வேலைக்காரி—தங்கம் அவ் வறையை நன்றாகப் பெருக்கினாளோ? என்று பார்ப்பதற்கு——ஆம்—ஆம்!! அதற்காகத்தான் சென்றேன். அப்பொழுது தான் போலிருக்கிறது—ஆம்! அப்பொழுதுதான் அவ்விளக் கில்—என் தலைமயிர் சிக்கிக்கொண்டது. என்னுடைய கண வர், படிப்பதற்காக அவ்விளக்கைத் தாழ்த்தி வைத்திருந்தார் போலிருக்கிறது! அப்படித்தான் இருக்கவேண்டும்!" என்று தயங்கித் தயங்கிக் கூறி முடித்தாள்.

குணசீலர், 'உம்—பார்த்தீர்களா? அவ்விஷயம் உங்களுக்கு ஞாபகம் இருக்குமென்றே நான்எண்ணினேன்,' என்று கூறிக் கொண்டே அம்மயிரிழையை அவளிடமிருந்து வாங்கிச்சுற்றி மற்ற மயிரிழைகளுடன் தம்முடைய சட்டைப்பையில் வைத் துக் கொண்டார். தான் கூறிய பொய்ம்மொழியைத் துப் பறிவதில் வல்லவரான குணசீலர் அறிந்து விட்டார் என்ப தை யறிந்ததும் மதனசுந்தரியின் தேகம் நடுங்கியது.

குணசீலர், மெள்ள எழுந்திருந்து அவளைப் பார்த்து, 'அம்மா, உம்மை இன்னும் பல கேள்விகள் கேட்டுத் துன் பப்படச் செய்ய எனக்கு விருப்பமில்லை. சற்று ஓய்வாகப் படுத்துக்கொண் டிருங்கள். இக்கொலையைச் செய்த உண் மைக் கொலையாளியைக் கண்டு பிடிப்பதில் கூடியவரையில் நான் முயற்சி செய்வேன் என்பதை நீங்கள் உறுதியாகக் கொள்ளலாம். மற்றொரு முறை நான் உம்மை உமக்குச் சௌகரியமான போது வந்து பார்க்கிறேன்,' என்று கூறி னார்.

இதைக்கேட்டவுடனே அவளுக்குக் கண்களில் நீர் பெருகியது. ஆனால் அதைக் குணசீலர் அறியாதபடி அவளுடைய முந்தானையால் ஒற்றிக்கொண்டாள். பிறகு குணசீலர், அவ்வறையை விட்டு வெளியே வந்தார். அதற்குள் காமகோட்டியம்மாள் அவ்விடம் வந்து குணசீலரைப் பார்த்து, 'ஐயா, நீங்கள் பேசவேண்டிய விஷயங்களைப் பேசி முடித்தீர்களோ?' என்று கேட்கக் குணசீலர், 'ஆ! ஆ!! ஆயிற்று,' என்று கூறி மாடிப்படியில் இறங்கினார். உடனே காமகோட்டியம்மாள், தன் தங்கையின் அறைக்குட் சென்றாள். காமகோட்டியைக் கண்டதும் மதனசுந்தரிக்குத் துக்கம் பொங்கி எழுந்தது. உடனே அவள் வாய்விட்டு, 'அக்கா! அக்கா!! ஐயோ! அவர் அதைத் தெரிந்து கொண்டார்—தெரிந்து கொண்டார்,' என்று கூறி அரற்றினாள். அவ் வார்த்தைகள் குணசீலர் காதுகளில் விளக்கமாகக் கேட்டன.

---

## ஐந்தாம் அத்தியாயம்

---

### பின்னும் ஒரு புதுமை.

துப்பறியும் குணசீலர், மாடிப்படியை விட்டுக் கீழிறங்கியதும் கூடத்தில் வேலைக்காரி தங்கத்தைக்கண்டார் அவர் அவளைப்பார்த்து, 'அம்மா, நீ போய்ச் சமையற்கார தியாகராயனை என்னிடம் வரச்சொல்லுகிறாயா? நான் அவனுடன் சில வார்த்தைகள் பேசவேண்டும்,' என்றார்.

'ஆ! ஆ!! அப்படியே அனுப்புகிறேன்,' என்று வணக்கத்துடன் கூறிச் சமையலறைக்குச் சென்றாள் தங்கம்.

குணசீலர், நேரே வாசிப்பறைக்குச் சென்று உட்கார்ந்தார். அவருக்கு அப்பொழுது பற்பல எண்ணங்கள் ஒன்றின் பின் ஒன்ருகத்தோன்றின. அவர், தாம் மதனசுந்தரியினிடமிருந்து அறிந்த விஷயங்களைப் பற்றித் திரும்பவும் சிந்திக்கத் தொடங்கினர். மதனசுந்தரியும் கொலை நடந்த அவ்வறையில் சென்ற இரவு இருந்தது உண்மையேயென்பது அவருக்குப் புலப்பட்டது. மதனசுந்தரியின் தலைமயிரை அவளுக்குக் காட்டியபொழுது அவள் முகமிருந்த மாறுபாடு அப்பொழுது அவர் கண்முன் தோன்றியது. மோகனசுந்தர முதலியாரைத் துப்பாக்கியால் சுட்டுக்கொன்றவள் அவளேயென்பது அவருக்கு விளக்கமாயிற்று. 'அவள் அவ்வாறு தன்னுடைய கணவனை ஏன் கொன்றிருக்கவேண்டும்? எந்த மனைவிதான் தன் சொந்தக் கணவனைக் கொலை புரியச் சம்மதிப்பாள்? ஒருவேளை அவள் கணவர் மோகனசுந்தர முதலியார் அவள் வீட்டிலேயே—ஏன்?—அவள் முன்னிலையிலேயே வேருெருத்தியை—நீதிபதி நீலகண்ட முதலியார் புத்திரி கலாவதியை—மனமாரக் காதலித்து, அவளுடன் சரசவார்த்தைகள் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டு, ஏற்கனவே அவர்மீது வெறுப்புற்றிருந்த அவளுடைய மனம் அவளை அவ்வாறு செய்யத் தூண்டியிருக்குமோ? அப்படியானல் சன்னல் ஏன் திறக்கப்படவேண்டும்? அக்கொலையை—கடுங்கொலையை—காண்போர் நெஞ்சந்திடுக்கிடத் தகுந்த அக்கரேக் கொலையை—வேறு யாரோ கள்வன்—மோகனசுந்தரரிட மிருந்த பொருளை யபகரிக்க வெண்ணிய திருடன்—மோகனசுந்தர முதலியார் தம்முடைய அறையில் விழித்துக்கொண் டிருப்பதைக் கண்டு, தன் திருட்டு ஒருவருக்கும் தெரியாமலிருக்கும்படி அவரைக் கொலை செய்திருக்கிறுன் என்று காண்போர் நினைத்துக்

கொள்ளட்டும் என்று கருதி, அவ்வாறு சன்னலைத் திறந் திருக்கலாமோ? அப்படி நினைப்பதற்குங் கூடவில்லையே? சன்னல் கொலைநடந்த பின் வெகுநேரங் கழித்தன்றோ திறக்கப்பட்டதாகத் தெரிகிறது. அந்த இரத்தக் கறைகள் —சன்னலிலும் அவ்வறையில் தரைமேல் விரித்திருந்த கம்பளத்திலும் காணப்பட்ட அந்தக் கறைகள்—அச்சன்னல் கொலைநடந்த பிறகுதான் திறக்கப்பட்டது என்பதை விளக்குகின்றனவே? ஒரு சமயம் அவ்வேலை—சன்னலைத் திறந்ததும் பூமியிலுள்ள கம்பளியில் வேண்டுமென்றே இரத் தத்தைப் பூசியதுமாகிய அவ்வேலை—மதனசுந்தரியின் தமக் கையாகிய காமகோட்டியினுடைய வேலையாக இருக்க லாமோ? அவளுக்குத்தான் இக்காரியத்தைச் செய்யத் தகுந்த மனவலிமையுண்டு. துன்பத்தை யடக்கிக்கொள் ளூம் சக்தி அவளிடத்தில்தான் மிகுதியாகக் காணப்படு கிறது. இருந்தாலும், மதனசுந்தரிதான் இக்கொலையைச் செய்தவள் என்று திடீரென்று முடிவுகட்டிவிடவும் முடிய வில்லை. ஐயோ பாவம்! பெண் பேதையாயிற்றே! அவள் மீது ஆய்ந்தோய்ந்து பாராமல் குற்றஞ்சாட்டிவிடுவது என் ருல் கடவுளுக்கு அது சம்மதமாகுமா?' என்று அவர் எண்ணிக்கொண் டிருந்தார்.

அப்பொழுது சமையற்கார தியாகராயன், ஒரு பெரிய வெள்ளித் தட்டில் சிற்றுணவும் சில பழங்களும் ஒரு வெள் ளிக் கிண்ணத்தில் காபியும் கொண்டுவந்து குணசீலருக் கெதிரிலிருந்த மேஜையின்மேல் வைத்து, 'ஐயா அவர்களே, தாங்கள் காலையில் வந்தவர்கள்; இதுவரையில் பசியுடன் இருப்பீர்களென்று எங்கள் எஜமானியார் மதனசுந்தரியம் மாள் இதை யுங்களுக்கு அனுப்பினுர்கள். இப்பொழுதோ

மணி மூணாகிறது. தயவுசெய்து சாப்பிடவேண்டும்,' என்று கூறி ஒருபுறம் நின்றான்.

குணசீலர், அன்று காலையில் படுக்கையிலிருந்தெழுந்து காலைக் கடன் முடித்துக்கொண்டு காபி சாப்பிட்ட பிறகு அது வரையில் உணவு கொள்ளாமலிருந்ததால் அவருக்குப் பசி யதிகமாகவே யிருந்தது. உடனே அவர், தியாகராயன் கொண்டுவந்து வைத்த சிற்றுணவை உட்கொண்டார். பிறகு தியாகராயன், ஒரு செம்பு தண்ணீரை அவரிடங்கொடுத்து அவர் கையலம்பிக்கொண்ட பிறகு கை துடைக்கத் தான் கொண்டுவந்திருந்த ஒரு சிறு மலையாளத்துண்டை அவரிடங் கொடுத்தான். அவர் கை துடைத்துக்கொண்டு வெள்ளிக் கிண்ணத்திலிருந்த காபியைப் பருகினார். அதன்பின் அவர் தியாகராயனைநோக்கி, 'ஏன் அப்பா தியாகராயா! நீ இங்குச் சமையற்காரனோ? உனக்கு எத்தனை வயது ஆகிறது?' என்று கேட்டார்.

தியாகராயன்:—ஆம்! நான் இந்த வீட்டிச் சமையற்காரன். எனக்கு இப்பொழுது சற்றேறக்குறைய முப்பத்தைந்து வயதிருக்கலாம். நான் இங்கு இவ்வேலைக்கு வந்து ஒன்பது வருஷம் ஆகின்றது. இதற்குமுன் பல உயர்ந்த குடும்பங்களில் வேலை செய்திருக்கிறேன்.

குணசீலர்:—அப்படியா? சரி; சரி. தியாகராயா, இங்கு நேற்று இரவு நடந்த கொலையைப்பற்றி நீ ஏதாகிலும் கூறமுடியுமா?

தியாகராயன்:—ஐயா அவர்களே, நானா? எனக்கு இதைப் பற்றி ஒன்றுமே தெரியாதே?

குணசீலர்:—நேற்றிரவு எல்லோருக்கும் சமையல் தயாரித்து வட்டித்த பிறகு நீ என்னசெய்தாய்?

தியாகராயன்:—நான் என் வழக்கம்போல் செய்யவேண்டிய காரியங்களைச் செய்தேன். எல்லோரும் சாப்பிட்டான தும் வெள்ளிப் பாத்திரங்களை யெல்லாம் கழுவி, ஓர் அறையில் போட்டுப் பூட்டிவிட்டு, வேலைக்காரர்களெல் லாம் சாப்பிடும் இடத்திற்குச்சென்று இவ்வீட்டுக் குரியவர்களெல்லாம் படுக்கைக்குப் போகும் வரையில் அவ்வேலைக்காரர்களுடன் பேசிக்கொண் டிருந்தேன். பிறகு வீட்டின் கதவுகளையெல்லாம் சாத்தித் தாழிட்டு விட்டுப் படுக்கைக்குச் சென்றேன்.

குணசீலர்:—நீ இரவு ஒருவித சத்தத்தையும் கேட்க வில்லையா?

தியாகராயன்:—ஐயா அவர்களே, நான் ஒரு சத்தமும் கேட்கவில்லை. பகலெல்லாம் பாடுபட்டு இரவில் படுக் கையில் படுத்தால் பொழுதுவிடிகிற வரையில் என்ன நடந்தாலும் எனக்குத் தெரிவதில்லை. ஆனால் நேற்று இரவு மாத்திரம் இவ்வீட்டு வேலைக்காரி தங்கம் என்ப வள் கூவிய பயங்கரமான கூச்சல் என்னையும் எழுப்பி விட்டது. நான் முதலில் இம்மாளிகையில் யாராகி லும் திருடர்கள் புகுந்துவிட்டார்களோ என்னவோ என்றெண்ணிக்கொண்டு, வெள்ளிப் பாத்திரங்களை வைத்துப் பூட்டியிருந்த அறையினிடம் ஓடினேன். அவ்வறை பூட்டப்பட்டது பூட்டப்பட்டபடியே இருந் தது. பின்பு அங்கு மிங்கும் ஓடிக் கடைசியில் என்னு டைய எஜமானிருக்கும் அறையினிடத்திற்குச் சென் றேன். அங்குச்சென்று என் எஜமானர் இருந்த நிலை மையைக் கண்ட பிறகு நான் என்னசெய்தேன் என்பது எனக்குத் தெரியாது. எனக்கு மயக்கமுண்டாய்விட் டது. என்னுடைய அறிவு கலங்கியது.

குணசீலர்:—நீ செல்லுவதற்குமுன் அங்கு இருந்தவர்கள் யார் யார் தெரியுமா ?

தியாகராயன்:—வேலைக்காரி தங்கமும், மீனாக்ஷியும், எஜமானர் அம்பலவாண முதலியார் அவர்கள் வேலைக்காரனாகிய மாணிக்கமும் அங்கிருந்தார்கள் வேறு யாராகிலும் இருந்தாலும் இருந்திருக்கக்கூடும். எனக்குச் சரியாக ஞாபகமில்லை.

குணசீலர்;—அப்புறந்தான் வீட்டிலுள்ளவர்களெல்லாம் வதார்களோ ?

தியாகராயன்:—ஆம் ! ஆம் !! அதன் பிறகு மரகதவல்லியம்மாள் அவர்கள் இதைப் போலீஸுக்குத் தெரியப்படுத்தும்படி எனக்குக் கூறினார்கள். உடனே நான் வெளி போய்விட்டேன். இவ்வளவு தான் எனக்குத் தெரியும்.

குணசீலர்:—நீ எல்லோருக்கும் சாப்பாடு வட்டித்தபோது உன் எஜமானியார் மதனசுந்தரியம்மாளுக்கு வட்டித்தாயா ?

தியாகராயன்:—இல்லை. நான் அந்த அம்மாளுக்கு வட்டிக்கவில்லை. அந்த அம்மாள் சாப்பிடாமலே படுக்கைக்குப் போய்விட்டார்கள். நான் அந்த அம்மாளுக்கு உடம்பு சுகமில்லைபோ லிருக்கிறது என்று எண்ணிக் கொண்டு இருந்துவிட்டேன்.

குணசீலர்:—கடைசியில் இவ்வீட்டுக் கதவுகளை நீ தானே சாத்தித் தாழிட்டாய் ?

தியாகராயன்:—ஆம் ! நான்தான். நீதிபதி முதலியார் ஐயா அவர்களும் அவர்களுடைய புத்திரி கலாவதியம்மாளும் வெளியே சென்ற பிறகு நான்தான் கதவுகளைச் சாத்தினேன்.

குணசீலர்:—கலியாணத்திற்குப் போயிருந்த காமகோட்டி யம்மாள் வருகிற வரையில் நீ விழித்திருக்கவில்லையோ?

தியாகராயன்:—இல்லை. அந்தம்மாள் வருவதற்கு நேரமாகு மென்றும், அப்படி வந்தால் யாராகிலும் வேலைக்காரர் திறப்பார்கள் என்றும் நினைத்து நான் போய்ப்படுத்துக் கொண்டேன்.

குணசீலர்:—சரி; நீ சென்று, மீனாக்ஷியை இங்கே வரச் சொல்லுகிறாயா?

தியாகராயன்,—'அப்படியே வரச்சொல்லுகிறேன்,' என்று கூறித் தட்டை யெடுத்துக்கொண்டு வெளியே சென்றான்.

பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் வேலைக்கார மீனாக்ஷி, குணசீலரிடம் வந்து, 'நான்தான் மீனாக்ஷி யென்பவள். தாங்கள் என்னைக் கூப்பிட்டீர்களா?' என்று அவரைக்கேட்டாள்.

குணசீலர்:—அம்மா, நீ இரவு வேலைக்காரி தங்கம் கூவியதைக் கேட்டு இங்கு ஓடிவந்தபொழுது நடந்த விஷயம் உனக்குத் தெரியுமா?

மீனாக்ஷி:—நான்தான் தங்கம் கூவியதைக் கேட்டு முதலில் ஓடி வந்தவள். எஜமானர் கொலையுண்டு கிடப்பதைக் கண்டு அவள் கூவியதாகத் தெரிந்த பிறகு, நான் ஒரு முறை வாய்விட்டுக் கூவினேன்; பிறகு அவளைச் சாந்தப்படுத்தினேன். அதற்குள் தியாகராயரும், மாணிக்கமும், காமகோட்டியம்மாள் அவர்களும் ஓடி வந்தார்கள். அதன் பிறகு மதனசுந்தரியம்மாளும் மரகதவல்லியம்மாளும் வந்தார்கள். கடைசியில் அம்பலவாண முதலியார் ஐயா அவர்களும் வந்தார்.

குணசீலர்:—மரகதவல்லியம்மாள் அவர்கள் அம்பலவாண

முதலியாரைக் கண்டவுடன் என்னசொன்னார் என்பது உனக்குத் தெரியுமா ?

மீனாக்ஷி:—அந்த அம்மாள் அவரைப் பார்த்தவுடனே, 'அடபாவீ !' என்று கூறினார்கள்போ லிருக்கிறது! ஆம் நான் அப்படித்தான் நினைக்கிறேன்.

குணசீலர்:—அதற்கு அம்பலவாணர் என்ன பதில் கூறினார் ?

மீனாக்ஷி:—அவர், 'ஐயோ ! ஐயோ ! ! இதென்ன !' என்று கூறியழத் தொடங்கினார்.

குணசீலர்:—சரி ; இதைத் தவிர நீ இரவில் ஒரு சத்தத்தை யும் கேட்கவில்லையே ?

மீனாக்ஷி :—ஒரு சத்தமும் கேட்கவில்லை, ஆனால்—

குணசீலர் :—ஆனால் என்ன ?

மீனாக்ஷி :—காமகோட்டி யம்மாளுடைய படுக்கையறையில் யாரோ இரவு முழுவதும் நடந்து கொண்டே யிருந்ததை மாத்திரம் நான் கவனித்தேன். பொழுது விடியும் சமயத்தில் எனக்குத் தூக்கம் வந்து விட்டதால் தூங்கிவிட்டேன். துப்பாக்கிச் சத்தமே என் காதில் விழவில்லை.

குணசீலர்:—சரி அம்மா, நீ போய் மறுபடியும் தியாகராயனை இவ்விடம் அனுப்பு.

குணசீலர் இவ்வாறு கூறிய உடனே மீனாக்ஷி, அவ்வறை யை விட்டுச் சென்றாள். சிறிது நேரத்திற்கெல்லாம் தியாகா ராயன் அவரிடம் வந்தான். குணசீலர், காமகோட்டியம்மா ளைச் சில நிமிஷங்கள் வரையில் தான் பார்க்க விரும்புவ தாகக் கூறும்படி அவனுக்குச் சொல்லியனுப்பிவிட்டுப் புன் சிரிப்புடன், 'எல்லாம் ஆச்சரியமாகவே யிருக்கிறது. மர கதவல்லியம்மாள் தன் பிள்ளை அம்பலவாணனைப் பார்த்து, 'அட பாவீ !' என்று கூறியதற்குப் பொருளென்ன ? அவள்

அவ்வாறு கூறியதால் அம்பலவாணனே தன் பெரிய பிள்ளையைக் கொன்றவன் என்று அவள் நினைத்ததாகத் தெரிகிறது. பொருள்கள் களவு போனதைப்பற்றி அவளுக்கு அப்பொழுது தெரியாதுபோ லிருக்கிறது. எல்லாம் போகப் போகத்தானே விளங்கும்,' என்று தமக்குள்ளேயே எண்ணிக் கொண்டார்.

இதற்குள் காமகோட்டியம்மாள், அவ்வறைக்குள் வந்து கதவைச் சாத்திவிட்டுக் குணசீலரை நோக்கி, 'ஐயா, நீங்கள் என்னிடம் கூறியபடி நடந்துகொள்ளவில்லை. என் தங்கையை நீங்கள் இவ்வாறு வருந்தச் செய்வீர்களென்பது எனக்குத் தெரிந்திருந்தால் நான் உங்களை அவளுடன் பேச விட்டிருக்கமாட்டேன். அவள் வருந்தத் தகுந்த கேள்விகளை நீங்கள் கேட்கக் கூடாது என்று நான் எத்தனைமுறை சொன்னேன்? நீங்கள் அதைச் சிறிதும் கவனிக்கவேயில்லை,' என்று அதிக வருத்தத்துடன் கூறினாள்.

குணசீலர் :—அம்மா, நீங்கள் இப்படிக் கூறுவதைக் கேட்க எனக்கு வருத்தமாக இருக்கிறது. நான் நேற்றிரவு நடந்த ஒரு விஷயத்தை அந்த அம்மாளுக்கு ஞாபக மூட்டினேன். அவ்வளவுதான்.

காமகோட்டியம்மாள் :—'ஐயா, அம்மயிலைப்பற்றி நீங்கள் முன்னமே என்னைக் கேட்கக்கூடாதா? நான் அதைச் சொல்லியிருப்பேனே! என் தங்கை மதனசுந்தரி, நேற்றுக்காலையில் அவளுடைய கணவரறைக்கு வந்திருந்தது உண்மைதான்.

குணசீலர் :—உங்களுக்கு அது முன்னமே தெரியுமோ?

காமகோட்டியம்மாள் :—தெரியாமலென்ன? அறையில் எங்குப் பார்த்தாலும் குப்பையிருக்கிறது என்றும், புஸ்தகங்கள் அடுக்கியுள்ள அலமாரிகளின் கண்ணாடிகளை

வேலைக்காரி நன்றாகத் துடைப்பதே இல்லையென்றும் அவள் கணவர் இரண்டு நாட்களுக்கு முன் அவளைப் பார்த்துக் கடுகடுத்துப் பேசினார். அதனால் அவள், நேற்றுக் காலையில் வேலைக்காரியிடம் அதைத் தெரிவித்து அவ்வேலைக்காரி அவ்வேலையைச் சரியாகச் செய்தாளா இல்லையா என்று பார்க்க அறைக்கு வந்தாள். இதுதான் நடந்த விஷயம். இதனால் நீங்கள் சந்தேகிப்பதற்கு என்ன வழியிருக்கிறது?

குணசீலர் :—அப்படியா? சரி, அது கிடக்கட்டும். நீங்கள் காலையில் இங்கிருந்தபொழுது மரகதவல்லியம்மாள் தம்முடைய புத்திரர் அம்பலவாணரைப்பார்த்து ஏதோ கூற, அவர் அழத் தொடங்கினாரமே? அந்த அம்மாள் என்ன சொன்னார் என்பது உமக்குத் தெரியுமா?

காமகோட்டியம்மாள் :—அதுவா? அஃது—எனக்குச் சரியாகக் கேட்கவில்லை. நான் என் தங்கைக்குத் தேறுதல் கூறுவதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருந்து விட்டேன். ஆனால் அவர் ஏதோ ஒரு வார்த்தை சொல்லியதாகமட்டும் எனக்கு ஞாபகமிருக்கிறது.

குணசீலர் :—அந்தம்மாள், 'அடபாவீ!' என்று சொல்லியிருத்தல் கூடுமோ?

காமகோட்டியம்மாள் :—ஐயா, தயவு செய்து என்னை அதைப்பற்றிக் கேட்கவேண்டா. எனக்குச் சரியாகக் கேளாத விஷயத்தை நான் கேட்டதாக எப்படிச் சொல்லமுடியும்? தவிர, மரகதவல்லியம்மாள் அவர்கள் தம்முடைய புத்திரர் இறந்து கிடப்பதைக்கண்டு பைத்தியம் பிடித்தவர்களைப்போல் ஏதேதோ கூறியிருக்கக் கூடும். அவற்றையெல்லாம் இக்கொலைக்குக் காரண

மாக நீங்கள் எடுத்துக்கொள்ள முயலுதல் கூடாது. உண்மையில் எனக்கு மரகதவல்லியம்மாளைப் பற்றியாவது மற்று யாரைப்பற்றியாவது பரிந்துபேசவேண்டும் என்னும் விருப்பம் கிடையாது.

குணசீலர் :—அம்மா, நீங்கள் கூறுவதிலிருந்தே எனக்குப் பதில் கிடைத்துவிட்டது. மரகதவல்லியம்மாள் அப்படிக் கூறியதற்கு அம்பலவாணர், 'ஐயோ! ஐயோ!! இதென்ன?' என்று கூறியது உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா?

காமகோட்டியம்மாள் :—ஐயா, எதையும் நான் உண்மையென்று கூறமுடியாது. ஒருவேளை அப்படிக் கூறியிருந்தாலும் இருக்கலாம். நான் அதைப்பற்றிக் கவனிக்கவேயில்லை. ஐயா, என் தங்கை இப்பொழுது இருக்கும் நிலைமையில் அவளை விட்டுப் பிரியும் ஒவ்வொருநிமிஷமும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றுகிறது. நான் போகலாமா?

குணசீலர் :—அம்மா, நீங்கள் போகலாம். நான் ஒருவேளை நாளைக்கு வந்தாலும் வருவேன். அப்பொழுது உம்முடைய தங்கையாருக்கு உடம்பு சௌக்கியமாக இருந்தால் அவரைப் பார்க்கிறேன். அந்த அம்மாள் என்னைப் பற்றிச் சிறிதும் பயப்பட வேண்டியதில்லையென்று சொல்லுங்கள். நான் அப்படிப்பட்ட கொடியவனல்ல.

காமகோட்டியம்மாள் :—ஐயா, இப்பொழுது அவளுக்குத் தன் நினைவேயில்லை. அவளைப்பற்றி எனக்கு மிகுந்த கவலையாயிருக்கிறது. அவள் சிறிது குணமடைந்த உடன் நான் இவ்விஷயத்தை அவளுக்குக் கூறுகிறேன். இன்னும் நீங்கள் இக்கொலையைப் பற்றி

அறியும் விஷயங்களை இங்குள்ள எல்லோருடைய நன்மையைக் கருதியும் நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நான் போய் வருகிறேன்.

இப்படிக் கூறிவிட்டுக் காமகோட்டியம்மாள் மாடிக்குச் சென்றாள். குணசீலர், சில நிமிஷங்கள் வரையில் ஆழ்ந்த சிந்தனையுடன் உட்கார்ந்துகொண் டிருந்தார். அவர் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் மதனசுந்தரி பயந்து நடுங்கிப் பதில் சொன்னதும், கடைசியில் அவர் மாடியை விட்டிறங்கியபொழுது அவள் தன் தமக்கையைப் பார்த்து, 'அக்கா! அக்கா!! அவர் அதைத் தெரிந்துகொண்டார்—தெரிந்துகொண்டார்!' என்று கத்தியதும், பிறகு அவற்றையெல்லாம் மறைக்கக் கருதிக் காமகோட்டியம்மாள் வெகு சாதுரியமாக விஷயத்தை மாற்றிச் சமயத்துக்கு ஏற்றாற்போல் பேசியதும் ஆகிய இவற்றையெல்லாம் சிந்திக்கச் சிந்திக்கக் குணசீலருக்கு ஆச்சரியமுண்டாயிற்று.

பிறகு குணசீலர், அவ்வறையைவிட்டு வெளிவந்து, அங்கிருந்த சமையற்கார தியாகராயனைப் பார்த்து, 'தியாகராயா, நான் இன்று இங்குப் பார்க்க வேண்டிய விஷயங்களெல்லாம் பார்த்தாய்விட்டன என்றும், இதைப்பற்றி ஒரு முடிவுக்கு வந்தவுடனே அல்லது இன்னும் இதைப்பற்றி ஏதாகிலும் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தாலோ மரகதவல்லியம்மாள் அவர்களுக்குத் தெரிவிப்பதாகக்கூறு. இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையவர்கள் எங்கே?' என்று கேட்டார்.

தியாகராயன், அவரைப்பார்த்து, 'இன்ஸ்பெக்டர் அவர்கள் ஒருமணி நேரத்திற்குமுன்பே போய்விட்டார். ஆனால் அவர் மறுபடியும் வருவதாகக் கூறிச்சென்றார். எப்பொழுது வருவாரென்பதும் தெரியவில்லை. நீங்கள் சிறிது

நேரம் இருந்து போகலாமென்று விரும்புகிறீர்களா?' என்று கேட்டான்.

இதற்குள் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை, அவ்விடம் வந்தார். குணசீலர் அவரைநோக்கி, 'ஏதாகிலும்புதிய விஷயம் புலப்பட்டதோ?' என்றுகேட்டார்.

'அவனைப் பிடித்தாயிற்று,' என்று விரைந்து பதில் கூறினார் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை.

குணசீலர் :—அவனைப்பிடித்தாயிற்று? எவனை?

இன்ஸ்பெக்டர் :—அருளானந்தனை—இவ்வீட்டின் வேலைக்காரியினிடம் நட்புக் கொண்டிருந்தவனை—மோகனசுந்தர முதலியார் அவர்கள் இவ்வீட்டிலிருந்து துரத்திவிட்டவனைச் சைதாப்பேட்டைக்குச் சென்று கண்டுபிடித்து விட்டேன். அவன் ஏதேதோ கதை பேசுகிறான். அவன் சொற்கள் நம்புவதற்குத் தகுந்தனவாக இல்லை. நீங்கள் ஏதாகிலும் கண்டுபிடித்தீர்களா?

குணசீலர் :—அப்படிப்பட்ட பெரிய விஷயமொன்றுங்கண்டுபிடிக்கவில்லை. பிள்ளை அவர்களே, நீங்கள் எனக்கு ஒருதவி செய்யவேண்டும். எனக்காகத் தாங்கள் சுகுணவிலாச சபை நடைபெற்றுவரும் விக்டோரியா பப்ளிக் ஹாலுக்குச்சென்று அங்குள்ளவாயிற் காவலாளியைப் பார்த்து நேற்று இரவு அம்பலவாண முதலியாரவர்கள் சுகுணவிலாச சபையிலிருந்து எத்தனை மணிக்கு வெளியே சென்றார் என்று அவனைக் கேட்டுத் தெரிந்து கொண்டு வரவேண்டும்.

இன்ஸ்பெக்டர் :—ஏன்? அஃது எதற்காக?

குணசீலர் :—நான் அவர் நேற்றுக் கொலை நடந்த பொழுது எவ்விடத்திலிருந்தார் என்பதை அறியவேண்டும். அவர்—அம்பலவாண முதலியார்—சுகுண விலாச

சபையை விட்டு எத்தனை மணிக்கு வெளிச்சென்றார் என்பதை மாத்திரம் நீங்கள் அறிந்துவந்து எனக்குத் தெரிவிக்கவேண்டும். மற்ற விஷயங்களை யெல்லாம் நானே பார்த்துக்கொள்ளுகிறேன். நீங்கள் அங்குள்ள காவலாளியையும் மற்றுஞ் சிலரையுங் கண்டு கேட்டால் விஷயம் புலப்படும்.

இன்ஸ்பெக்டர் :—குணசீலர் அவர்களே, இஃது ஒரு பெருங் காரியமா ? நான் இதை யறிந்துவந்து உமக்குக் கூறுகிறேன். பிறகு என்னசெய்யவேண்டும் என்பதைத் தெரிவியுங்கள்.

குணசீலர் :—மற்றொன்றுமில்லை. இதைத்தெரிந்துகொண்டு என் வீட்டண்டை வாருங்கள். நான் மற்றுஞ் சில விஷயங்களைப்பற்றி உம்முடன் பேசவேண்டும்.

இன்ஸ்பெக்டர் :—அப்படியே ஆகட்டும்.

குணசீலர் :—ஆம் ! ஒரு விஷயம். பிணத்தை யெடுத்து விடக் கமிஷனர் அவர்கள் உத்தரவு ஆய்விட்டதோ ?

இன்ஸ்பெக்டர் :—ஆ ! ஆ !! உத்தரவளித்தாய்விட்டது. இன்னும் சிறிது நேரத்தில் பிணத்தை யெடுத்துவிடுவார்கள். யாரோ பந்துக்கள் வரவேண்டும்போலிருக்கிறது.

குணசீலர், இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை இவ்வாறு கூறியவுடனே அவரிடம் விடைபெற்றுக்கொண்டு கற்பகவனத்தின் வெளியே வந்தார். அங்கு அவருடைய மோட்டார் ஓட்டி வண்டியை வைத்துக்கொண்டு அவருக்காகக் காத்திருந்தான். அவர் அவனைப்பார்த்து, ' சதாசிவா, உன்னைப்பற்றி நான் மறந்தேபோய்விட்டேன். நீ இங்கு எப்பொழுது வண்டி கொண்டுவந்தாய் ?' என்று கேட்டார்.

சதாசிவன், அவரைப்பார்த்து, 'எஜமானரே, நான் வீட்டுக்கு வந்தவுடன் கோவிந்தன் வண்டியுடன் இவ்விடத்திற்குச் செல்லும்படி கூறினான். நான் சுமார் பன்னிரண்டு மணிக்கு வண்டி கொண்டுவந்தேன்,' என்றான். உடனே குணசீலர் தம்முடைய மோட்டார் வண்டியிலேறிக்கொண்டார். சதாசிவன் அவரைப்பார்த்து, 'எஜமானரே, வண்டியைக் கடற்கரைக்குச் செலுத்துவதா; வேறெங்கேனும் போகப்போகிறீர்களா?' என்று கேட்டான். 'நேரே கடற்கரைக்கே செலுத்து,' என்றார் குணசீலர். தினந்தோறும் சென்னையிலுள்ள பிரபுக்கள் பலரும் சாயுங்காலத்தில் காற்றில் உலவிவருவதற்காகக் கடற்கரைக்குச் செல்லுவது வழக்கம். குணசீலரும் அவர்களில் ஒருவரேயாகையால் அவர் ஒவ்வொரு நாளும் அங்குச் செல்லத்தவறுவதில்லை. சதாசிவன், சிறிதுநேரத்திற்கெல்லாம் மோட்டார் வண்டியைக் கடற்கரைக்குச் செலுத்தினான். குணசீலர், அவ்விடத்தில் இறங்கிச் சிறிதுநேரம் உலவிவிட்டுப் பின்பு சற்றேறக் குறைய இரவு ஏழுமணிக்குத் தம்முடைய வண்டியிலேறி வீட்டுக்கு வந்தார். அவர் வண்டியை விட்டிறங்கியதும் சதாசிவனைப்பார்த்து, 'சதாசிவா, எனக்கு இதற்குமேல் இன்றைக்கு வண்டி வேண்டியதில்லை. நீ முன் சில சமயங்களில் செய்தபடி இப்பொழுதும் எனக்கு ஒரு சிறிய துப்பறியும் வேலை செய்யவேண்டும்,' என்றார்.

சதாசிவன் :—ஆ! ஆ!! அப்படியே செய்கிறேன். அஃதென்ன ?

குணசீலர் :—கற்பகவனத்திலுள்ள அம்பலவாண முதலியார் அவர்களுடைய மோட்டார் ஓட்டியை உனக்குத் தெரியுமா ?

சதாசிவன் :—எனக்கு அவனை நன்றாய்த் தெரியும்.

குணசீலர் :—நீ இன்றைக்கு அவனைக்கண்டு, எங்காகிலும் வேடிக்கைக்குப் போகலாம் என்று கூறி, எங்காவது அழைத்துப்போய், அவனை உன்வசப்படுத்திவிடவேண்டும் பிறகு அவன் நேற்றையதினம் அம்பலவாண முதலியாரவர்களை ஏற்றிக்கொண்டு எங்கெங்குச் சென்றான் என்பதையும், கடைசியில் அம்பலவாண முதலியாரவர்கள் நேற்று இரவு வண்டியிலிருந்து இறங்கிக் கதவை மூடியபொழுது அவர் கையில் ஏதாகிலும் காயம்பட்டதுண்டா என்பதையும் அவனிடமிருந்து வெகு தந்திரமாகக் கேட்டுக்கொண்டு வரவேண்டும். நான் கூறிய விஷயங்கள் புரிகின்றனவா ?

சதாசிவன் :—எனக்கு யாவும் விளங்குகின்றன. அப்படியே செய்கிறேன்.

குணசீலர் உடனே அவனிடம் தம்முடைய சட்டைப் பையிலிருந்து பத்து ரூபா நோட்டொன்றை யெடுத்துக் கொடுத்தார். 'எஜமானரே, இதையேன் கொடுக்கின்றீர்கள் ?' என்று கேட்டான் சதாசிவன். குணசீலர், 'சதாசிவா, நீ இதைச் செலவுக்கு வைத்துக் கொள்,' என்று கூறினார் குணசீலர். உடனே சதாசிவன் அதைப் பெற்றுக் கொண்டு மோட்டார் வண்டியைக் கொண்டுபோய் லாயத்தில் விட்டு விட்டுத் தன் வீட்டுக்குச் சென்றான்.

குணசீலர் மாடிப்படியேறித் தம்முடைய வாசிப்பு அறைக்குச் சென்றார். உடனே அவருடைய வேலையாள் கோவிந்தன் அங்கு வந்து, அவருடைய சட்டையையும் தலைப்பாகையையும் வாங்கி, அவைகளை வைக்கவேண்டிய இடத்தில் வைத்துவிட்டு, அவரைப்பார்த்து, 'எஜமானர்

அவர்கள் இன்றைக்குச் சாப்பாட்டிற்குக் கூட வரவில்லையே! தங்களுக்கு வெளியிலிருந்து மூன்று தந்திகள் ஒன்றின்பின் ஒன்றாக வந்தன. ஏதோ களவு வழக்காம். தாங்கள் உடனே வரவேண்டுமென்று எழுதியிருந்ததாகக் குமஸ்தா சொன்னார்,' என்றான்.

குணசீலர், அவனை நோக்கி, 'கோவிந்தா, நான் இன்று காலையில் இங்கு வந்தவருடன் போனேனல்லவா? அங்கு ஒரு கொலை வழக்குப் பார்ப்பதற்காகச் சென்றிருந்தேன். அதை முடிக்கும் வரையில் வேறு ஒரு வழக்கும் எடுத்துக் கொள்ள என்னாலியலாது. இதை அவர்களுக்கு—தந்தியனுப்பியவர்களுக்கு—உடனே தெரிவித்து விடும்படி குமஸ்தாவுக்குக் கூறு,' என்று சொல்லி மின்சார விசிறியை ஓடவிட்டு விட்டுத் தம் நாற்காலியில் அயர்ந்து உட்கார்ந்தார்.

---

## ஆறும் அத்தியாயம்

### வியப்புக்கிடமான விஷயங்கள்.

குணசீலர் கற்பகவனத்தை விட்டுச் சென்ற பிறகு கற்பகவனத்தில் மோகனசுந்தரருடைய பிணத்தைத் தகனம் செய்யவேண்டியதற்கான காரியங்கள் வெகு விரைவாக நடந்தேறின. ஊர்களிலிருந்து வரவேண்டிய பந்துக்களெல்லாம் வந்து விட்டார்கள். சிறிது நேரம் வரையில் அம்மாளிகை முழுவதும் அழுகுரலே நிரம்பி இருந்தது. பிணத்துக்குச் செய்யவேண்டிய சடங்குகளெல்லாம் முடிந்த பிறகு

அம்பலவாணனும் மற்றுமுள்ள பந்துக்களும் அதைக் கொண்டுபோய்த் தகனம் செய்துவிட்டுத்திரும்பி வந்தார்கள். உள்ளூரிலுள்ள பந்துக்களெல்லாம் அப்பொழுதே தத்தம் வீடுகளுக்குச் சென்றார்கள். அயலூரிலிருந்து வந்த இரண்டொருவர் மாத்திரம் கற்பக வனத்திலேயே அன்றிரவு தங்கினார்கள். அம்பலவாணன் தனக்கு வேண்டிய தட்டு முட்டுச் சாமான்களையெல்லாம் ஒரு வண்டியிலேற்றி அவ்வண்டியுடன் தன்னுடைய ஆள் மாணிக்கத்தையும் நுங்கம்பாக்கத்தில்தான் வாடகைக்கு ஏற்படுத்திக்கொண்ட மனோரஞ்சித விலாச மாளிகைக்கு அனுப்பிவிட்டுத் தன் தாயாருடன் தன்னுடைய மோட்டார் வண்டியிலேறி யவ்விடத்திற்குச் சென்று குடியேறினான். அம்பலவாணன் செய்கையைக்கண்ட சிலர், அவனைப்பழிக்க ஆரம்பித்தனர்.

மறு நாள் பொழுது விடிந்தது. துப்பறியும் உத்தியோகஸ்தராகிய குணசீலர், தம்முடைய வாசிப்பு அறையில் உட்கார்ந்து கொண்டு மோகனசுந்தர முதலியாரின் கொலை நடந்த விஷயமாய் ஏதேதோ யோசித்துக்கொண் டிருந்தார். அப்பொழுது அவருடைய வேலைக்காரனான கோவிந்தன அவரிடம் வந்து, 'எஜமானரே! நம்முடைய மோட்டார் வண்டியோட்டும் சதாசிவன் உங்களைப்பார்க்க விரும்புகிறார்,' என்றான். உடனே அவர், 'கோவிந்தா, சதாசிவனை உடனே இங்கு வரச்சொல்,' என்று கூறினார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் சதாசிவன் அவரிடம் வந்தான். அவர் அவனைப்பார்த்து, 'என் அப்பா சதாசிவா? ஏதேனும் விஷயம் வெளிப்பட்டதோ?' என்று கேட்டார். சதாசிவன், 'எஜமானரே, நான் நீங்கள் கூறியபடியே அம்பலவாண முதலியாரவர்களுடைய மோட்டார் வண்டியோட்டும் ஆளைப்பார்த்தேன். அவனும் நானும் நேற்றிரவு பார்வதி

பாலிவாலா நாடகக் கொட்டகைக்குச் சென்றிருந்தோம். நான் அவனைப்பலவாறு உற்சாகப்படுத்திச் சில கேள்விகள் கேட்டேன். அவன் கூறும் விஷயம் ஒன்றும் நமக்கனுகூலமாகக் காணப்படவில்லை. அம்பலவாண முதலியாரவர்களுக்கு மோட்டார் வண்டியிலிருந்து இறங்கியபொழுது ஒரு விதக்காயமும் உண்டாகவில்லை யென்றும், அவர் வண்டியிலிருந்து இறங்கி ஏறும் பொழுதெல்லாம் அவனே மோட்டார் வண்டியின் கதவை மூடுகிறது வழக்கமாகையால் அவர் கதவை மூடவேண்டிய அவசியமே இல்லை யென்றுங் கூறினன். தவிர, முந்தாம் நாள் இரவு அவன் சுகுண விலாச சபையினிடத்திலிருந்து வண்டியைச் செலுத்தும் பொழுது சற்றேறக்குறைய பன்னிரண்டு மணியிருக்கலாம் என்றும், அம்பலவாண முதலியாரவர்கள் கட்டளைப்படி அவன் வண்டியைக் கற்பகவனத்திற்குச் செலுத்துகையில் அவர் இடையில் வண்டியை நிறுத்தும்படி கூறி, ஏதோ யோசித்துவிட்டுப் பிறகு வண்டியைத் திருப்பித் தங்கசாலையிலுள்ள அவருடைய சினேகிதர் ஒருவர் வீட்டுக்குச் செலுத்தும்படி கூறி, வண்டி அங்குச்சென்றதும் அவர் சினேகிதரையும் அதில் ஏற்றிக்கொண்டு மறுபடியும் பொது ஜன சிங்காரத் தோட்டத்தில் நடக்கும் பாணவேடிக்கை பார்ப்பதற்காக வந்து நெடுநேரம் அங்கிருந்துவிட்டுக் கடைசியாகச் சற்றேறக்குறைய மூன்று மணிக்கு அவருடைய நண்பரை அந்த வண்டியிலேயே யேற்றிக்கொண்டு போய் அவர் வீட்டில் விட்டு விட்டுக் கற்பகவனத்திற்கு வந்து விட்டதாகவும் அவன் கூறினன். இவ்வளவுதான் நான் அவனிடமிருந்து தெரிந்து கொள்ள முடிந்தது. ஆனல்..............' என்றுகூறித் தன் பேச்சை நிறுத்தினன்.

'ஆனல் என்ன ?' என்று கேட்டார் குணசீலர்.

அதற்கு அவன், 'எஜமானரே, அவன் கூறிய விஷயம் உண்மையாக இருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. நான் ஏதோ ஒரு காரணங்கொண்டுதான் அவனை இவ்விஷயங்களைப்பற்றிக் கேட்டேன் என்பதை அவன் அறிந்து கொண்டான் என்று நினைக்கிறேன். இதற்குமேல் அவனிடமிருந்து ஒரு விஷயமும் அறிய என்னால் இயலவில்லை. நீங்கள் கொடுத்த ரூபாவில் ஒன்பது ரூபா நேற்று இரவு செலவானதுதான் மிச்சம்,' என்று கூறினான்.

குணசீலர் அவனை நோக்கி, 'சதாசிவா, அது போனால் போகிறது. இப்படிப்பட்ட விஷயங்களெல்லாம் பணத்தைச் செலவு செய்யாவிட்டால் முடியுமா? 'பணமென்றால் பிணமும் வாய்திறக்கும்' என்பது உனக்குத் தெரியாதோ? சரி; நீ உன்னாலான காரியத்தைச் செய்து முடித்தாய். வண்டி சித்தமாக இருக்கிறதா?' என்று வினவினார்.

'ஆம்,' என்றான் சதாசிவன்.

குணசீலர், 'அப்படியானால் நான் மறுபடியும் கற்பக வனத்திற்குப் போகவேண்டும். நேற்று நான் அங்கு முடித்துக்கொள்ள வேண்டிய காரியங்களில் சிலவற்றை மறந்தேன். வண்டியை வைத்துக்கொண்டிரு; இதோ நான் உடுத்துக்கொண்டு வந்து விடுகிறேன்,' என்று கூறி, அவனைக் கீழே அனுப்பினார். உடனே கோவிந்தன் தன்னுடைய எஜமானர் வெளியே செல்லப்போகிறார் என்பதையுணர்ந்து மாடிக்கு வந்து அவர் முன்னாள் உடையை மாற்றி வேறு உடைகளை அவருக்குக்கொடுத்தான். குணசீலர் தாம் முன்னாள் அணிந்து கொண்ட சட்டைப்பையிலிருந்த பொருள்களையெல்லாம் எடுத்துப் புதுச்சட்டைப்பையிலிட்டுக் கொண்டு கையிலொரு பிரம்புடன், 'கோவிந்தா, அறையின்

கதவைச்சாத்திக் கொள். குமஸ்தா வந்தவுடனே நேற்று வந்த தந்திகளுக்கு நான் கூறியபடி பதில் தந்தி கொடுத்து விடச்சொல். நான் கற்பகவனத்திற்குப் போய்விட்டு வருகிறேன்,' என்றுகூறிக் கீழே சென்று தெருவில் காத்துக் கொண்டிருந்த தம்முடைய மோட்டார் வண்டியில் ஏறி உட்கார்ந்தார். சதாசிவன், பூவிருந்தவல்லி சாலைக்கு வண்டியை அதிவிரைவாகச் செலுத்தினன். சிறிது நேரத்திற்கெல்லாம் வண்டி கற்பகவனத்தின் முன் வந்து நின்றது. குணசீலர் வண்டியை விட்டிறங்கிச் சதாசிவனை நோக்கி, 'சதாசிவா, வண்டியை இங்கேயே வைத்துக்கொண்டிரு. மறுபடியும் எங்காகிலும் போகவேண்டியிருக்கும்,' என்று கூறி விட்டு அம்மாளிகைக்குட் சென்றார்.

அவர் மாளிகைக்குட் சென்றதும் கூடத்தில் அவ்வீட்டு வேலைக்காரியாகிய தங்கத்தைக் கண்டு, 'அம்மா, தங்கம், நான் நேற்று உன்னை ஒரு விஷயங்கேட்க மறந்துவிட்டேன். காமகோட்டியம்மாள் வீட்டிலிருக்கிறார்களா? மரகதவல்லியம்மாளும் அம்பலவாண முதலியார் அவர்களும் போய் விட்டார்களோ?' என்று கேட்டார்.

தங்கம், 'காமகோட்டியம்மாள் மாடியில் மதனசுந்தரியம்மாளிடம் இருக்கிறார்கள். மரகதவல்லியம்மாள் அவர்களும் அம்பலவாண முதலியார் ஐயா அவர்களும் நேற்றுப் பிணம் எடுத்தான பிறகு புதிய வீட்டுக்குப் போய் விட்டார்கள்,' என்று கூறினள்.

உடனே குணசீலர் அவளைநோக்கி, 'ஏன் அம்மா, முதல்முதலில் மோகன சுந்தரமுதலியார் அவர்கள் கொலையுண்டிருப்பதை நீதானே பார்த்தாய்?' என்று கேட்டார்.

தங்கம்:—ஆம். நான்தான். நீங்கள் நேற்று என்னை

அதைப்பற்றிக் கேட்பீர்கள் என்று நினைத்தேன். ஆனால் நீங்கள் என்னையொன்றும் கேட்காமற் போனது எனக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

குணசீலர் :—நான் நேற்று இங்குள்ளவர்கள் எல்லோரையும் இவ்விஷயத்தைப்பற்றிக் கேட்பதற்கு நேரமில்லாமற் போய் விட்டது. கடைசியில் உன்னைச் சில கேள்விகள் கேட்கலாம் என்றிருந்தேன். ஆனால் போகும் பொழுது மறந்தே போய்விட்டேன். தவிர, இன்ஸ்பெக்டர் அவர்கள் உன்னைச் சில கேள்விகள் கேட்டிருப்பாரென்று எண்ணினேன்.

தங்கம் :—ஆம். அவர் என்னைக்கேள்விகேட்டது உண்மைதான். அவர் மிகுந்த கோபத்தோடு நான்தான் இவ்வீட்டு எஜமானர் முதலியார் அவர்களைக் கொலை செய்து விட்டதைப்போல் என்னைப் பயமுறுத்திக் கேட்டகேள்விகளுக்கு ஒருவாறு நான் பதில் சொன்னேன். ஆனால் நான் கண்டெடுத்த வேறொரு பொருளைப்பற்றி மாத்திரம் நான் அவரிடம் கூறவேயில்லை. அதனால் எதையும் மறைத்துப்பேசும் வழக்கம் என்னிடத்திலிருக்கிறது என்று நீங்கள் எண்ணவேண்டா. எதையும் வெளிப்படையாகவே சொல்லிவிடுவது என்னுடைய வழக்கம். மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு வாயாலொன்றைச் சொல்லுவதற்கு எனக்குத் தெரியாது. அவர் என்னிடம் அதிக கோபத்தோடு பேசியதால் இதைப்பற்றி ஏதாகிலும் சொன்னால் அவர் என்ன செய்வாரோ என்று பயந்தே நான் பேசாமலிருந்து விட்டேன்.

குணசீலர் :--நீ என்ன கண்டெடுத்தாய்? என்னிடம் சொல்லு.

குற்றஞ் செய்யாத நீ ஏன் பயப்படவேண்டும்? பயப்படாதே.

குணசீலர் இவ்வாறு கூறியதும் அவள், 'ஐயா அவர்களே, கொஞ்சநேரம் இருங்கள். நான் இதோவந்து விட்டேன்,' என்று கூறித் தன் அறைக்குச் சென்று தன்னுடைய சிறிய தகரப்பெட்டியைத்திறந்து, எதையோ ஒன்றை எடுத்துக்கொண்டு வந்து அவரிடம் கொடுத்தாள்.

அஃது ஆடவர்கள் உட்சட்டையின் கைக்குப் போட்டுக்கொள்ளும் கைப் பொத்தான் (cuff-link). அது பொன்னுற் செய்யப்பட்டு இருந்தது. அதன் மேற்புறத்தில் 'அ. அ.' என்று இரண்டு பூ எழுத்துகள் செதுக்கப்பட்டிருந்தன. அவற்றைக் குணசீலர் சிறிதுநேரம் உற்றுப்பார்த்தார். பிறகு அவர் அக் கூடத்திலிருந்த சோபாநாற்காலியொன்றில் உட்கார்ந்து தங்கத்தைப்பார்த்து, 'அம்மா, தங்கம், நீ இதை எங்குக்கண்டெடுத்தாய்?' என்று வினவினர்.

தங்கம்:—எஜமான் முதலியார் அவர்களுடைய அறையில் புகுந்த உடனே கதவின் பக்கத்தில் இஃது என் காலில் தட்டுப்பட்டது. உடனே எடுத்துப்பார்த்தேன்; ஒருவேளை இது முதலியாரவர்களுடையதோ என்னவோ என்று எண்ணி அவரிடம் கொடுத்து விடலாமென்று எண்ணினேன். அறையில் விளக்கு அணைந்திருந்ததால் போதுமான வெளிச்சமில்லாமலிருந்தது. சிறிது தூரத்தில் நாற்காலியில் எஜமான் முதலியாரவர்கள் உட்கார்ந்துகொண்டிருப்பதைக்கண்டேன். அறையின் ஒரு சன்னல் திறக்கப்பட்டிருந்தது. அதனுல் அவ்வறையிலுண்டான சிறிது வெளிச்

சத்தால் நான் நாற்காலியி லுட்கார்ந்திருந்த முதலியாரவர்களைப் பார்த்து, அவர் நாற்காலியி லுட்கார்ந்த படியே தூங்குகிறார் போலிருக்கிறது என்று நினைத்து, அவரை யெழுப்பி இதை அவரிடம் கொடுக்கலாம் என்று அவர் அருகிற் சென்றேன். உடனே அவர் போட்டிருந்த பனியன் மீது இரத்தம் ஒழுகியிருப்பதையும் அவர் கண்கள் வெறித்த பார்வையுடன் இருப்பதையுங் கண்டேன். உடனே எனக்குப் பயமுண்டாய் விடவே நான் ஓவென்று வாய்விட்டு உரத்துக் கத்தினேன். பிறகு உண்டான பெருங் குழப்பத்தால் அதற்குமேல் என்ன நடந்தது என்பது எனக்குத் தெரியவில்லை. கடைசியில் நான் அறைக்கு வந்து இதை யாரிடங் கொடுக்கலாம் என்று யோசித்தேன். பிறகு இந்தச் சமயத்தில் இந்த அற்பப்பொருளை வீட்டில் துன்பத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஒருவரிடம் கொடுப்பது உசிதமல்ல என்று எனக்குத் தோற்றியதால் இதை யென் தகரப் பெட்டியில் பத்திரப்படுத்தி வைத்திருந்தேன்.

குணசீலர் :—சரி அம்மா. நான் இதை இதற்குரியவர்களிடம் சேர்த்து விடுகிறேன். வேறு ஏதாகிலும் நீ சொல்ல வேண்டியது இருக்கிறதா?

தங்கம் :—மற்றொரு விஷயமும் இருக்கிறது. இந்த வீட்டில் வேலை செய்யும் மீனாக்ஷி யென்பவள் நாங்களெல்லோரும் அந்த அறையில் அழுதுகொண்டிருந்த பொழுது திடீரென்று எங்களை விட்டு விட்டு வெளியே சென்றாள். அவளுடைய பார்வை எனக்குச் சந்தேகத்தை யுண்டு பண்ணியது. எல்லோரும் அங்கு

இருக்கும்பொழுது அப்படிப்பட்ட சமயத்தில் அவள் மாத்திரம் என்ன காரியமாக வெளியே செல்லுகிறுள் என்பதைக் கவனிக்க நான் அவளைப் பின்தொடர்ந் தேன். அவள் பின்கட்டின் கூடத்தில் மறைவான ஒரு மூலையிலுள்ள டெலிபோன் என்னுங்கருவியில் (Telephone) ஏதோ பேசத்தொடங்கினுள். அவள் டெலீபோனில் பேச வேண்டிய விஷயம் என்ன இருக் கிறது என்னும் ஆச்சரியத்துடன் நான் அவள் பேசி யதை உற்றுக் கேட்டேன். அவள், 'ஆம் அம்மா, அஃது உண்மைதான். அவர் இறந்து விட்டார்—— கொலை செய்யப்பட்டார். இது தங்கள் வீட்டுக்குத் தெரியும் வரையில் தாங்கள் இதை வெளிப்படுத்தக் கூடாது,' என்று சொல்லி விட்டு வந்தாள்.

குணசீலர் :— அவள் யாரோடு பேசினுள் என்பது உனக்குத் தெரியுமா ?

இக்கேள்விக்குத் தங்கம் ஒரு பதிலுங்கூறுமல் பேசா திருந்தாள். குணசீலர் சிறிது நேரம் அவளையே உற்று நோக்கிக்கொண் டிருந்து பிறகு, 'அவள் ஒரு வேளை நீதிபதி நீலகண்ட முதலியாரவர்கள் குமாரத்தி கலாவதியுடன் பேசி யிருப்பாளோ ?' என்று கேட்டார்.

தங்கம் :—ஆ! அஃது உங்களுக்கு எப்படித்தெரியும்? அதைப்பற்றி நான் நிச்சயமாகக் கூறமுடியாது. ஆனல் எனக்கு ஒன்று மாத்திரம் தெரியும். எஜமானர் முதலியார் அவர்களுக்கும் நீதிபதி முதலியார் அவர் கள் குமாரத்திக்கும் நெடுநாளாக நெருங்கிய பழக்க முண்டு. மீனுக்ஷியே அவர்களுக்குப் பலவழிகளில் உத வியாயிருந்தாள். மீனுக்ஷி வெகுதந்திரக்காரி.

குணசீலர், 'தங்கம், எனக்கு இப்பொழுது விஷயம் விளங்கியது. நான் இன்னும் உன்னை ஒன்றுங்கேட்கப்போவ தில்லை. நீ சொல்லிய இந்த விஷயத்தையும் நான் ஒருவரிட மும் கூற மாட்டேன். ஏன் என்றால் அப்படிச் சொல்லு வதால் உன் வேலை போய்விடும் என்று நீ நினைக்கலாம். இன்னும் நீ அறியும் விஷயங்களையெல்லாம் நான் மறுபடியும் வரும்போது கூறலாம். நீ போகலாம்,' என்று கூறினர். உடனே தங்கம் தன் காரியத்தைப் பார்க்கச் சென்றாள்.

அவள் போன பிறகு குணசீலர் தம்மிடத்திலிருந்த அந்தப் பொன் கைப்பொத்தானைத் திருப்பித்திருப்பிப் பார்த்தார். அவர் அதிலிருந்து ஏதோ ஒரு விஷயத்தைக் கண்டு பிடித்தவர்போல் தோன்றினர். பின்னும் அவருக்கு ஆழ்ந்த சிந்தனை உண்டாயிற்று. அப்பொழுது அவ்விடத் திற்கு அவ்வீட்டுச் சமையற்காரனுகிய தியாகராயன் வந்த தால் அவருடைய சிந்தனை வேறு விஷயத்தைப்பற்றியது. உடனே அவர் அவனைத் தம்மருகிலழைத்து, 'தியாகராயா, நீ நேற்று இவ்வீட்டில் சற்றேறக் குறைய சென்ற ஒன்பது வருஷங்களாக வேலை செய்து வருவதாகக் கூறினையல்லவா? ஆகையினல் உனக்கு இக்குடும்ப விஷயத்தைப்பற்றி அதிக மாசத் தெரிந்திருக்கவேண்டும், தியாகராயா, நான் கேட் கும் ஒரு கேள்விக்குமாத்திரம் நீ பதில் சொல்ல வேண்டும். உன்னுடைய எஜமானர் மோகன சுந்தரமுதலியார் அவர்க ளுக்கும் நீதிபதி நீலகண்டமுதலியார் அவர்களுடைய பெண் கலாவதிக்கும் அதிக நேசமுண்டாவதற்கு முன் அவர்களுக் கிடையில் எப்படிப்பட்ட பழக்கம் இருந்தது என்பது உனக் குத் தெரியுமா?' என்று கேட்டார்.

தியாகராயன் :—ஐயா அவர்களே, நான் சென்ற ஒன்பது

வருஷங்களாக—எஜமான்முதலியார் அவர்களுடைய தந்தையார் குடும்பத்திலும் எஜமான்முதலியார் குடும்பத்திலுமாக வேலை பார்த்துவருகிறேன். எஜமான்முதலியாரவர்களுக்குக் கலியாண மாவதற்கு முன் அவர் தந்தையார் அவருக்குத் தம்முடைய உயிர் நண்பரான நீதிபதிமுதலியார் அவர்களின்பெண் கலாவதியம்மாளைக் கலியாணம் செய்துவிட வேண்டுமென்று வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்தார். நீதிபதிமுதலியார் ஐயா அவர்களும் அதைச் சந்தோஷத்தோடு ஒத்துக்கொண்டார். பிறகு இப்பொழுது இறந்த எஜமான் ஐயா அவர்களுக்கு மதனசுந்தரியம்மாள் அவர்களை மணந்து கொள்ள வேண்டும் என்னும் எண்ணமிருந்ததால் அந்தக் கலியாணம் நின்றுபோய் விட்டது. ஆனால் அதற்கு முன்னுங்கூட எஜமான் ஐயா அவர்கள் கலாவதியம்மாளிடம் அதிக அன்போடுதான் நடந்து வந்தார். திடீரென்று அவருக்கு அப்படி எண்ணம் மாறியதற்குக் காரணம் என்னவோ எனக்குத்தெரியாது. பிறகு எஜமான் ஐயா அவர்களுடைய தந்தையார் தம்முடைய புத்திரர் எண்ணப்படியே கலியாணம் நடத்த வேண்டும் என்று எண்ணி எஜமான் ஐயா அவர்களுக்கும் மதனசுந்தரியம்மாள் அவர்களுக்கும் கலியாணம் முடித்தார். பிறகு எஜமான் ஐயா பட்டினத்திலேயே வசிக்க விரும்பியதால் இந்த மாளிகையைக் கட்டி இதில் அவர் தந்தையார் அவரைக் குடியிருக்கச் செய்தது மன்றி என்னையும் இவ்விடத்திற்கு அனுப்பி விட்டார்.

குணசீலர் :—தியாகராயா, இப்பொழுது மணியென்ன இருக்கும்?

குணசீலர் இவ்வாறு கூறியவுடனே அவருக்குப்பின் புறத்தில் சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரத்தில் மணி பத்தடித்தது. உடனே அவர் தியாகராயனை யனுப்பிவிட்டு அம்மாளிகையின் பின்கட்டிலிருந்த கூடத்திற்குச் சென்று அங்குத்தங்கமென்னும் வேலைக்காரி அவருக்குக் கூறியபடி யமைக்கப்பட்டிருந்த டெலிபோனிடத்தில் மாட்டப்பட்டிருந்த புத்தகத்தையெடுத்து அதில் தங்கசாலையில் அம்பலவாண முதலியார் நண்பர் மரகதசுந்தரர் வசிக்கும் தணிகை விலாசத்திற்குரிய டெலிபோன் எண்ணைப் பார்த்தார். (Telephone Number) பிறகு அவர் பேசுங்கருவியை யெடுத்துக் காதிலமைத்துக் கொண்டு அந்த எண்ணைச் சொல்லி மரகதசுந்தரரைக் கூப்பிட்டார்.

'ஆம். நான்தான் மரகதசுந்தரன். நீங்கள் யார்?' என்னும் சத்தம் அவருக்குக்கேட்டது.

'நான்தான் துப்பறியும் குணசீலன். மரகதசுந்தரரே, உங்களுக்கு நண்பரான அம்பலவாண முதலியாரவர்களுடைய தமயனார் மோகனசுந்தர முதலியார் அவர்கள் கற்பகவனத்தில் நேற்று இரவு கொலை செய்யப்பட்ட விஷயம் உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று எண்ணுகிறேன். அக்கொலை வழக்கில் குற்றவாளியைக்கண்டு பிடிக்கும்படி என்னை உம்முடைய நண்பரவர்கள் தாயார் மரகதவல்லியம்மாள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். நான் இவ்வழக்கையொட்டி அம்பலவாணமுதலியாரவர்களைச் சில விஷயங்கள் கேட்க வேண்டியிருந்தபடியால் அவரைக் கேட்டறிந்தேன். அவர் கூறிய விஷயங்களைத்தொடர்ந்து நான் உம்முடன் சில வார்த்தைகள் பேசவேண்டும். தயவு செய்து தாங்கள் எனக்காகச் சிறிது நேரம் வீட்டிலிருக்கமுடியுமா?' என்று கேட்டார் குணசீலர்.

'குணசீலரே, நீங்கள் இப்பொழுதே வந்தால் என்னைப் பார்க்கலாம். என்னாலான உதவியை நான் உங்களுக்குச் செய்வதில் ஒரு தடையுமில்லை,' என்று அவருக்குப் பதில் ஏற்பட்டது.

குணசீலர், 'ஆ! ஆ!! அப்படியே இதோ வந்து விடுகிறேன்,' என்று கூறிவிட்டுக் கற்பகவனத்தை விட்டு வெளியே வந்தார். அங்கு அவ்வீட்டு ஆள் ஒருவன் நின்றுகொண்டிருக்கக் கண்டு, அவர் அவனிடம் தாம் வந்தவிஷயத்தைக் காமகோட்டியம்மாளிடம் தெரிவிக்கும் படிக்கும், தாம் அவசரமாக வெளியேபோகவேண்டி யிருக்கிறதால் அவரைப் பார்க்க முடியவில்லை யென்றும் சொல்லிவிட்டுத் தம்முடைய மோட்டார் வண்டியிலேறி வண்டியைத் தங்கசாலைக்கு விரைவாகச் செலுத்தும்படி சதாசிவனுக்குக் கூறினார். பிறகு சில நிமிஷங்களுக்குள் சதாசிவன் மோட்டார் வண்டியைத் தங்கசாலைக்குச் செலுத்தி அவர் உத்தரவின் மேல் தணிகைவிலாசத்திற்கு முன் நிறுத்தினான். உடனே குணசீலர் வண்டியைவிட்டிறங்கித் தணிகைவிலாசத்தினுட் சென்றார். உடனே அவ்வீட்டிலிருந்து ஒரு வாலிபர் அவர் எதிரில் வந்து, அவரைப்பார்த்து, 'வாருங்கள்; தாங்கள் தானே துப்பறியும் குணசீலர்?' என்று கேட்டார்.

குணசீலர் அவ்வாலிபர் குரலோசையைக் கேட்டு, அவர் சற்றுமுன்பு தம்முடன் டெலிபோனில் பேசிய மரகதசுந்தரர் என்றுணர்ந்து, 'மரகதசுந்தரரே, ஆம்! நான்தான் துப்பறியும் குணசீலன்,' என்றார்.

மரகதசுந்தரர் :—குணசீலரே, மன்னிக்கவேண்டும். எனக்கு உம்மைப்பற்றிக் கேள்வியுண்டு. ஆனால் நான் உம்மை நேராகப் பார்த்ததில்லை. இன்றைக்குப்பார்க்கநேர்ந்தது

அதிர்ஷ்டவசமே. அம்பலவாண முதலியார் அவர்களுடைய தமயனார் மோகனசுந்தர முதலியார் அவர்கள் கொலையைப்பற்றி நான் நேற்று இரவு இந்த பத்திரிகையில் பார்த்தேன். ஐயோ! எனக்கு அதைப்பார்த்ததே மிகுந்ததுக்கம் ஏற்பட்டு விட்டது. அம்பலவாண முதலியாரவர்கள் ஆற்றமுடியாத துன்பத்தை யனுபவிக்க நேர்ந்ததைப்பற்றி என்மனம் வருந்துகிறது. அன்பரே, நீங்கள் இவ்விஷயமாக என்னைக் கேட்க விரும்புவதென்ன?

குணசீலர்:—மரகதசுந்தரரே, முந்தாம்நாள் இரவு அம்பலவாணமுதலியார் அவர்கள் இங்கு எத்தனைமணிக்கு வந்தார்? சற்றேறக்குறைய ஒரு மணியிருக்குமா?

மரகதசுந்தரர்:—இருக்கலாம். ஆனால் சரியாகச்சொல்ல முடியாது. நான் முந்தாம்நாள் இரவு நெடுநேரம் வாசித்துக்கொண் டிருந்துவிட்டுப் படுக்கைக்குப் போகும் நேரத்தில் அவர் இங்கு வந்தார். நான் பரீட்சைக்குப் படிக்கவேண்டியிருப்பதால் இரவில் படுத்துக்கொள்ள அதிக நேரம் ஆய்விடுகிறது. அவர் இங்கு வந்தபொழுது அலுத்திருந்தார். நான் அவரை, 'எங்கிருந்து இவ்வளவு அலுப்புற்று வருகிறீர்?' என்று கேட்டேன். அதற்கு அவர், தாம் சுகுணவிலாசசபையிலிருந்து வருவதாகவும், நான் முன்னமே ஒருமுறை பொது ஜன சிங்காரத்தோட்டத்தில் நடைபெறும் பாண வேடிக்கைக்குப் போகவேண்டும் என்று அவரிடம் சொல்லி யிருந்ததால் விருப்பமானல் அழைத்துக் கொண்டு போகலாமென எண்ணி இங்கு வந்ததாகவும் கூறினர். உடனே நான் அவருடன் வருவதாகக்கூறி, நான் உடை தரித்துக்கொள்ளும் வரையில் அவர் தம்

முடைய மேல் சட்டையைக் கழட்டி வைத்து விட்டு மின்சார விசிறியின் காற்றில் சிறிது இளைப்பாறலாம் என்று சொன்னேன். அவர் தம்முடைய மேல் சட்டையைக் களைந்து என் படுக்கையின் மேல் போட்டு விட்டு உட்கார்ந்தார். அப்பொழுது அவருடைய உள் சட்டையின் கைப்புறம் காற்றில் அலைந்ததைக்கண்டு, 'கைப் பொத்தான் எங்கே?' என்று கேட்டேன். அவர் அப்பொழுதுதான் அதை யறிந்து, 'எங்கோ விழுந்து போய் விட்டது,' என்று கூறினார். உடனே அவருக்கு என் பெட்டியிலிருந்த என்னுடைய கைப் பொத்தானொன்றைக் கொடுத்துப் போட்டுக்கொள்ளச் சொல்லிப் பிறகு உடை யுடுத்துக்கொண்டு அவருடன் புறப்பட்டு அவர் வண்டியிலேயே பொது ஜன சிங்காரத் தோட்டத்திற்குச் சென்றேன். அங்கு நெடு நேரம் வேடிக்கை பார்த்தோம். பிறகு அவர் என்னைக் கொண்டு வந்து இங்கு விட்டு விட்டுப் போய் விட்டார்.

குணசீலர் :—உங்களுக்கு அம்பலவாண முதலியாரை வெகு நாளாகத் தெரியுமோ ?

மரகதசுந்தரர் :—எனக்கு அவரை வெகு நாளாகத் தெரியும். நானும் அவரும் ஒரு சாலை மாணாக்கர்கள்; ஒரே வகுப்பில் படித்தவர்கள். மோகனசுந்தர முதலியார் அவர்களைத் திருடனா கொலை செய்தான் ?

குணசீலர் :—இப்பொழுது அவ்வளவுதான் தெரிகிறது. அதற்குமே லொன்றும் நிச்சயிக்க முடிய வில்லை. அன்பரே, அன்றைய தினம் அம்பலவாணர் இங்கு வந்த பொழுது இத்தனை மணி இருக்கும் என்பதை நீங்கள் திட்டமாகச் சொல்ல முடியாதோ ?

மரகதசுந்தரர்:—முடியாது. நான் அப்பொழுது மணியென்ன ஆயிற்றென்று கவனிக்கவில்லை. என் கருத்துப் பாண வேடிக்கையில் சென்றிருந்தது.

குணசீலர்:—மரகதசுந்தரரே, நான் உங்களுக்கு இந்தத் துன்பங் கொடுத்ததற்காக வருந்துகிறேன்.

மரகதசுந்தரர், 'அன்பரே, தாங்கள் அவ்வாறு சொல்லுதல் கூடாது. என்னுலான வரையில் உமக்கு இவ்விஷயத்தில் உதவிபுரிவதில் சிறிதும் எனக்குத் துன்பமுண்டாகாது. நீங்கள் விரும்பும்போது இங்கு வந்து என்னைப் பார்க்கலாம்,' என்று கூறினுர். உடனே குணசீலர் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு தம்முடைய வீட்டுக்கு வந்தார். வழியில் அவருக்குப் பற்பல எண்ணங்கள் தோன்றின.

குணசீலர் வீட்டுக்கு வந்தவுடன் பகற் போஜனஞ் செய்து விட்டுத் தம்முடைய வாசிப்பறைக்குச் சென்று உட்கார்ந்து போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையவர்களின் வருகையை எதிர்ப்பார்த்திருந்தார். கற்பகவனத்தில் மோகனசுந்தாருடைய அறையில் நடந்த ஒரு விஷயம் அவருடைய ஞாபகத்தை விட்டகலவில்லை. மரகதவல்லியம்மாள் தன்னுடைய சிறிய புத்திரன் அம்பலவாணனே மோகனசுந்தரரைக் கொலை செய்திருக்கவேண்டும் என்று எண்ணினுளென்றும், இல்லாவிட்டால் அவள் தன் சிறிய புத்திரனை அவ்வறையினருகில் பார்த்த வுடனே, 'அடே பாவீ!' என்று கூறியிருக்கமாட்டாளென்றும் அவர் கருதினுர். அப்படியானுல் அவள் இவ்வழக்கை ஆராய்ந்து உண்மைக் குற்றவாளியைக் கண்டு பிடிப்பதற்காகத் துப்பறியும் உத்தியோகஸ்தர் ஒருவரை ஏன் ஏற்படுத்த வேண்டும்?

ஒருவேளை, போலீஸாருடைய குழப்பத்திற்கு இடங்கொடாமலிருப்பதற்காக அம்பலவாணன் குணசீலரிடம்

கூறியபடி அவள் அவரை ஏற்படுத்தி யிருக்கக்கூடுமோ? அல்லது முதலில் அவரை இவ்வழக்கில் தப்பறியும்படி செய்து பிறகு தன் சிறிய குமாரனைக் கொலைக் குற்றத்தி லிருந்து நீக்கி உண்மையை மறைத்துப் பொய்க் கதைகளைக் கட்டி விடும்படி அவருக்கு இலஞ்சம் முதலியன கொடுத்து ஒருவாறு இவ்வழக்கை ஒழுங்கு படுத்தி விடுவோம் என்று எண்ணி அவள் அவ்வாறு செய்தாளோ? என்னவோ ஒன்றுந் தெரியவில்லை. எல்லாம் போகப் போகத் தானே தெரியும்?

குணசீலர் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். கோவிந்தன் அவரிடம் வந்து, 'எஜமானரே, யாரோ ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் உங்களைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறார்,' என்றான். குணசீலர் வந்திருப்பவர் இன்ஸ்பெக்டர் துரை சிங்கம் பிள்ளையே என்பதை யுணர்ந்து கோவிந்தனை நோக்கி, 'கோவிந்தா, அவரை உடனே இங்கு அழைத்துக் கொண்டுவா,' என்று கூறினார். கோவிந்தன் அவ்வாறே சென்று அவரை மாடிக்கு அழைத்துக்கொண்டு வந்தான்.

இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை குணசீலர் காட்டிய ஒரு நாற்காலியில் உட்கார்ந்த வுடனே குணசீலரைப் பார்த்து, 'குணசீலரே, அம்பலவாண முதலியார் சுகுண விலாச சபையிலிருந்து பன்னிரண்டு மணி அடிக்கப் பத்து நிமிஷம் இருக்கும் பொழுது வெளிச் சென்றதாக வாயிற் காவலாளி கூறினன். அவன்தான் ஒவ்வொருவரும் வெளிச் செல்லும்பொழுது அவரவருடைய வண்டியைக் கூப்பிட்டு விடுவது வழக்கம். அவனைத்தவிர அங்குச் சோடா விற்கிற மற்றொருவன், தான் அவருக்கு அன்று ஒரு சோடா கொடுத்ததாகவும் அப்பொழுது அவர் அதைக் குடித்து விட்டு வெளிச் செல்லுவதற்கு எழுந்து சோடா

புட்டியை அவனிடங் கொடுத்து விட்டு, 'மணி யென்ன?' என்று அவனைக் கேட்டதாகவும், அவன் மணி பார்த்துச் சொன்னதாகவும், அப்பொழுது காவலாளி கூறியபடியே பன்னிரண்டு மணிக்குப் பத்து நிமிஷமே இருந்ததாகவும் கூறினன்,......................குணசீலரே, தங்களுக்கு ஏதாகிலும் புதிய விஷயம் தோன்றியதா?' என்று கேட்டார்.

குணசீலர் சிறிது நேரம் மௌனமாக இருந்து, பிறகு இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையைப் பார்த்து, 'பிள்ளை யவர்களே, கற்பகவனத்தில் சமையல் வேலை செய்யும் தியாகராயனிடம் இருந்து ஏதாகிலும் அறிந்தீரா?' என்று கேட்டார்.

உடனே துரைசிங்கம் பிள்ளை குணசீலரை நோக்கி, 'நான் ஒன்றும் அறிய வில்லையே!' என்று கூறி வெகு ஆச்சரியத்துடன், 'என்ன? என்ன? அவனைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள்?' என்று கேட்டார்.

'அவன் மீது எப்பொழுதும் ஒருகண் இருக்கட்டும்,' என்று கூறினர் குணசீலர். உடனே இன்ஸ்பெக்டர் துரை சிங்கம் பிள்ளை அவரிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியே சென்றார்.

---

## ஏழாம் அத்தியாயம்

---

### கள்ளச் செயல்கள் மெள்ள வெளியாகும்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை வெளியே சென்றதும் துப்பறியுங் குணசீலர் எதற்காகவோ கோவிந்தனைக் கூப்பிடுவதற்குச் சுவரிலிருந்த கூப்பிடு மணியை யழுத்தத் தம் நாற்காலியை விட்டெழுந்தார். அதற்குள்

கோவிந்தன் அவரிடம் வந்து, 'எஜமானரே, யாரோ ஓர் ஆள் உங்களைப் பார்க்க வேண்டுமென்று கீழே காத்துக் கொண்டிருக்கிறான். அவன் பெயர் தியாகராயனும். கற்பக வனத்திலிருந்து வந்திருப்பதாகக் கூறுகிறான்,' என்று சொன்னான். குணசீலர் அவனை அழைத்து வரும்படி கோவிந்தனுக்குக் கட்டளையிட்டார்.

கோவிந்தன் உடனே கீழே சென்று தியாகராயனையழைத்து வந்து குணசீலரிடம் விட்டுக் கீழே சென்றான். குணசீலர் தியாகராயனை நோக்கி, 'தியாகராயா, உட்காரு. என்ன சமாசாரம்? இப்படிப்பட்ட வெய்யிலில் ஏன் ஓடிவந்தாய்?' என்று கேட்டார்.

தியாகராயன் :—ஐயா அவர்களே, நான் உங்களிடம் இதுவரையில் கூறிய விஷயங்கள் அவ்வளவும் உண்மைதான். ஆனால் முந்தாம்நாள் இறவு நடந்த ஒரு விஷயத்தை மாத்திரம் நான் சொல்லவில்லை. அதை உங்களிடத்தில் சொல்லுகிற வரையில் என் மனம் சாந்தமடையவில்லை. அதற்காகத்தான் சமையல் செய்து வீட்டிலுள்ளவர்களுக்குப் பரிமாறிவிட்டு வெளியே கடைத் தெருவிற்குச் சென்று வருவதாக அங்குள்ளவர்களுக்குக் கூறி ஒரு குதிரை வண்டியை வெளியில் வந்து வாடகைக்குப் பேசிக்கொண்டு இவ்விடத்திற்கு வந்தேன்.

குணசீலர் :—என்ன விஷயம் சொல்லுவதற்கு மறந்தாய்? சொல்லு.

தியாகராயன் :—நான் அன்று இராத்திரி எல்லாக் கதவுகளையும் மூடிக்கொண்டு என் படுக்கைக்குச் சென்றேன். சிறிதுநேரம் எனக்குத் தூக்கமே வரவில்லை. ஆகையினால் படுக்கையில் அப்படியும் இப்படியும் புரண்டு

கொண்டிருந்தேன். அப்பொழுது எனக்கு ஒரு ஞாபகம் வந்துவிட்டது. ஐயா அவர்கள் மன்னிக்கவேண்டும். சிறுபொழுதில் இருந்தே யாழும் வழக்கம்—பொடிபோடும் வழக்கம்—எனக்கு ஏற்பட்டு விட்டதால் இரவில் அது இல்லாமல் எனக்குத் தூக்கம் வருவதே கிடையாது. ஆகையினால் நான் உடனே என் இடுப்பைத் தடவிப் பார்த்தேன். பொடி டப்பியைக் காணவில்லை. அதன் பிறகு அதைச் சமையலறையில் மாடத்தில் வைத்துவிட்டது என் ஞாபகத்திற்கு வந்தது. 'அதை யெடுத்துக் கொண்டு வரலாம்,' என்று எண்ணித் தோட்டத்தின் புறமாக, எஜமான் ஐயா அவர்கள் வாசிப்பு அறைக்கு எதிரிலுள்ள சமையலறைக்குச் சத்தம் செய்யாமல் எழுந்து சென்றேன். சத்தம் செய்தால் யாராகிலும் எழுந்துகொண்டு என் பொடிப்பைத்தியத்தைப்பற்றித் தெரிந்துகொண்டு சிரிக்கப் போகிறார்கள் என்கிற வெட்கத்தினால் உண்டான பயம் என்னை அப்படிச் செய்யத்தூண்டியது. நான் எஜமான் ஐயா அவர்களுடைய அறையினருகிற் சென்றதும் பெரிய ஆச்சரிய முண்டாயிற்று. அவ்வறையில் எஜமான் ஐயா அவர்கள் கோபக்குரலோடு பேசும் வார்த்தைகள் என் காதிற் கேட்டன. நான் முதலில் அவர் ஒரு சமயம் கனவுகண்டு தமக்குத் தாமே அப்படி வாய் பிதற்றுகிறாரோ என்று எண்ணினேன். ஏனென்றால் நான் சில சமயங்களில் எஜமான் ஐயா அவர்கள் தூக்கத்தில் அப்படிப் பேசுவதைக் கேட்டிருக்கிறேன். ஆனால் பிறகு எனக்கு இரண்டு குரல் கேட்டன. இரண்டாங்குரல் எனக்கு நன்றாய்த் தெரிந்தது.

இவ்வாறு கூறியபோது தியாகராயன் தேகம் நடுங்கியது; குரல் தழுதழுத்தது.

உடனே குணசீலர் அவனை ஆச்சரியத்துடன் நோக்கி, ' அது யாருடைய குரல்?' என்று கேட்டார்.

தியாகராயன் :—அது——அது——அம்பலவாண முதலியார் ஐயா அவர்கள் குரலே.

குணசீலர் :—அவர் என்ன சொல்லிக்கொண் டிருந்தார்?

தியாகராயன் :—அவர் சொல்லிய வார்த்தைகளை அப்படியே ஒப்பிக்க என்னால் முடியாது. ஆனால் அவர்கள் பேசிய கோபவார்த்தைகளால் அவர்களுக்குள் வாய்ச்சண்டை நடக்கிறதென்று மாத்திரம் நான்தெரிந்துகொண்டேன். அம்பலவாண முதலியார் ஐயா அவர்கள் தம்முடைய தமயனைத் தமக்குக் கொஞ்சம் பணம் கொடுக்க வேண்டுமென்று கேட்டார். பிறகு அவர், 'நான் பட்ட கடனை வேறுயார் கொடுப்பார்கள்?' என்று கூறியது மட்டும் எனக்கு நன்றாகக் கேட்டது. அதை நான் மறக்கவே முடியாது. அவ்வறையின் கதவு திறந்திருந்ததால் அதற்கு எதிரிலுள்ள சமயலறைக்கு எப்படிச் செல்வது என்று சமயம் பார்த்துக்கொண்டு நான் நின்ற இடத்திலேயே நின்றேன். கடைசியில்—

குணசீலர் :—தியாகராயா, ஏன் இப்படித் தயங்குகிறாய்? நடந்த விஷயத்தைச் சீக்கிரம் சொல்.

தியாகராயன் :—கடைசியில்——அம்பலவாண முதலியார் ஐயா அவர்கள் வெகுகோபத்தோடு ஏதோ சொன்னார். உடனே ஒரு குத்துச்சத்தம்—கேட்டது. நான் அதை உண்மையில் நேரேபார்க்கவில்லை. ஆனால் அம்பலவாண முதலியார் ஐயா அவர்களே அப்படிச் செய்திருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. ஏன் என்

ருல் உடனே எஜமான் ஐயா அவர்கள் அதிக கோபத்தோடு, 'அடே! இவ்வளவு துணிகரமுண்டானதா உனக்கு? போக்கிரிப் பயலே! இவ்விடத்தை விட்டு உடனே அப்புறம் போ. என் கண் முன் நில்லாதே. மடயா,' என்று கூறினர்.

குணசீலர்:—உடனே அம்பலவாண முதலியார் வெளியே போய் விட்டாரா?

தியாகராயன்:—ஐயா அவர்களே, அஃது எனக்குத் தெரியாது. நான் அதை அறிந்துகொள்ள அங்கே நிற்கவில்லை. வேறு அவர்கள் பேசும் வார்த்தையைக் கேட்கவும் எனக்குப் பிரியமில்லை. அவர்களில் யாரேனும் எங்கே வெளியே வந்து என்னைப் பார்த்து விடுவாரோ என்னும் பயம் என் கழுத்தைப் பிடித்துத் தள்ளியது. உடனே பொடிப் பைத்தியம் என்னைவிட்டு எங்கோ பறந்து சென்றது. நான் என்னுல் கூடிய வரையில் சத்தஞ் செய்யாமலும் அதி விரைவாகவும் என் படுக்கைக்குச் சென்றேன்.

குணசீலர்:—அதன் பிறகு நீ ஏதாகிலும் துப்பாக்கிச் சத்தங் கேட்டிருக்கக் கூடுமா?

தியாகராயன்:—அப்புறம் நான் ஒருவிதச் சத்தத்தையுங் கேட்கவில்லை. என் படுக்கையறை மேல் மாடியில் இருப்பதால் நான் அங்குச் சென்றவுடனே கதவை நன்ருகச் சாத்திக்கொண்டு படுத்து விட்டேன். பிறகு இவ்வீட்டு வேலைக்காரியாகிய தங்கம் பொழுது விடியும் சமயத்தில் இட்ட கூச்சல் என்னை எழுப்பிவிட்டது. உடனே நான் கீழே ஓடிவந்து நடந்ததைக் கண்டேன். இவ்வளவுதான் எனக்குத் தெரியும்.

குணசீலர் :—அன்றிரவு நீ எத்தனை மணிக்குப் பொடி டப்பியை யெடுக்கக் கீழே சென்றாய்?

தியாகராயன் :—அப்பொழுது பன்னிரண்டுமணி அடித்துச் சிறிது நேரம் ஆய் இருக்கலாம்.

குணசீலர் :—அவ்வறையினிடத்தில் எவ்வளவு நேரம் நின்று கொண்டிருந்தாய்?

தியாகராயன் :—அதைச் சரியாகக் கூற முடியாது. அதிகமாக இருந்தால் பத்து அல்லது பதினைந்து நிமிஷங்களுக்கு மேலிராது. ஏன் என்றால் நான் என் படுக்கையறைக்குத் திரும்பிப் போகும்பொழுது மேல்மாடியின் கூடத்திலுள்ள கடிகாரத்தில் மணி பன்னிரண்டரையாயிருந்ததைப் பார்த்தேன்.

குணசீலர் :—நீ இதை உண்மையாகக் கூற முடியுமா? அந்த நேரத்தில் கடிகாரத்தைப் பார்க்க வேண்டும் என்னும் எண்ணம் உனக்கு ஏன் உண்டாயிற்று?

தியாகராயன் :—அன்று வெளியே கலியாணத்திற்குப் போயிருந்த காமகோட்டியம்மாள் அவர்கள் ஒரு வேளை திரும்பி வந்துவிட்டால் இவர்கள் சண்டை யிடுவதையேனும் அல்லது அம்பலவாண முதலியாரவர்கள் தம்முடைய அறைக்காவது அல்லது வெளியிலாவது செல்லுவதையேனும் பார்த்துவிடக் கூடும் என்று எண்ணி நான் அப்பொழுது மணி என்ன இருக்கும் என்று கடிகாரத்தைப் பார்த்தேன்.

குணசீலர் :—உம்———நீ ஏன் இதை என்னிடம் முன்பே கூறி விடாமல் இப்பொழுது இங்கே தனியே வந்து கூறுகிறாய்?

இதைக்கேட்ட வுடனே தியாகராயன் சிறிது நேரம் பேசாதிருந்துவிட்டுப் பிறகு குணசீலரைப்பார்த்து, 'ஐயா

அவர்களே, நான் சென்ற ஒன்பது வருஷங்களாக அந்தக் குடும்பத்தில் வேலை செய்து வருகிறேன். எனக்கு அம்பலவாண முதலியார் ஐயாவினால் ஒருவித நன்மையும் இல்லாவிட்டாலும் அக்குடும்பத்திலுள்ள ஒருவரை இப்படி வெளிக்குக் காட்டிக் கொடுக்க எனக்குப் பிரியமில்லை. அவர் எனக்கு இதுவரையில் ஒரு நன்மையும் செய்ததில்லை. ஆனால் போலீஸ் உத்தியோகஸ்தர்களாவது நீங்களாவது அம்பலவாண முதலியார் ஐயா அவர்கள் திரும்பி வந்து இரவில் தம்முடைய தமயனுருடன் சண்டையிட்டார் என்பதைத் தெரிந்து கொண்டால் அவர் எஜமான் ஐயா அவர்களைக் குத்தும்போதே கொன்று விட்டார் என்று நினைக்கலாம் என்று எண்ணிப் பயந்தேன்.

குணசீலர் :—அப்படியிருக்க இப்பொழுது உன்னுடைய மனம் மாறியதற்குக் காரணமென்ன ?

தியாகராயன் :—நான் இதைப்பற்றி வெகு நேரம் யோசித்துப் பார்த்தேன். முடிவாக இதை ஒளிப்பதால் நீதியைக் கெடுக்க வேண்டி நேரிடும் என்பது எனக்குப் புலப்பட்டது. உடனே நான் இதைத் தங்களிடம் தெரிவித்து விடவேண்டும் என்று எண்ணினேன்.

குணசீலர் :—உன்னுடைய கருத்து எனக்குத் தெரிந்தது. ஆனால் நீ ஏன் மரகதவல்லியம்மாளிடம் இதைத் தெரிவிக்கவில்லை ?

தியாகராயன் :—நீங்கள் சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே !

குணசீலர் சிரித்துக் கொண்டே, ' தியாகராயா, அம்பலவாண முதலியாரவர்கள்தான் நீ இதை மறைப்பதனால் உனக்கு ஒன்றுங் கொடுக்க மாட்டார் என்று தெரியுமே ; அப்பொழுது நீ இதை அவருடைய தாயாரிடத்

தில் ஏன் தெரிவிக்கக் கூடாது? நீ இவ்வளவு கஷ்டப்பட்டு இதை என்னிடம் வந்து தெரிவித்ததால் நான் உனக்கு ஒன்றுங் கொடுக்கப் போகிறதில்லை என்பது உனக்குத் தெரியும். மரகதவல்லியம்மாளிடம் தெரிவித்திருந்தால் உனக்குப் பெரும் பொருள் கிடைத்திருக்குமே!" என்று கூறினர்.

இதைக் கேட்டதும் தியாகராயனது முகத் தோற்றம் மாறியது. உடனே அவன் ஆச்சரியத்தோடு குணசீலரைப் பார்த்து, 'ஐயா அவர்களே, உங்களுக்கு இது தெரியும் என்று நான் நினைக்கவில்லை. நீங்கள் சொல்லுவது உண்மையே. அதனால் எனக்கு ஒருவித இழிவுமில்லை. நானே ஏழை. எனக்குப் பணம் முக்கியமாக வேண்டியிருக்கிறது. ஆனல் அம்பலவாணரோ இவ்விஷயத்தில் எனக்கு ஒரு காசும்கொடுக்க மாட்டார். நேற்று நான் இவ்விஷயமாய் அவரைப் பார்க்கலாம் என்று போனேன். அவர் கோபத்தால் என் மீது எறிந்து விழுந்து கண்டபடி திட்டி வெளியே போகும்படி கூறினர். மரகதவல்லியம்மாளை யாகிலும் பார்க்கலாம் என்று நினைத்தேன். அந்தம்மாள் உடம்பு சுக மில்லாமையால் ஒருவரையும் பார்க்க முடியாதென்று சொல்லி விட்டதாகக் கேள்விப்பட்டேன். அப்படியும் நான் இன்றைக்கு அந்தம்மாளுக்கு இதைப்பற்றி எழுதி ஓர் ஆளிடங்கொடுத்து நுங்கம்பாக்கத்திலுள்ள அவர்கள் புது வீட்டுக்கு அனுப்பினேன். அக்கடிதம் அந்த அம்மாளிடம் சேர்ந்ததோ இல்லையோ தெரியவில்லை. அப்படிச் சேர்ந்திருந்தால் அந்த அம்மாள் உடனே என்னை யழைத்திருப்பார்கள். அம்பலவாண முதலியார் அவர்களை மறுபடியும் பார்ப்பதனல் பயனில்லை யென்பது எனக்கு நன்றாகத் தெரியும். எனக்கு இவ்விஷயம் தெரிந்திருப்பதை நீங்களாவது போலீஸ் இன்ஸ்பெக்டர் அவர்களாவது எப்பொழுதாகிலும் கண்டு பிடித்து

விடக் கூடும் என்பது எனக்குத்தெரியுமாதலால் உடனே உங்களிடம் இவ்விஷயத்தைச் சொல்லி விடுவது நல்லது என்று எண்ணினேன். என் பெயர் கெட்டுப்போய் விடக் கூடாது என்பதே என்னுடைய நோக்கம்,' என்று ஒன்றை யும் விடாமற் கூறி விட்டான்.

குணசீலர் :—தியாகராயா, நீ இப்பொழுது உன் பெயர் கெட்டுப் போகாதிருக்க என்ன செய்ய முடியும்? இவ் வழக்கு நீதி சபையில் (court) விசாரணைக்கு வரும் பொழுது உன்னையும் நீதி சபையார் ஒரு சாக்ஷியாக அழைப்பார்கள். அப்பொழுது நீ பணம் பெறுவதற் காக—வஞ்சகமாக இவ்விஷயத்தை மறைத்து வைத்து அக்குடும்பத்தாரிடம் இலஞ்சம் பெறுவதற்காக—எங் களிடம் உண்மையைத் தெரிவிக்காமலிருந்ததால் நீதி சபையார் உன்மீது குற்றஞ் சாட்டி உன்னைக் கைதி செய்து விடக்கூடும்.

தியாகராயன் :—ஐயோ! ஐயோ!! கைதிசெய்து விடுவார் களா? நான் என்ன செய்வேன்? என் பெயர் கெட்டு விடுமே! நான் இத்தனை நாள் பிழைத்த பெருமை பாழாய்ப் போகுமே! ஐயோ! இக்குடும்பத்தார் நல்ல வர்களாதலால் வெகு நாளாக இவர்களையே அண்டிப் பிழைத்து வந்தேன். இதைக் கேள்விப்பட்டால் வேறுயார்என்னை வேலையில்வைத்துக்கொள்ளுவார்கள்? ஐயா அவர்களே, தாங்களே என்னைக் காப்பாற்றவேண் டும். நான் இது இவ்வளவு கெடுதியைக் கொடுக்கும் என்று எண்ணவேயில்லை. பெரிய பணக்காரர்கள் ஆயிற் றே; அவர்களிடம் இதைச் சொன்னால் இதை வெளி யிடாமலிருப்பதற்காக ஏதாகிலும் கொடுப்பார்கள்; அதை வைத்துக்கொண்டு பிழைக்கலாம் என்று எண்ணி

னேன். மேலும் இந்த ஏழைக்கு ஏதோகொஞ்சம்பணம் கொடுப்பதால் அப்படிப்பட்ட பணக்காரர்களுக்கு என்ன தரித்திரம் உண்டாய் விடப் போகிறது? ஐயோ! நான் ஒருநாளும் ஒருவரை மோசம் செய்ய வேண்டு மென்று என் ஆயுளில் இது வரையிலும் நினைத்ததே இல்லை.

குணசீலர் :—சரி, தியாகராயா, நீ என்னிடம் வந்து இவ் விஷயத்தைத் தெரிவித்ததால் நான் என்னாலாகும் நன் மையை உனக்குச் செய்வேன். ஆனால் நீ இதை வேறு ஒருவரிடமும் சொல்லுதல் கூடாது. நான் எப்பொழுது உன்னை இதைப்பற்றிக் கேட்கிறேனோ அப்பொழுது சொல்லுவதற்கு நீ சித்தமாக இருக்க வேண்டும்.

தியாகராயன் :—ஆ! ஆ!! அப்படியே ஆகட்டும். நீங்கள் என்ன சொல்லுகிறீர்களோ அப்படியே நான் நடந்து கொள்ளத் தடையில்லை. நீங்கள் தான் இப்பொழுது எனக்குக் கடவுள். உங்களைவிட எனக்குத் தாய் தந் தையர் யாரும் இல்லை.

தியாகராயன் இவ்வாறு கூறியதைக் கேட்ட குணசீலர் அவனைப் பார்த்து, 'சரி ; நீ போய் வரலாம்,' என்று கூறி னார். தியாகராயனுக்குத் தலையிலிருந்த பாரத்தைத் தரையி லிறக்கியதுபோ லாயிற்று. குணசீலர் முன்னிலையில் ஒரு நிமிஷங் கூட நிற்பதற்கு அவனுக்குப் பிடிக்கவில்லை. அவன் கால்கள் உதறலெடுத்தன. அவன் நடுங்கிக் கொண்டே அவ்வறையைவிட்டு வெளியேவந்து மறுபடியும் குணசீலரை நோக்கி, 'கடவுளே, நான் கூறியதை—இந்த ஏழை கூறி யதை—நீங்கள் மறக்கக் கூடாது,' என்று கூறிப் படியை விட்டிறங்கித் தெருவில் நின்றுகொண்டிருந்த—அவன் கூலிக்

குப் போகவரப் பேசிக்கொண்டுவந்த—வண்டியில் ஏறியுட்கார்ந்து, வண்டியை வெகு வேகமாய்க் கற்பகவனத்திற்கு ஓட்டும்படி அவ்வண்டிக்காரனுக்குக் கூறினான். அவ்வண்டியும் கற்பகவனத்தை நோக்கி வெகு வேகமாய்ச் சென்றது.

குணசீலர் பின்பு அவருடைய வேலையாள் கோவிந்தனையழைத்துச் சட்டையும் தலைப்பாகையும் கொண்டுவரும்படி அவனிடம் கூறினார். உடனே அவன் அவற்றை அவரிடம் கொண்டுவந்து கொடுத்தான். அவர் அவற்றை யணிந்து கொண்டே கோவிந்தனைப் பார்த்து, 'கோவிந்தா, சதாசிவனைச் சீக்கிரம் வண்டி கொண்டு வரச்சொல்லு. நான் இப்பொழுது நுங்கம்பாக்கத்திற்கு அவசரமாகப் போக வேண்டும்,' என்று கூறினார். உடனே கோவிந்தன் கீழே ஓடினான். சிறிது நேரத்திற்கெல்லாம் மோட்டார் வண்டி வெளியே வந்து நின்ற சத்தம் அவர் காதுக்கு எட்டியது. அவர் தம்முடைய அறையை விட்டுக் கீழே இறங்கி அங்கிருந்த கோவிந்தனிடம் தம்முடைய அறையின் கதவைச் சாத்திப் பூட்டிக் கொள்ளும்படி சொல்லி விட்டு வெளியிற் சென்று வண்டியில் ஏறிக்கொண்டு சதாசிவனைப் பார்த்து, 'சதாசிவா, வண்டியை நேரே நுங்கம்பாக்கத்திற்குச் செலுத்து,' என்று கூறினார். அவன் அவ்வாறே வண்டியை விரைவாகச் செலுத்தினான். வண்டி நுங்கம்பாக்கத்தை யடைந்த வுடன் குணசீலர் சதாசிவனை வண்டியை ஓரிடத்தில் நிறுத்தி, மனோரஞ்சித விலாசம் என்னும் மாளிகை எங்கிருக்கிற தென்று அங்கு யாரையாகிலும் விசாரிக்கச் சொன்னார். சதாசிவன் வண்டியை ஓரிடத்தில் நிறுத்தினான். அச்சமயம் அவ்வழியே தபாற்காரனொருவன் போய்க்கொண் டிருந்தான். சதாசிவன் அவனைப்பார்த்து, 'ஐயா, மனோரஞ்சித விலாசம் என்னும் பெயரையுடைய

மாளிகை எங்கிருக்கிறது?' என்று கேட்டான். அந்தத் தபாற்காரன் சிறிது தூரத்திலுள்ள ஒரு மாளிகையை அவனுக்குச் சுட்டிக் காட்டிச் சென்றான். உடனே சதாசிவன் அம்மாளிகைக்கு வண்டியைச் செலுத்தினான்.

வண்டி மனோரஞ்சித விலாசத்தை யடைந்ததும் குணசீலர் அதிலிருந்திறங்கி அம்மாளிகைக்குள் நுழைந்தார். அவர் அங்கிருந்த ஒரு வேலையாளைப் பார்த்து, 'அம்பலவாண முதலியார் அவர்கள் வீட்டிலிருக்கிறாரா?' என்று கேட்டார். அதற்கு அவ்வேலையாள், 'அதென்னவோ? எனக் கொன்றுந் தெரியாது,' என்று அலட்சியமாகப் பதில் சொல்லிவிட்டு அப்புறஞ் சென்றான். பிறகு குணசீலர் சிறிது நேரம் என்னவோ யோசித்துக்கொண் டிருந்துவிட்டு அதிவிரைவாக அம்மாளிகையின் மேன்மாடிக்குச் செல்லும் படியிலேறி மேலே சென்றார். அம்மாளிகையின் மேன் மாடியில் ஒரு பெரிய கூடமும் அக்கூடத்திற்கு எதிரெதிராக ஒன்றையொன்று சேர்ந்தாற் போல் இரண்டிரண்டு அறைகளுமிருந்தன. குணசீலர் அங்குச் சென்றதும் அக்கூடத்தின் ஒரு புறத்திலிருந்த இரண்டு அறைகளுள் ஒன்றிலிருந்து அம்பலவாணனுடைய வேலையாள் மாணிக்கம் என்பவன் திடீரென்று கதவைத் திறந்துகொண்டு அவர் முன் வந்து, அவரைப்பார்த்து,' ஓ! நீங்களா? வாருங்கள். எஜமான் ஐயாவைப்பார்க்க வந்தீர்கள்போலிருக்கிறது. அவர் வெளியே போய்விட்டாரே?' என்று கூறினான். அப்படியவன் கூறியபொழுது அவன் கண்கள் இரண்டுமுறை அவன் உள்ளிருந்து வந்த அறைக்குப் பக்கத்தறையைச் சந்தேகத்துடன் நோக்கின. குணசீலர் அதை அறிந்துகொண்டார். அவன் பேசியது பொய்யென்பது அவருக்குத் தெரிந்துவிட்டது. உடனே அவர், அவனைப்பார்த்து, 'அப்பா, அவர் இன்னும்

வெளியே போகவில்லை யென்ப துண்மை. இந்த அறையில் நீ என்னசெய்துகொண் டிருந்தாய்? ஏதோ சாமான்களைச் சித்தப்படுத்துகிற சத்தம் கேட்டது! முதலியாரவர்கள் எந்த ஊருக்காகிலும் போகிறாரா?' என்று கேட்டார்.

மாணிக்கம் :—ஆம். ஊருக்குத்தான் போகிறார். நானும் அவருடன் போகிறேன். ஆனால் எந்த ஊருக்குப் போகிறார் என்பதைக் கூற என்னால் முடியாது. ஏனென்றால் அவர் என்னிடம் அதைப்பற்றி யொன்றுங் கூறவேயில்லை. நான் இப்பொழுதுதான் சாமான்களைப் பிரயாணத்திற்குச் சித்தப்படுத்துகிறேன்.

குணசீலர் :—ஆச்சரியமாக இருக்கிறதே! அவர் இதைப் பற்றி யென்னிடம் ஒன்றும் கூறவில்லையே?

மாணிக்கம் :—இல்லை இல்லை. அவர் திடீரென்று நினைத்துக் கொண்டு புறப்பட நிச்சயித்தார். நான் அவர் வந்தவுடன் தாங்கள் வந்து போனதாகத் தெரிவிக்கிறேன். எனக்கு அதிகவேலை யிருப்பதால் ஐயா அவர்கள் என்னை மன்னிக்கவேண்டும்.

குணசீலர் :—அவர் வெளியேபோயிருந்தால் எங்காகிலும் சமீபத்திலுள்ள இடத்திற்கே போயிருக்க வேண்டும். ஆகையினால் அவர் அனேகமாய்ச் சீக்கிரமே திரும்பி வந்துவிடுவார். அப்படி யில்லாவிட்டால் உன்னை அவரிருக்கும் இடத்திற்காவது சாமானுடன் வந்து சேரும்படி டெலிபோனில் உனக்குத் தெரிவிப்பார். ஆகையால் நான் இங்கேயே இருக்கலாம் என்று நினைக்கிறேன்.

மாணிக்கம் :—நீங்கள் இங்கு இருப்பதால் சிறிதும் பயனுண்டாகாது.

குணசீலர் :—எதற்கும் நான் இருந்தேபார்க்கவேண்டும்.

மாணிக்கம் :—ஐயா அவர்களே, தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும். எஜமான் ஐயா அவர்கள் வீட்டிலில்லாத போது ஒருவரையும் உள்ளே விடக்கூடாது என்று எனக்குக் கண்டிப்பாகக் கட்டளை யிட்டிருக்கிறார். நான் அவருடைய கட்டளைக்குக் கீழ்ப்படியவேண்டும் என்பது உமக்குத் தெரிந்ததே.

குணசீலர் :—மாணிக்கம்! நான் சொல்வதைக்கேள். இப்பொழுது ஏற்பட்டுள்ள கொலை வழக்கில் நான் துப்பு அறிவதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன். நான் அவரை இது விஷயமாக இன்றைக்குச் சட்டாயம் பார்த்தாகவேண்டும். ஆகையினால் அவர் வரும் வரையில் இருந்து பார்த்து விட்டுத்தான் போவேன். நீ இவ்வாறு அறியாமல் பேசும் வார்த்தைகளால் உன் எஜமானருக்குப் பெருந்துன்பத்தை விளைக்கிறாய் என்பதில் சிறிதும் சந்தேகமேயில்லை.

மாணிக்கம், 'ஐயா அவர்களே, நான் அவருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டியே அவ்வாறு கூறினேன். நீங்கள் வருவது தெரிந்திருந்தால் அப்படி எனக்குக் கட்டளையிட்டிருக்கமாட்டார். நீங்கள் என்மீது கோபித்தல் கூடாது. நீங்கள் காத்துக்கொண்டிருக்க விரும்பினால் அப்படியே செய்யலாம்,' என்று கூறிக் குணசீலரை அக்கூடத்தில் ஒரு மூலையிலிடப்பட்டிருந்த நாற்காலி யொன்றில் அமரச்செய்தான்.

குணசீலர் புன்னகை புரிந்து, அவனைப்பார்த்து,' மாணிக்கம், நான் இங்குவந்ததால் உன்னுடைய வேலைக்கு இடையூறு உண்டாயிற்று. நீ போய் உன் வேலையைப்பார். அம்பலவாண முதலியார் அவர்கள் வருகிறவரையில் நான் காத்துக்கொண்டிருக்கிறேன்,' என்று கூற மாணிக்கம் அவரை

நோக்கி, 'அப்படியே செய்யுங்கள்,' என்று சொல்லிவிட்டுத் தன் அறைக்குச் சென்று விட்டான்.

குணசீலர் அங்கேயே காத்துக்கொண் டிருந்தார். மூன்றுமணி நேரம் ஆயிற்று. மாணிக்கம் தன் வேலையை யெல்லாம் முடித்துக்கொண்டு அறையைவிட்டு வெளியே வந்தான். குணசீலர் அங்கேயே உட்கார்ந்துகொண் டிருப்பதைக் கண்டு அவன் முகஞ் சுளித்தது. அப்பொழுது அக்கூடத்தில் அமைக்கப்பட்டிருந்த டெலிபோனில் மணியடித்தது. மாணிக்கம் அதிக சந்தோஷங் கொண்டவனைப் போல் அந்த டெலிபோனிடம் விரைந்து சென்றான். குணசீலரும் அவன் பின் சென்று நின்றார்.

மாணிக்கம் டெலிபோனையெடுத்துக் காதில் வைத்துக் கொண்டு, 'ஆம். நான்தான். எஜமான் ஐயா அவர்களா பேசுகிறவர்?

'ஓ! சரி——துப்பறியும் உத்தியோகஸ்தர் குணசீலர் ஐயா அவர்கள் உங்களைப் பார்ப்பதற்காக இங்குவந்து நெடு நேரமாகக் காத்துக்கொண் டிருக்கிறார்கள். நான் நீங்கள் வெளியே சென்றதை ஐயா அவர்களுக்குச் சொன்னேன் ஆனால் ஐயா அவர்கள் நீங்கள் மறுபடியுந் திரும்பிவந்து விடுவீர்களென்றும், அப்படி வராவிட்டால் டெலிபோன் மூலமாகவாவது எனக்கு விஷயந் தெரிவிப்பீர்களென்றும் கூறினார்——உம்——எஜமானரே——என்ன? என்னசொன்னீர்கள்? இன்னும் ஒரு மணிநேரத்திலா? நேராக அவருடைய வீட்டுக்கே சென்று பார்க்கிறீர்களா? நல்லது எஜமானரே, நான் இதை ஐயா அவர்களுக்குத் தெரிவிக்கிறேன்,' என்று கூறி டேலிபோனை வைத்துவிட்டுக் குணசீலர் பக்கந் திரும்பினான்.

குணசீலருக்கு அப்பொழுது அவர் நின்றுகொண்

டிருந்த இடத்தில் அவருக்குப் பின்புறமாக இருந்த அறையில் ஏதோ காலடிச்சத்தங் கேட்டது. அங்கு யாரோ பேசிய குரலையும் அவர் கவனித்தார். அதற்குள் மாணிக்கம் அவரைப்பார்த்து, 'ஐயா அவர்களே, தாங்கள் சொல்லியது சரியாகவே யிருந்தது. இப்பொழுது டெலிபோனில் பேசியவர் என்னுடைய எஜமானர்தான். அவர் எங்கிருந்து பேசினாரோ எனக்குத் தெரியவில்லை. அவரும் அதைப்பற்றி எனக்குச் சொல்லவில்லை. நானும் அவரை அதைப்பற்றிக் கேட்க மறந்தேன். அவர் தங்களைத் தங்களுடைய வீட்டிலேயே இன்னும் ஒரு மணி நேரத்தில் வந்து பார்ப்பதாகத் தங்களிடம் தெரிவிக்கும்படி எனக்குக் கட்டளையிட்டார்,' என்று கூறினான்.

குணசீலர் அவனைப்பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்துவிட்டு, 'சரி, மாணிக்கம், நான் போய்வருகிறேன். இவ்வளவு நேரமிருந்தும் பிரயோசன மில்லாமற் போய்விட்டது,' என்று கூறி அதிகவிரைவாக மாடியிலிருந்து கீழே இறங்கி வெளிச் செல்லுபவரைப்போல நடந்து அங்கொரு கதவின் பக்கத்தில் ஒளிந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் மாணிக்கம் மாடியைவிட்டுக் கீழே இறங்கி அவர் போய்விட்டாரா இல்லையா என்று பார்ப்பதற்கு வெளியே சென்றான். உடனே குணசீலர் கதவின் பக்கத்திலிருந்து வெளிவந்து மாடியின்மீது விரைவாக ஏறிச்சென்று சத்தம்வந்த அறையின்கதவை மெள்ள மூன்றுமுறை தட்டினார். உடனே அவ்வறையின் கதவு திறக்கப்பட்டது. குணசீலர் திடீரென்று அவ்வறைக்குட் புகுந்தார். அவ்வறையில் அம்பலவாணன் அவரைக்கண்டு மிரள மிரள விழித்தான். அவர் அவனைநோக்கி, 'அம்பலவாணரே, நீங்கள் என்னுடைய வீட்டுக்கு வரும்படி நான் உங்களுக்கு.வருத்தங் கொடுக்கமாட்டேன்.நாம் பேசவேண்டியதை இங்கேயே இப்பொழுதே பேசுவோம். உம்முடைய

ஆள் முதலிலேயே பொய்கூற ஆரம்பித்துவிட்டான் என்பது எனக்குத்தெரியும். அவனுடைய கண்களின் பார்வையே அதை எனக்குத் தெரிவித்துவிட்டது. உம்முடைய அறையில் இருந்துகொண்டே உம்மிடமிருக்கும் கள்ளக்கம்பியை அந்த டெலிபோனில் தொடுத்துவிட்டு நீங்கள் உம்முடைய ஆள் மாணிக்கத்துடன் வெளியில் எங்கேயோ இருந்துகொண்டு பேசுபவரைப்போலப் பேசியது மெச்சத்தகுந்த காரியமே. ஆனால் நீர் பேசியசத்தமும், டெலிபோனை வைக்கும்பொழுது உண்டான சத்தமும்மாத்திரம் எனக்குக் கேளாமற் போய்விடவில்லை. என்னை உம்முடைய ஆள் மாணிக்கம் என்பவன் ஏய்த்து விட்டதாகக் கருதிக்கீழே விரைவாக இறங்கி நான் வண்டியிலேறிக்கொண்டு போய்விட்டேனா என்று பார்க்க வெளியேசென்றான். அவன் நான் மாடிப்படியின் பக்கத்திலுள்ள கதவின் ஓரத்தில் மறைந்திருந்ததையறியவில்லை. அம்பலவாணரே, நாம் இப்பொழுது ஒரு முடிவுக்கு வருவோம்,' என்று கூறினார்.

---

## எட்டாம் அத்தியாயம்.

---

### பணம் பத்துவகை செய்யும்.

குணசீலர் கூறியதைக்கேட்ட அம்பலவாணன் அதிக வெறுப்புடன் அவரைநோக்கி, "குணசீலரே, நீர் என்னைக் கண்டுபிடித்துவிட்டீர். ஒருவரையும் பார்ப்பதற்கு இப்பொழுது எனக்கு விருப்பமில்லை. ஆகையினால் நான் என்வேலையாள் மாணிக்கத்திற்கு யாராகிலும் என்னைப்பார்க்கவந்தால் நான் வெளியேபோயிருப்பதாகக் கூறிவிடும்படி கட்டளை

யிட்டேன். இப்பொழுது என்மனம் குழப்பமடைந்திருக்கிறது. இவ்விஷயத்தைப்பற்றி அடிக்கடி பேசுவதால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போல் தோன்றுகிறது. நான் ஒருவரையும் பார்க்காமலிருக்க விரும்புவதற்குக் காரணம் இதுதான். இதனால் நான் உமக்குப் பயந்துகொண்டு இவ்வாறு செய்தேன் என்று நீர் எண்ணவேண்டாம். ஒன்றையும் மறைக்கத்தகுந்த அவசியம் எனக்கில்லை,'' என்று கூறினான்.

குணசீலர் :—நீர் அப்படிக் கூறுவதைக்கேட்டு நான் சந்தோஷிக்கிறேன். அப்படியானால் நான் இப்பொழுது உம்மைக் கேட்க விரும்பும் சில கேள்விகளுக்கு நீர் பதிற் கூறவேண்டும்.

அம்பலவாணன்:—நான் உமக்குக் கூறவேண்டியவைகளை எல்லாம் நேற்றே கூறிவிட்டேன். ஆகையால் பின்னும் நான் கூறவேண்டியது என்ன இருக்கிறது ?

இதைக்கேட்ட குணசீலர் அவனைநோக்கி, 'அம்பலவாணரே, நீர் நேற்று என்னிடம் கூறாத ஒரு விஷயத்தைப் பற்றி நான் இப்பொழுது தெரிந்துகொள்ளவேண்டி யிருக்கிறது. தவிர அதற்குமுன் இதை உம்மிடம் கொடுக்க வேண்டும் என்பது என் எண்ணம்,' என்று சொல்லிக்கொண்டே தம்முடைய சட்டைப்பையில் கையையிட்டுக் கைப் பொத்தான் ஒன்றைஎடுத்து அவன்முன் நீட்டினார். அதைக் கண்டவுடனே அம்பலவாணனுக்கு அச்சம் உண்டாயிற்று; அவன்முகம் மாறுபட்டது.

உடனே அவன் குணசீலரைப்பார்த்து, 'குணசீலரே, இதைப்பற்றி எனக்கொன்றுமே தெரியாது. இஃது என்ன ? நான் இதை எப்பொழுதும் பார்த்ததேயில்லை!' என்று கூறினான்.

குணசீலர் :—ஓ ! உமக்கு இதைப்பற்றி ஒன்றுந்தெரியாதா ? இது உம்முடைய கைப்பொத்தா னல்லவா ? சரியாகப் பாரும். இதை நீர் முந்தாநாள் இரவு தொலைத்து விட வில்லையா? இதற்குப்பதிலாக உம்முடைய நண்பர் மாகதசுந்தரர் அன்று இரவு நீர் அவருடைய வீட்டுக் குப் போயிருந்தபோது அவருடைய கைப்பொத்தா னொன்றைக் கொடுத்து உம்மைப் போட்டுக் கொள்ளச் சொல்லவில்லையா ? நான் மரகதசுந்தரரிடமிருந்து உண் மையையறிந்து கொண்டேன்.

குணசீலர் இப்படிக் கூறக்கேட்டு அம்பலவாணன் ஏதோ பழய விஷயத்தை ஞாபகத்திற்குக் கொண்டு வந்தவனைப் போல் நடித்து, குணசீலரை நோக்கி 'ஓ, ! ஆம் ! ஆம்! அஃது உண்மைதான். அதைப்பற்றி நான் முழுதும்மறந்துவிட் டேன். இஃது என்னுடைய பொத்தான் என்பது உண்மை தான். இஃது எங்கேகிடந்தது ? என்னுடைய மோட்டார் வண்டியில் விழுந்துவிட்டிருக்கலாம் என்று நான் எண்ணு கிறேன். நண்பரே, நான் முதலிலேயே என் மனம் ஒரு நிலை யிலில்லை என்று கூறவில்லையா ?' என்று சொன்னான்.

குணசீலர் :—அம்பலவாணரே, இது வேறெங்கும் விழுந்து விடவில்லை. உம்முடைய தமயனார் மோகனசுந்தர முதலியாரவர்கள் அறையில் தரையின்மேல் இது கிடந்தது. நீரும் உம்முடைய தமயனாரும் அவ்வறை யில் அன்று இரவு சண்டையிட்டபோது நீர் அவரை ஓங்கிக் குத்தியசமயம் இது கீழே விழுந்துவிட் டிருக் கலாம்.

இதைக்கேட்டதும் அம்பலவாணன், 'ஐயோ! ஐயோ !! கடவுளே ! நான் என்னசெய்வேன் ?' என்று கூறித்தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தான்.

உடனே குணசீலர், ‘ அம்பலவாணரே, நீர் உம்முடைய மோட்டார்வண்டி யோட்டுபவனுக்குச் சிறிது பொருள் கொடுத்து அவனைச்சரிபடுத்தி விட்டீர். அப்படியே சமையற்கார தியாகராயனையும் வசப்படுத்தி யிருக்கக்கூடாதா ? அவன் நேற்று இரவு இதைப்பற்றிப்பேச உம்மிடம் வந்த பொழுது நீர் ஏன் அவனைக்கடிந்து அனுப்பிவிட்டீர் ? அன்று இரவு நடந்த விஷயத்தைப்பற்றி அவனுக்கு அதிகமாகத் தெரியும்,’ என்று கூறினார்.

அம்பலவாணன் அதிகதுக்கத்தோடு அவரைநோக்கி, ‘ ஆம்! அஃது உண்மைதான். ஆனால் அவனுக்குக் கொடுக்கக் கூடிய அவ்வளவுபணம் அப்பொழுது என்னிடத்திலில்லை. நீர் இதை எப்படியோ தெரிந்து கொண்டீர். நான் என்னுடைய மோட்டாரோட்டிக்கு மாத்திரம் கொஞ்சம் பணம் கொடுப்பதாகவும் அதற்காக அவன் என்னை அன்றிரவு சுகுணவிலாச சபையிலிருந்து நேரே வீட்டுக்குக் கொண்டு வந்துவிட்டதை ஒருவருக்கும் தெரிவிக்கக் கூடாதென்றும் கூறினேன். அவன் அதற்கு ஒப்புக்கொண்டான். ஆனால் சமையற்கார தியாகராயனோ பேராசைக்காரன். தனக்கு ஒரே சமயத்தில் ஆயிரம் ரூபாய் கொடுத்தால் அதை வெளியிற் கூறாமலிருப்பதாகச் சொன்னான். அவ்வளவு பெருந் தொகை என்னிடத்தி லில்லாமற்போனதால் நான் அவனுடைய தரித்திரத்தினால் அவனுக்கு ஏற்பட்டிருக்கும் பேராசைக்காக அவனைக் கடிந்துபேசி என் அறையைவிட்டு வெளியே துரத்திவிட்டேன். நண்பரே, நான் அன்றிரவு வீட்டுக்குத் திரும்பி வந்ததும், என் தமயனாருடன் சண்டையிட்டதும் உண்மைதான். ஆனால் நான் அவரைக் கொல்லவேயில்லை. இதை நான் உமக்குச் சத்தியமாகக் கூறுகிறேன். நான் அவருடன் சண்டையிட்டுவிட்டு வெளியே போன

போது அவர் எப்பொழுதும் இருந்ததைப் போலவே யிருந்தார். இஃது உண்மை. இதிற்சிறிதேனும் நான் பொய் கூறுவதாக நீங்கள் எண்ணவேண்டா. என்மீது வீண்சந்தேகம் கொள்ளாம லிருக்கும்படி நான் தங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்,' என்று கூறினான்.

குணசீலர் :—அப்படியானால் நீர் விஷய முழுவதையும் எனக்கு உண்மையாகக் கூறவேண்டும். அன்று இரவு நீர் எங்கெங்குச் சென்றிருந்தீர் என்பதும் என்னென்ன காரியம் செய்தீ ரென்பதும் எனக்கு நன்றாய்த் தெரியும். ஆகையால் நீர் இப்பொழுது எதையாகிலும் மறைத்துக் கூறினால் உம்மீது வீண் சந்தேகம் உண்டாகும் என்பதில் சந்தேகமே யில்லை.

அம்பலவாணன் :—குணசீலரே, நீர் எப்படியாகிலும் என் தமயனைக் கொன்ற கொலையாளியைக் கண்டு பிடிக்க வேண்டும் என்பது ஒன்றே என்னுடைய எண்ணம். ஆகையால் உண்மையைக் கூறுவதில் எனக்குச் சந்தோஷமே. நீர் தவறாக விஷயத்தை உணர்ந்து என் மீது குற்றத்தைச் சுமத்தி விடாமல் இருக்க வேண்டும் என்பதே என் விருப்பம். நான் நிரபராதி; ஆனால் என்னைக் குற்றவாளி என்று கருதுவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. இந்தக்காலததவர்களிற் சிலர் உண்மையைப் பொய்யாகவும், பொய்யை உண்மையாகவும் செய்து விட்டுத் தம்முடைய திறமைக் காகத் தம்மைத் தாமே மெச்சிக் கொள்ளுவது நீர் அறிந்த விஷயந் தானே ?

குணசீலர் :—சரி, அது கிடக்கட்டும். முந்தாநாள் இரவு என்ன நடந்தது என்பதை உண்மையாக எனக்குக் கூறும்.

அம்பலவாணன் :—குணசீலரே, நான் முந்தாநாள் இரவு சுகுணவிலாச சபையிலும் மற்றுஞ் சில இடங்களிலும் எனக்கு ஏற்பட்டுள்ள கடனைத் தீர்ப்பதற் காகவும், பொது ஜன சிங்காரத் தோட்டத்தில் நடக்கும் வேடிக்கை பார்ப்பதற்கு வேண்டிய கைச்செலவுக் காகவும் என்னுடைய தமயனாரிடம் வந்து ஐந்நூறு ரூபாய் கொடுக்கும்படி கேட்டேன். எங்கள் தந்தையார் எழுதி வைத்த உயிலைப் பற்றி எங்களிருவருக் கிடையில் ஏற்பட்ட சச்சரவினால் அது முதற் கொண்டு அவர் எனக்குப் பணம் கொடுக்கமறுக்க ஆரம்பித்தார். அதனால் நான் பலரிடம் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் வாங்கிச் செலவழித்து வந்தேன். சுகுண விலாச சபைக்கு ஏறக்குறைய ஆறு மாதத்திய சந்தாத் தொகை செலுத்த வேண்டும். கடன்காரர்களோ என்னைப் பார்க்கும் பொழுதெல்லாம் 'பணம், பணம்' என்று தொந்தரவு செய்கிறார்கள். அவர்களுடைய தொந்தரவினால் நான் வெளியே போவதற்கும் வெட்கமாய் இருக்கிறது. ஆகையினால் இவைகளை யெல்லாம் ஒருவாறு ஒழித்து விடலாம் என்று எண்ணி முந்தாநாள் இரவு என் தமயனாரை ஐந்நூறு ரூபாய் கேட்டேன். அவர் அதைக் கொடுத்து விட்டிருந்தால் நான் பேசாமற் போய் விட்டிருப்பேன். கொடுக்க மறுத்ததால் எனக்குக் கோபம் பொங்கி எழுந்தது. கோபத்துக் கடிமையான நான் உடனே அவரை வாயில் வந்தபடி தூஷிக்க ஆரம்பித்தேன். அவரும் என்னைப் பலவாறு திட்டினார். பிறகு வாய்ச் சண்டையோடு நில்லாமற் கைச்சண்டையும் ஏற்பட்டது. நான் அவரைக் குத்தியது உண்மைதான். ஆனால் அவர் அதிககோபத்துடன் என்னை வெளியேபோகும்

படி கூறினார். உடனே நான் வெளியே போய்விட்டேன். பிறகு காலையில் என்னுடைய தமயனார் கோபந் தெளிந்து நான் கேட்ட தொகையை முணுமுணுப் போடாகிலும் கொடுத்தொழிப்பா ரென்று எண்ணி னேன். காரியம் நான் எண்ணியதற்கு மாறாக நடந்து விட்டது. நான் அவரைக் கொல்லவில்லை என்பதைக் கடவுள்தான் அறிவார். இனி நான் வேறு என்னசொல் லக் கூடும்?

குணசீலர் :—அம்பலவாணரே, நீர் இதை எனக்கு முன்பே சொல்லி யிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? நீர் குற்றவாளியல்ல என்பது உமக்குத் தெரிகிறது. ஆனால் மற்றவர்கள் அப்படி நினைப்பார்களா? உம்முடைய தாயாரே உம்மைக் குற்றவாளியாகக் கருதும் போது மற்றவர்கள் அப்படி யெண்ணுவதற்குத் தடையென்ன இருக்கிறது?

அம்பலவாணன் :—என்ன! என்ன!! என் தாயாரா? அவரா என்னைக் கொலையாளி என்று எண்ணுகிறார்? இஃது என்ன விந்தை!

குணசீலர் :—நீர் மாடியிலிருந்து இறங்கி உம்முடைய தம யனார் அறைக்கு வந்த பொழுது உம்முடைய தாயார் உம்மைப் பார்த்து,'அடே! பாவி!" என்று கூறியதற் குக் காரண மென்ன? அதை நீர் மறந்து விட்டீரோ?

அம்பலவாணன் :—இல்லை——இல்லை. நான் அதை மறக்க வில்லை. அந்தச் சமயத்தில் என் தாயார் என் தமய னார் இறந்து கிடந்ததைக் கண்டு மனம் மயங்கி இன் னது செய்வது என்று தோன்றாமல் பேய் பிடித்தவ ரைப்போல் இருந்தார்; ஏதோ வாயில் வந்தபடி பிதற் றினார். பெண்களுக்கு அப்படிப்பட்ட காலங்களில்

மனம் குழப்பமடைவது வழக்கந் தானே? மேலும் எனக்கும் என் தமயனருக்கும் பல நாளாகச் சச்சரவு ஏற்பட் டிருந்தது என் தாயாருக்குத் தெரியும். ஆகை யினல் அவர் என்மீது சந்தேகப்பட்டு அப்படிக் கூறி யிருக்கலாம். ஆனல் பிறகு அவர்நினைவு அவருக்கு வந்தவுடன் உண்மைக் கொலையாளியைக் கண்டுபிடிக்க வேண்டும் என்னும் எண்ணத்தோடுதான் உங்களை அழைத்து வரும்படி என்னை அனுப்பினர்.

குணசீலர்:—அம்பலவாணரே, நீர் கூறும் விஷயங்கள் உண் மையானவை என்பது எனக்குத் தெரியும். ஆனல் இவ் விஷயங்களைப் போலீஸ் உத்தியோகஸ்தர் துரைசிங்கம் பிள்ளையாவது அல்லது மற்று யாராவது அறிந்தால் உம்மீது சந்தேக முண்டாகலாம். அப்படி அவர்கள் உம்மீது சந்தேகங் கொள்ளுவதால் உமக்குப் பலவிதங் களிலும் தீமையுண்டாகக் கூடும். ஆனல் நான் என்னுற் கூடியவரையில் உமக்கு ஒருவிதமான தீங்கும் வர வொட்டாமற் காத்துக் கொள்ளுவேன். அதற்கு நீர் ஒன்று செய்ய வேண்டும். அஃதாவது நீர் இவ்வழக் கில் உண்மைக் குற்றவாளி கண்டுபிடிக்கப்படும் வரை யில் இவ்விடத்தை விட்டு வேறெவ் விடத்திற்கும் போகக்கூடாது. இன்று செய்தமாதிரி இனிச் செய்யக் கூடாது. நான் உண்மைக் குற்றவாளியைக் கண்டு பிடிக்கும் வரையில் இவ்வழக்கில் நான் உம்மிட மிருந்து பெற விரும்பும் உதவிகளை நீர் செய்தே தீரவேண்டும். நான் நினைக்கும்போதெல்லாம் உம்மிடம் வரவேண்டி நேரிடலாம். அச்சமயம் நீர் இங்கு இல்லாவிட்டால் நான் கருதி வருங் காரியம் கைகூடாமற் போய்விடும் ஆகையினல் நீர் இந்த விடத்தைவிட்டுப் போவதில்லை

என்று எனக்கு வாக்களிப்பீரானால் மற்றக் காரியங்களை நான் பார்த்துக்கொள்ளுவேன். இதைப் பற்றி உம்முடைய கருத்து என்னவோ அதை இப்பொழுதே எனக்குத் தெரிவித்து விடும்.

அம்பலவாணன் :—குணசீலரே, தாங்கள் சொல்லுவதை நான் உண்மையில் ஒத்துக்கொள்ளுகிறேன். உம்முடைய பெருந் தன்மைக்கும், பொறுமைக்கும் நான் உமக்கு எவ்வாறு நன்றி செலுத்தப் போகிறேன்? 'காலத்திற் செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப்பெரிது,' அல்லவா? நான் உண்மையில் என் தமயனைக் கொல்லவில்லை என்பதை நீர் அறிந்திருப்பீரென்றே எண்ணுகிறேன். ஆனால் விஷயங்களோ எனக்கு விரோதமாகவே காணப் படுகின்றன. இவ்வாறு காணப்படுவதால் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் என்மீது உண்மையில் சந்தேகங் கொள்ளுவார்கள் என்பதில் சந்தேகமே யில்லை. எந்த விஷயம் எப்படியானாலும் என் தமயனைக் கொலைபுரிந்த பாதகரைக் கண்டுபிடித்துத் தண்டனைக்குட் படுத்த வேண்டும் என்பதுதான் என்னுடைய எண்ணம். ஆம்! நண்பரே! தாங்கள் கூறியபடி இக் கொலைநடந்ததற்குக் காரணம் களவாக இருக்கமுடியாது என்று கருதினால் ஒருவேளை தற்கொலையாக இருக்குமோ?

குணசீலர் :—அம்பலவாணரே, உம்முடைய தமயனார் வேறு ஒருவரால் கொலை செய்யப்பட்டது மாத்திரம் உண்மைதான். ஆனால் அதற்குக் காரணம் களவே அல்ல என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். நான் போகவேண்டும். நீர் எங்கும் போகாமலிருப்பீரோ?

அம்பலவாணன் :—நண்பரே, ஏன் பின்னும் அப்படிக் கேட்

கின்றீர்கள்? நீங்கள் எனக்குச் செய்த நன்மைக்காக நான் உங்களுக்குச் செய்யும் நன்மை இதுதானே? உங்களுக்குக் கிடைத்திருக்கும் சில விஷயங்களைக் கருவியாகக் கொண்டே நீங்கள் என்னைக் குற்றவாளியாக்கிச் சிறைப்படுத்த உங்களாலியலும். அப்படியிருந்தும் நீங்கள் அவ்வாறு செய்யவில்லை. இந்தப் பெருநன்மையை என்னால் எப்படி மறக்கமுடியும்? நான் குற்றவாளி அல்ல என்பது பிறகு வெளிப்பட்டு விடுமானாலும் ஒருதரம் சிறைச்சாலையிற் புகுவது அவமானத்திற்கிடமான காரியந்தானே? அவ்வாறு நான் சிறைப்பட்டால் என்னுடைய தாயார் மனமுடைந்து இறந்து விடுவார். பிறகு அணைகடந்த வெள்ளம் அழுதாலும் வருமோ? என் தமயனார் தற்கொலை புரிந்திராத பட்சத்தில் உண்மைக் கொலையாளி கண்டுபிடிக்கப் படவேண்டும் என்னும் விஷயத்தில் உங்களைவிட எனக்குப் பதின்மடங்கு ஆவலிருக்கிறது. ஆகையினால் நான் இனி ஒருபோதும் அப்படிச் செய்வதில்லை என்று பிரமாணிக்கம் செய்கிறேன்.

அம்பலவாணன் இவ்வாறு கூறி முடித்ததும் குணசீலர் அவனிடம் விடை பெற்றுக்கொண்டு தம்முடைய மோட்டார் வண்டியிலேறி வீட்டுக்குச்சென்று சாப்பிட்டார். அன்றைய தினம் அவர் செய்துமுடிக்க வேண்டிய காரியங்கள் இன்னும் சில இருந்தன. ஆகையினால் அவர் தம்முடைய மோட்டார் ஓட்டியாகிய சதாசிவனையும் தம்முடைய வீட்டிலே சாப்பிடும்படி கட்டளையிட்டு, அவன் சாப்பிட்டானதும் வண்டியி லேறிக்கொண்டு கற்பகவனம் போய்ச் சேர்ந்தார்.

அவரைப் பார்த்ததும் சமையற்கார தியாகராயன் நடுநடுங்கினான். ஆனால் அவர் அன்று அவனோடு பேசியதை

மறந்தவர்போல் பாவனைசெய்து, தாம் காமகோட்டியம்மாளைப் பார்க்கவந்திருப்பதாக அவனிடம் கூறினர். உடனே அவன் மாடிக்குச்சென்று காமகோட்டியம்மாளைக் கீழே அழைத்துவந்து விட்டுச்சென்முன்.

குணசீலர் அவளைக்கண்டதும், 'அம்மா, உங்கள் தங்கையாருக்குத்தேகநிலை யெப்படியிருக்கிறது? இப்பொழுது சுகமாய்விட்டிருக்கு மென்றே நான் எண்ணுகிறேன்,' என்று கூறினர்.

அவர் இவ்வாறு கூறக்கேட்ட காமகோட்டியம்மாள் கண்களிலிருந்து நீர் தாரைதாரையாய்ப் பெருகியது; முகம் வெளுத்தது; தேகம் நடுங்கியது. அவள் கண்ணீரைத் தன்னுடைய முன்றானையால் துடைத்துக் கொண்டே, அழுகுரலுடன் அவரைப்பார்த்து,' ஐயோ! நான் என்ன சொல்லுவேன்? அவளுக்கு நிமிஷத்திற்கு நிமிஷம் நோய் அதிகரிக்கிறதேயொழியச் சிறிதும் குறைந்தபாடில்லையே!' என்று கூறினுள். துக்கம் அவள் தொண்டையை அடைத்ததனுல் அதற்குமேல் அவளால் ஒன்றுங்கூற முடியவில்லை.

குணசீலர் அவளுடைய பரிதாபநிலையைக்கண்டு வருந்தி, 'அம்மா! உங்கள்தங்கையார் எப்பொழுது என்னைப் பார்க்கமுடியும்? நான் அந்த அம்மாளுக்குத் துன்பத்தைத் தரும்படியானவார்த்தை யொன்றும் அவரிடம் பேசப்போவதில்லை. அவருக்கு நன்மைதரக்கூடிய விஷயத்தைப்பற்றியே நான் அவரிடம்பேசவேண்டும்,' என்றார்.

காமகோட்டியம்மாள் மறுபடியும் தம்முடையமுகத்தை நன்முகத்துடைத்துக்கொண்டு அவரைநோக்கி,' அவள் உங்களைப்பார்த்து உங்களுடன் பேசத்தகுந்த நிலைக்குவரப் பலநாள்செல்லும். அவள் அப்படிப்பட்ட நிலையிலிருக்கிருள். அவளுடைய உயிருக்கே ஆபத்துநேரிடும்போல்

தோன்றுகிறது. கடவுள்தான் அவளைக் காப்பாற்றவேண்டும். திக்கற்றவர்களுக்குத் தெய்வந்தானே துணை? பேர்போன வைத்தியர் ஒருவர் இங்கேயே இருந்துகொண்டு அவளுக்கு உதவிசெய்துவருகிறார். இனிக்கடவுள் விட்டவழிதான்,' என்றுகூறினாள்.

துன்பம்நிறைந்த அவளுடைய வார்த்தைகளைக்கேட்ட குணசீலர் வெகு வருத்தமடைந்தார். பெண்ணழக்கண்டால் பேயுமழும் அல்லவா? அப்படியிருக்க, எப்படி வருந்தாமலிருக்கக்கூடும்? அவர் அவளைப்பார்த்து, 'அம்மா! நான் அது அவ்வளவுபெருகியிருக்கும் என்பதை அறியவே இல்லை. நான் இதைக்கேட்டு மிகவும்வருந்துகிறேன். நீங்கள் இவ்வாறு வருத்தப்படுவது என்மனத்தை நெருப்பிடைப்பட்ட மெழுகுபோல உருகச்செய்கிறது. நான் உங்களைச்சில கேள்விகள் கேட்கவேண்டும். ஆனால் நீங்கள் அதிகநேரம் இங்கே இருக்கவேண்டியதில்லை,' என்றுகூறினார்.

காமகோட்டியம்மாள், 'அப்படியேகேட்கலாம்,' என்று கூறினாள்.

பிறகு குணசீலர் அவளைநோக்கி, 'அம்மா! நீங்கள் அன்று கலியாணத்திற்குப் போய்வந்தபோது உமது தங்கையாருடைய வேலைக்காரி அந்தம்மாளுக்கு உடம்பு சௌக்கியமில்லை என்று கூறியதாகவும், உடனே நீங்கள் கலியாணவீட்டுக்குத் தரித்துச்சென்ற உடையைக் களையாமலே அந்த அம்மாளிருக்கும் அறைக்குச் சென்றதாகவும் கூறினீர்களல்லவா?' என்றுகேட்டார்.

'ஆம்! நான் அப்படிக்கூறியது உண்மைதான்,' என்றாள் காமகோட்டியம்மாள்.

'நீங்கள் மாடியின்மேல் போவதற்குமுன் மோகனசுந்தர முதலியார் அவர்கள் கொலைசெய்யப்பட்டுக்கிடந்த அறை

யினிடம் போனதில்லையே ?' என்று மறுபடியும் குணசீலர் ஒரு கேள்வி கேட்டார்.

'இல்லை—நான் போனதில்லை,' என்று பதில் கூறினாள் காமகோட்டியம்மாள். 'சரி, உங்கள் தங்கையாருக்கு உடம்பு சரியான பிறகு நீங்கள் நேரே உங்களுடைய அறைக்குப் போய் உடையைக் களைந்தீர்களா, அல்லது மோகன சுந்தர முதலியார் இருந்த அறையினிடம் சென்றீர்களா ?' என்று கேட்டார் குணசீலர்.

காமகோட்டியம்மாள்:—நான் நேராக என்னுடைய படுக்கையறைக்குச் சென்று, உடையைக் களைந்துவிட்டுப் படுத்துக் கொண்டேன்.

குணசீலர்:—உங்களுடைய தங்கையார் படுக்கை அறையிலிருந்து நீங்கள் நேராக உங்களுடைய அறைக்குப் போனீர்களா ?

காமகோட்டியம்மாள்:—ஆம் ! ஆம் ! !

குணசீலர்:—பிறகு நீங்கள் இவ்வீட்டு வேலைக்காரி அவ்வறையினிடஞ்சென்று கத்திய சத்தத்தைத்தான் கேட்டீர்களோ ?

காமகோட்டியம்மாள்:—ஆம் ! ஆம் ! !

குணசீலர்:—அப்பொழுது நீங்கள் அன்று இரவு நன்றாகத் தூங்கவில்லையென்று நினைக்கிறேன். வெகுநேரம் விழித்துக்கொண்டிருந்தீர்களோ ?

காமகோட்டியம்மாள்:—ஏன்? அப்படியொன்றுமில்லை. நான் எப்பொழுதுமே நேரம் பொறுத்துத்தான் தூங்குவது வழக்கம். ஆனால், என்னுடைய தங்கையின் தேக அசௌக்கியத்தால் பின்னும் சிறிது நேரம் காக்க வேண்டியிருந்தது. பிறகு நன்றாகத்தான் தூங்கினேன்.

குணசீலர்:—வேலைக்காரி மீனாக்ஷி தாங்கள் அன்று இரவு வெகுநேரம் வரையில் தங்களுடைய அறையில் உலவிக்

கொண்டிருந்த சத்தத்தைக் கேட்டதாகக் கூறினாள். அவள் கூறியது உண்மைதானே ?

காமகோட்டியம்மாள்:—அவள் அப்படிக் கூறினாளா ? அது சுத்தப் பொய். நான் ஒவ்வொரு சமயம் தூக்கம் வாராவிட்டால் என் அறையில் உலவுவது வழக்கந்தான். ஆனால், அன்று இரவு நான் உலவவேயில்லை.

குணசீலர்:—அம்மா, நீங்கள் கலியாண வீட்டிலிருந்து திரும்பி வந்தபொழுது மோகன சுந்தர முதலியாரவர்கள் அறையில் ஏதாவது சத்தத்தை—இரண்டு பேர் ஆண் பிள்ளைகள் பேசியதைக்—கேட்டீர்களா ?

காமகோட்டியம்மாள்:—இல்லை ; இல்லை. நானவ்விடத்தில் ஒரு விதமான சத்தத்தையும் கேட்கவில்லை.

குணசீலர்:—அப்பொழுது இம்மாளிகையின் கீழ்க்கட்டில் விளக்கு எரிந்துகொண் டிருந்ததா ?

காமகோட்டியம்மாள்:—ஆம் ! கூடத்தில் மாத்திரம் எப்பொழுதும்போல ஒருவிளக்கு எரிந்துகொண்டிருந்தது. அதை எப்பொழுதும் இரவில் எரியவிடுவது வழக்கம். அதிகாலையில் யாராகிலும் வேலைக்காரர் எழுந்து அதை அணைத்து விடுவார்கள். தவிர, என் தங்கையின் கணவர் அறையிலிருந்து வெளியில் வெளிச்சம் தெரிந்ததால் அவ்விடத்திலும் விளக்கு எரிந்துகொண் டிருந்ததை அறிந்தேன். அவர் சில சமயங்களில் அவ்வளவு நேரம் வரையில் விழித்திருப்பது வழக்கந்தான். அவருடைய அறையின் கதவும் திறக்கப்பட் டிருந்தது.

குணசீலர் சிறிது நேரம் என்னவோ யோசித்தார், அவ்வீட்டு வேலைக்காரியாகிய தங்கம் காலையில் அவ்வறைக்குள் நுழைந்த பொழுது தன் காலிற்பட்ட கைப்பொத்தானைக் கண்டெடுத்ததாகவும், அப்பொழுது அவ்வறையில் சன்னலின் வழியாகத் தெரிந்த வெளிச்சத்தைத் தவிர

வேறு வெளிச்சம் இல்லாமலிருந்ததாகவும் அவரிடம் கூறினு ளல்லவா? ஆகையினுல், கொலை நடந்த பிறகு அதை மறைக் கக் கருதி அவ்வறைக்குள் சென்ற யாரோ ஒருவர் அவ் விளக்கை அணைத்திருக்க வேண்டும் என்பது அவருக்குத் தெரிந்தது.

பிறகு அவர் காமகோட்டி யம்மாளை நோக்கி, 'அம்மா, அப்படியானுல் நீங்கள் அன்றிரவு ஒருவிதமான சத்தத்தை யும் கேட்கவில்லை என்றே சொல்லுகிறீர்களா? நான் இக் கேள்வியையே உங்களைத் திருப்பித் திருப்பிக் கேட்பதற்காக நீங்கள் வருத்தப்படக் கூடாது. ஏனென்ருல், நீங்கள் ஏதாகிலும் சத்தத்தைக் கேட்டிருந்தாலுங் கூட அதை அவ் வளவு முக்கியமாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ளாம லிருந் திருக்கலாமோ, அல்லவோ? இப்படியெல்லாம் காரியம் நடக்கப்போகிறது என்பது யாருக்குத் தெரியும்?' என்று கேட்டார்.

காமகோட்டி யம்மாள் சிறிது நேரம் பேசாமலிருந்து, பிறகு அவரைப் பார்த்து, 'இல்லை; இல்லை. ஒருவிதமான சத்தத்தையும் நான் கேட்கவேயில்லை,' என்று கூறினுள்.

பிறகு குணசீலர் அவளை நோக்கி, 'அம்மா, எனக்கு நேரமாகிறது. நான் போய் வருகிறேன். உங்களுடைய தங்கையாரின் தேக நிலையைப்பற்றிக் கவனியுங்கள்,' என்று கூறி, அவளிடம் விடைபெற்றுக் கொண்டு கற்பக வனத்தின் முன் புறத்தில் காத்துக்கொண்டிருந்த தம்முடைய மோட் டார் வண்டியில் ஏறிக்கொண்டு, அதை மறுபடியும் நுங்கம் பாக்கத்திலுள்ள மனோரஞ்சித விலாசத்திற்குச் செலுத்தும் படி சதாசிவனுக்குக் கட்டளையிட்டார். உடனே சதாசிவன் வண்டியை நுங்கம்பாக்கத்திற்குச் செலுத்தினுன்.

---

# ஒன்பதாம் அத்தியாயம்

## கலாவதி

சிறிது நேரத்திற்கெல்லாம் சதாசிவன் வண்டியை மனோஞ்சித விலாசத்தின்முன் கொண்டுபோய் நிறுத்தினன். குணசீலர் வண்டியைவிட்டிறங்கி, உள்ளே சென்றார். உள்ளே சென்றதும் அவர் அங்குத் தண்ணீர்க் குடம் எடுத்துச் சென்றுகொண்டிருந்த ஒரு வேலைக்காரி யைப் பார்த்து, 'மரகதவல்லியம்மாள் எவ்விடத்தி லிருக்கிறார்கள்?' என்று கேட்டார். அவ்வேலைக்காரி அவரை அம்மாளிகையின் பின் புறத்திற்கு அழைத்துச் சென்று, அங்கு ஓர் அறையில் தனியே உட்கார்ந்துகொண் டிருந்த மரகதவல்லி யம்மாளை அவருக்குக் குறித்துக் காட்டி, அப் புறம் சென்றாள். குணசீலர் மரகதவல்லி யம்மாள் உட் கார்ந்திருந்த அவ்வறைக்குள் நுழைந்தார். அவரைக் கண் டதும் மரகதவல்லி யம்மாள் எழுந்து, மரியாதையுடன் அவரை நோக்கி, 'வாருங்கள்; வாருங்கள்; இதுவரையில் ஏதாகிலும் புதிய விஷயங் கண்டு பிடித்தீர்களா?' என்று கேட்டாள்.

குணசீலர் அவளை நோக்கி, 'அம்மா, நான் உம்முடைய வேலைக்காரி கமலத்தைப் பார்த்துச் சில விஷயம் பேச வேண்டுமென்று எண்ணி இங்கு வந்தேன். இன்னம் ஆராய்ந் தறியவேண்டிய விஷயங்கள் அநேக மிருக்கின்றன. எல் லாம் கடைசியில்தான் தெரியும். தவிர, நான் உங்களை மற் றொரு விஷயம் கேட்கவேண்டும்,' என்று கூறினர்.

மரகதவல்லியம்மாள் அவரைப் பார்த்து, 'நீங்கள் என் னுடைய வேலைக்காரி கமலத்தினிடம் இக்கொலை வழக்கைப் பற்றிப் பேசவேண்டிய விஷயம் என்ன இருக்கிறது? அவ

ளுக்கு என்ன தெரியும்? அவளைக் கேட்டால் அவள் கற்பக வனத்திலுள்ள வேலைக்காரர்கள் இதைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்த விஷயங்களையெல்லாம் கண்டபடி உளறப் போகிறாள். என்னைக் கேட்கவேண்டிய விஷயங்களைக் கேட்டால் சொல்லச் சித்தமாக இருக்கிறேன்,' என்றாள்.

குணசீலர், 'அம்மா, அப்படி நினைக்கக் கூடாது. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ! நமக்கென்ன தெரியும்? இப்படிப்பட்ட காரியங்களையெல்லாம் மிகவும் ஆழ்ந்து கவனித்தாலன்றி, உண்மை வெளிப்படாது. ஆகையினால், நான் இக்கொலை நடந்த இரவு அம்மாளிகையிலிருந்த ஒவ்வொருவரையும் இதைப்பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்ளவேண்டி யிருக்கிறது. தவிர, நீங்கள் அன்று காலையில் இறந்து கிடந்த உம்முடைய மூத்த புத்திரர் அறையிலிருந்தபொழுது, மாடியிலிருந்து கீழிறங்கி, அவ்வறைக்கு வந்த உம்முடைய இளையபுத்திரர் அம்பலவாண முதலியாரைப் பார்த்து என்ன சொன்னீர்கள்? அது ஞாபகத்திலிருக்கிறதா?' என்று கேட்டார்.

குணசீலர் இப்படிக் கூறியதைக் கேட்டதும் மரகதவல்லியம்மாள் திடுக்கிட்டு, அவரைப் பார்த்து, 'இதென்ன புதுமை? நான் ஒன்றுங் கூறவில்லையே! அம்பலவாணனை நான் அப்பொழுது பார்த்ததாகவே எனக்கு ஞாபகமில்லையே!' என்றாள்.

குணசீலர், 'நீங்கள் அவரைப் பார்த்தவுடனே, 'அடே பாவீ! பாவீ!!' என்று கூறவில்லையா? அதைக் கேட்டவுடனே அவர் அழத் தொடங்கவில்லையா?' என்று கேட்டார்.

மரகதவல்லியம்மாள், 'ஐயா, ஒருவேளை அப்படியே இருந்தாலும் இருக்கலாம். அது பெரிய பிரமாதமா? அப்படிப்பட்ட சமயத்தில் பெண்பிள்ளைகள் மனம் வருந்தி,

ஏதேதோ உளறக்கூடு மல்லவா? இதையெல்லாம் நீங்கள் காரணமாக எடுத்துக் கொள்ளலாமோ? என் புத்திரர்கள் இருவருக்கும் இடையில் அவர்களுடைய தந்தையார் எழுதிவைத்துப் போன உயில்பத்திரச் சம்பந்தமாகச் சில சமயங்களில் மனவருத்தம் ஏற்பட்டதுண்டு என்றும், அச்சமயங்களில் அவர்கள் ஒருவருக்கொருவர் சச்சரவினால் கோபத்துடன் பேசியதுண்டு என்றும் முன்னமே நான் உங்களுக்குச் சொல்லவில்லையா? ஆகையினால், கொலை செய்யப்பட்ட என் மூத்தமகன் அறையில் நான் இருந்து, அவனுடைய அகோர மரணத்தைப் பற்றிச் சிந்தித்து அழுது கொண்டிருந்தபோது அங்குவந்த அம்பலவாணனைப் பார்த்ததும், 'அதுவரையில் பொருள் சம்பந்தமாகச் சச்சரவிட்டுக்கொண் டிருந்த அண்ணன் தம்பிகளுள் மூத்தவன் யாராலோ கொல்லப்பட்டானே! பாழும் பொருளுக்காக வல்லவா அவர்களுக் கிடையில் அப்படிப்பட்ட சச்சரவு நேரிட்டது?' என்னும் பொருள்படும்படி, 'அடே பாவீ! பாவீ!!' என்று நான் கூறியது உண்மைதான். இதனால், நீங்கள் நான் அவன்மீது சந்தேகங் கொண்டு அப்படிச் சொல்லியதாகக் கருதவேண்டிய காரணமென்ன? அப்படி நான் அவன்மீது சந்தேகங்கொண் டிருப்பேனானால் போலீஸ் உத்தியோகஸ்தர்களையும், துப்பறிவதில் கெட்டிக்காரரான உம்மையும் அழைத்துக் குற்றவாளியைக் கண்டு பிடிக்கும் படி சொல்லி யிருப்பேனோ? அப்படி யவன் குற்றவாளியாக இருந்தால், அவனுக்காக அல்லாவிட்டாலும் எங்கள் குடும்பத்தின் பெயரைக் காப்பாற்றக் கருதியாகிலும் நான் அவன் குற்றத்தை மறைத்துவிட்டிருக்க மாட்டேனோ? 'கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது' என்பதுபோல் உண்மை யுணர்ந்து நன்மை யடையவேண்டும் என்றெண்ணி நான் உங்களை—துப்பறிவதில் இணையற்றவராகிய உங்களை—

அழைத்தால், நீங்கள் என் புத்திரன்மீதிலேயே—நிரபராதியான அம்பலவாணன்மீதிலேயே—வீணுகச் சந்தேகப்படுவானேன்?' என்று ஒன்றின்பின் ஒன்ருகப் பல கேள்விகளைக் கேட்டாள்.

பிறகு குணசீலர் அவளைநோக்கி, 'சரி, அம்மா, அது கிடக்கட்டும். உங்களுடைய வேலைக்காரி கமலம் எங்கே இருக்கிருள்? அவளை நான் இப்பொழுது பார்க்கமுடியுமா?' என்று கேட்டார்.

மரகதவல்லியம்மாள், 'ஆஹா! அப்படியே பார்க்கலாம். இதோ நான் சமையலறைக்குப் போய் அவளை இங்கு அனுப்புகிறேன்,' என்று கூறிச்சென்ருள். பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் வேலைக்காரி கமலம் குணசீலர் உட்கார்ந்திருந்த அறைக்கு வந்தாள்.

குணசீலர் அவளைப் பார்த்து, 'அம்மா, கமலம், நான் உன்னை ஒரு விஷயம் கேட்கவேண்டும். கற்பகவனத்தில் மோகனசுந்தர முதலியார் கொலை செய்யப்பட்ட விஷயம் தெரிந்ததும், அதை டெலிபோன் மூலமாக நீ யாருக்குத் தெரிவித்தாய்?' என்று கேட்டார்.

கமலம்:—நானு? ஒருவருக்குந் தெரிவிக்கவில்லையே! நான் ஏன் தெரிவிக்கப்போகிறேன்?

குணசீலர்:—கமலம், பொய் பேசாதே. நீ டெலிபோனில் பேசியதை நான் அறிவேன். நீ யாருடன் பேசிஞய்?

கமலம்:—ஐயா அவர்கள் வேடிக்கையாகப் பேசுவதாகத் தெரிகிறது. யாரோ தங்களிடம் இப்படிப் பொய்யாகக் கூறி யிருக்கிருர்கள். இது கட்டுக்கதை. நான் ஒருவருக்கும் டெலிபோன் மூலமாய் அவ் விஷயத்தைத் தெரிவிக்கவே யில்லை.

குணசீலர்:—கமலம், நீ வெகு சாமர்த்தியமாகப் பேசுகிருய் என்பது எனக்குத் தெரியும். நீ மோகனசுந்தர முதலி

யார் கொலை செய்யப்பட்ட விஷயத்தை நீதிபதி நீல கண்ட முதலியாரவர்கள் புத்திரி கலாவதிக்கு டெலி போன் மூலமாகத் தெரிவித்தாய். கலாவதியின் வீட்டுக்கு அவ்விஷயம் தெரிவதற்கு முன் நீ அதை அவளுக்கு இரகசியமாகத் தெரிவித்ததற்குக் காரணமென்ன?

ஒன்றின்பின் ஒன்றாக விஷயம் வெளிப்படுவதைக் கண்ட கமலம் பயந்தாள். குணசீலருக்கு யாவும் தெரிந்து விட்டனவாகையால், இனி ஒன்றையும் மறைத்துப் பேச முடியாது என்று தெரிந்ததும் அவள் குணசீலரை நோக்கி, 'ஐயா அவர்களே, மன்னிக்கவேண்டும். கலாவதியம்மாள் குழந்தையிலிருந்தே இக்குடும்பத்தில் பழகி வருவதால், மோகனசுந்தர முதலியாரவர்கள் இறந்து விட்டதை அவர்களுக்கு உடனே தெரிவிக்கவேண்டும் என்று எண்ணி, நான் அவ்விதம் செய்தேன்,' என்று கூறினாள்.

குணசீலர்:—கமலம், அப்படி யெல்லாம் கூறுவதில் பயனில்லை. உண்மையைச் சொல்லிவிடு. நீயோ மரகதவல்லியம்மாளிடம் வேலையிலிருக்கிறாய்; கலாவதியம்மாள் உன்னை வேலையில் வைக்கவில்லை. அப்படியிருக்க இந்த விஷயத்தை இரகசியமாக நீ ஏன் கலாவதியம்மாளுக்குத் தெரிவித்தாய்?

கமலம்:—எஜமான் ஐயா மோகனசுந்தர முதலியாருக்கும் கலாவதியம்மாளுக்கும் வெகு நாளாகப் பழக்கமுண்டு. அதனால், எஜமான் ஐயா அவர்கள் சில சமயம் என்னிடம் கடிதங் கொடுத்து, அந்த அம்மாளிடம் கொடுக்கச் சொல்வது உண்டு. நானும் அப்படியே தடையில்லாமல் செய்வது வழக்கம். கலாவதியம்மாள் எஜமான் ஐயா விடத்தில் அதிக அன்புகொண் டிருந்ததால், அவர்கள் வீட்டுக்கு இந்த விஷயம் தெரிந்தவுடன்

அந்தம்மாள் தம்முடைய தகப்பனுர் முன்னிலையி லேயே அழத் தொடங்கி விடுவாரென்றும், அதனுல் சந்தேகம் ஏற்படக்கூடுமென்றும் எண்ணியே, நான் இவ்விஷயத்தை முன்னமே அந்த அம்மாளுக்குத் தெரி வித்தேன்.

குணசீலர்:—சரி; கலாவதியம்மாளிடம் கடிதம் கொண்டு போவதற்காக மோகனசுந்தர முதலியார் உனக்கு அதிக பணம் கொடுத்திருப்பாரென்று நான் எண்ணு கிறேன்.

கமலம்:—ஐயா அவர்களே, நான் ஏழை. எந்த வழியிலாகி லும் ஒரு வழியில் வயிறு வளர்க்கவேண்டி யிருக் கிறது. ஒருவர் பொருளை அபகரிக்காமலும், ஒருவரை மோசம் செய்யாமலும் இருக்கவேண்டும் என்பது தான் என் கருத்து. எஜமான் ஐயாவும் கலாவதியம் மாளும் எனக்கு அடிக்கடி ஏதாகிலும் கொடுப்பது வழக்கம்.

குணசீலர்:—சரி, கமலம், நீ எப்பொழுதாவது கலாவதி யம்மாளும் மோகனசுந்தர முதலியாரும் தனியே யிருந்து பேசும்பொழுது பார்த்திருக்கிருயா? வீட்டி லாயினும் சரி; அல்லது வேறெவ்விடத்திலாயினும் சரி.

கமலம்:—ஆம்! பார்த்திருக்கிறேன். எப்பொழுதாவது நல்லது பொல்லது நடக்குங்காலத்தில் அவர்கள் இரு வரும் மற்றவர்களிடையிலிருந்து நீங்கிப் பின்புறத்தி லுள்ள தோட்டத்திலாவது எஜமான் ஐயா அவர்க ளின் வாசிப்பு அறையிலாவது இருந்துகொண்டு, சிறிது நேரம் உல்லாசமாகப் பேசிக் காலங்கழிப்பார்கள். அப்படி அவர்கள் தனியே இருந்து உல்லாசமாகப் பேசியதை நான் இரண்டொரு முறை நேரிற் பார்த் திருக்கிறேன்.

குணசீலர்:—கொலை நடந்த நாள் இரவில் அவர்களை நீ மோகனசுந்தர முதலியார் அவர்களுடைய அறையில் பார்த்த துண்டா?

கமலம்:—ஆம்! பார்த்தேன். அன்று இரவு அவர்களிருவரும் நெடுநேரம் பேசிக்கொண் டிருந்தார்கள்.

குணசீலர்:—நல்லதம்மா கமலம். இவ்வளவுதான் நான் உன்னைக் கேட்க விரும்பியது. ஆனால், நீ மாத்திரம் இனிப் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம்பிள்ளை வந்து உன்னை இதைப்பற்றி ஏதாகிலும் கேட்டால், ஒன்றையும் அவரிடம் ஒளியாதே. அப்படி விஷயத்தை ஒளித்துக் கூறுவது உனக்குப் பெரிய துன்பத்தை யுண்டாக்கிவிடும். 'அரச மரத்தைப் பிடித்த பேய் பிள்ளையாரையும் பிடித்தது,' என்பதுபோல் இக்குடும்பத்தில் ஏற்பட்டிருக்கும் துன்பத்திற்கு நீ ஆளாகாமல் இருப்பதற்குப் பார்த்துக்கொள். நான் போய் வருகிறேன். நீ நான் சொன்னதை மறந்துவிடாதே. உண்மையைக் கூறுவதில் ஒரு நாளும் பழுதில்லை.

குணசீலர் இவ்வாறு கூறிவிட்டுப் பிறகு மரகதவல்லியம்மாளிடம் விடைபெற்றுக்கொண்டு, மனோரஞ்சித விலாசத்திற்கு வெளியே வந்தார். அப்பொழுது அவருக்குக் கலாவதியைக் கண்டு சில விஷயம் பேச விருப்பம் உண்டாயிற்று. உடனே அவர் மோட்டார் வண்டியிலேறிக்கொண்டு திருவல்லிக்கேணியில் தெளசிங்கப் பெருமாள் கோவில் வீதியிலுள்ள நீதிபதி நீலகண்ட முதலியார் வீட்டுக்கு வண்டியைச் செலுத்தும்படி சதாசிவனுக்குக் கட்டளையிட்டார். அவனும் வண்டியைச் செலுத்தினான். பதினைந்து நிமிஷத்திற்குள் வண்டி நீதிபதி நீலகண்ட முதலியார் அவர்களுடைய கிருஷ்ண விலாசம் என்னும் மாளிகையின் முன் சென்று நின்றது.

உடனே குணசீலர் வண்டியைவிட் டிறங்கி, உள்ளே சென்று, அங்கிருந்த ஆள் ஒருவனை, 'நீதிபதி முதலியார் அவர்கள் வீட்டிலிருக்கிறார்களா?' என்று கேட்டார். அவ் வேலைக்காரன் முதலியார் வெளியே போயிருப்பதாகவும், கலாவதி மாத்திரம் வீட்டிலிருப்பதாகவும் கூறி, அவரைக் கலாவதியினிடம் மேன் மாடியிலுள்ள அவள் வாசிப்பு அறைக்கு அழைத்துச் சென்றான். கலாவதி அங்கு ஓர் அழகிய சோபா நாற்காலியில் உட்கார்ந்து, எதையோ வாசித்துக்கொண் டிருந்தாள். அவளணிந்திருந்த சிறிய வைரக்கம்மலும், வெண் பட்டுப் புடவையும், தங்கத்தாற் செய்து கல்லிழைக்கப்பட்ட ஒட்டியாணமும் அவளைக் கல் விக்கு அரசியாகிய கலைமகளைப்போலவே தோன்றச் செய் தன. ஆ! ஆ!! கலாவதி யென்னும் பெயர் அவளுக்கே தகும்! அவளுடைய வாசிப்பு அறையின் சுவர்களில் மூன்று அடி உயரத்திற்கு முகந்தெரியத் தகுந்தவையும், பூவேலைப்பா டமைந்தவையுமான பலநிறக் கற்கள் புதைக் கப்பட்டு, மற்றப் பகுதி சுண்ணும்பு பூசப்பட் டிருந்தது. அச்சுவர்களில் இராஜா இரவிவர்மா என்னும் உலகப் பிரசித்தியடைந்த இந்திய ஓவியரால் (Artist) எழுதப் பட்ட பல உருவப்படங்கள் உயிருள்ள உருவங்கள் தோன்றியிருப்பதுபோல் மாட்டப்பட் டிருந்தன. அழகிய கண்ணுடி அலமாரிகளில் சிறந்த தமிழ்ப்புலவர்களால் எழு தப்பட்ட நூற்களும் வரிசை வரிசையாக அமைக்கப்பட்டுக் காண்போர் கண்ணையும் கருத்தையும் கவர்ந்துகொண் டிருந் தன. அதிகம் கூறுவதேன்? சுருங்கச் சொன்னுல், அவ் வறையைக் கலைமக ளிருப்பிடம் என்றே கூறலாம். அங்கு உட்கார்ந்து எதையோ வாசித்துக்கொண் டிருந்த கலாவதி குணசீலர் வந்த காலடிச் சத்தத்தைக் கேட்டுத் தலை நிமிர்ந்து குணசீலரைக்கண்டு, உடனே எழுந்து அவரை அறைக்குள்

ளழைத்து, ஒரு நாற்காலியில் உட்காரச்செய்து, தானும் உட்கார்ந்தாள். அவள் முகம் அப்பொழுது சிறிது வேறு பட்டது.

குணசீலர் அவளை நோக்கி, 'அம்மா, மோகனசுந்தா முதலியாரவர்களுடைய மரணத்தைப்பற்றி அன்று காலை யில் அவ்வீட்டார் எவரேனும் உம்முடைய தந்தையாருக் குத் தெரிவித்ததுண்டா ?' என்று கேட்டார்.

'என்னுடைய தந்தையாருக்கா? ஏன்? அவர்தானே எனக்கு அதைப்பற்றிச் சொன்னார்? கற்பகவனத்திலிருந்து அவருக்குச் சமாசாரம் வந்தது,' என்று ஆச்சரியத்தோடே கூறினாள் கலாவதி.

'அதாவது, கற்பகவனத்து வேலைக்காரி கமலம் என்பவள் உமக்கு டெலிபோன் மூலமாகத் தெரிவித்ததை நீர் உமது தந்தையாருக்குத் தெரிவிக்கவில்லையா?' என்று கேட்டார் குணசீலர்.

கலாவதி அதைக் கேட்டவுடனே தாழ்ந்த குரலுடன், 'என்ன? டெலிபோன் மூலமாகத் தெரிவித்தாளா? கமலமா எனக்கு டெலிபோன் மூலமாக அதைத் தெவித்ததாகக் கூறுகிறீர்கள் ?' என்று கேட்டாள்.

உடனே குணசீலர் அவளைப் பார்த்து, 'அம்மா, நீர் எதைக் கூறினாலும் உண்மையாகக் கூறவேண்டும். அப் படிக் கூறினால் உம்முடைய இரகசியம் வெளிப்படாமலிருக் கும். உண்மையைக் கூறுவிட்டால், நான் உம்முடைய தந்தையாருக்கு விஷயத்தைத் தெரிவிக்கவேண்டி நேரிடும். உமக்கும் கற்பகவனத்து மோகனசுந்தா முதலியாரவர்களுக் கும் இருந்த சம்பந்தத்தை நான் தெரிந்துகொள்ள விரும்பு கிறேன்,' என்று கூறினார்.

அவர் அவ்வாறு கூறியதைக் கேட்டதும் கலாவதிக்குக் கோபம் வந்துவிட்டது. அவள் அவரைக் கடுகடுத்த முகத்

துடன் நோக்கி, 'உம்முடைய துணிவே துணிவு! நீர் கூறுவதற்கு அர்த்தமென்ன? என் தந்தையாரிடத்திலா கூறப் போகிறீர்? அப்படி எனக்குப் பழிப்பையுண்டாக்கத் தகுந்த விஷயத்தை நீர் அவரிடம் சொல்லுவீரானால், அவரே உம்மை இவ்வீட்டைவிட்டு உடனே வெளியே அனுப்பி விடுவார். இன்னொரு முறை அப்படிக் கூறுதீர்!' என்று கூறினாள்.

குணசீலர் பொறுமையுடன், 'அம்மா, இருக்கட்டும். அதனால் தீமையில்லை. கொலையுண்ட மோகனசுந்தர முதலியாருக்கும் உமக்கும் நெடுநாளாகப் பழக்கமுண்டு என்பதை நான் அறிவேன்; அவ்வுண்மையைத் தக்க ஆதாரத்துடன் விளக்கியும் காட்டுவேன். கமலம் என்னும் வேலைக்காரி மோகனசுந்தர முதலியாரிடமிருந்து அடிக்கடி உமக்குக் கடிதங்களைக் கொண்டுவந்து கொடுத்துக்கொண் டிருந்ததும் எனக்குத் தெரியும். அவளே எனக்கு எல்லாவற்றையும் சற்று முன்பு கூறி விட்டாள். மோகனசுந்தர முதலியார் கொலை செய்யப்பட்ட விஷயத்தை நீர் உம்முடைய தந்தையார் முன்னிலையில் அறிந்தால், அடக்க முடியாத துக்கத்தால் வாய்விட் டலற நேரிடும் என்றும், அதனால் உமக்கும் மோகனசுந்தர முதலியாருக்கும் உள்ள சம்பந்தம் வெளிப் பட்டுவிடு மென்றும கருதியே, அவள் முன்னதாகவே உமக்கு டெலிபோன் மூலமாய் அதைப்பற்றித் தெரிவித்ததாகக் கூறினாள்,' என்று கூறினார்.

அவர் கூறிய எல்லாவற்றையுங் கேட்ட கலாவதி பதிலொன்றுங் கூறாமல் குணசீலர் முகத்தைப் பார்க்க வெட்கப் படுபவளைப்போலத் தலை குனிந்த வண்ணமாய்த் தரையைத் தன் காலின் பெரு விரலினால் கீறிக்கொண்டு சிறிது நேரம் மௌனமா யிருந்தாள்.

பிறகு அவள் அவரை நோக்கி, 'ஐயா, நீர் கூறுவது போலவே நான் நெடுநாளாக மோகனசுந்தர முதலியாரவர்களுடன் பழகியது உண்மைதான். நண்பர்கள் ஒருவரையொருவர் நேசிப்பது போலவே நானும் அவரை நேசித்தேன். இதிலென்ன குற்றமிருக்கிறது? முதல் முதலில் அவர் என்னை மணக்க இருந்தார். பிறகு எனக்குப் பதிலாக என் உரிமையை வேறொருத்தி யடைந்தாள். அது முதல் வேறொருவரையும் மணந்துகொள்ள என் மனம் இசையவில்லையாகையால், நான் இதுவரையில் கலியாணம் செய்துகொள்ளாமலே இருக்கிறேன். மோகனசுந்தர முதலியார் அவர்களுக்கும் அவர் மனைவிக்கும் இடையில் உண்மையான அன்பு ஏற்படாமலிருந்தது எனக்குத் தெரியும். என்னை அவர் முதலில் காதலித்துக் கைவிட்டபோதிலும் எனக்கு அவர் மீதிருந்த காதல் மாத்திரம் நீங்காமலே இருந்தது. பின்பு அவர் மறுபடியும் என்னோடு அன்பாகப்பேச ஆரம்பித்தார்,' என்று கூறினாள்.

குணசீலர் :—நீர் அவரைப் பலமுறை தனியாகப் பார்த்திருக்கிறீர். நீரும் அவரும் இரகசியத்தில் உல்லாச வார்த்தைகள் பேசிக்கொண் டிருந்தபோது அவ்வீட்டு வேலைக்காரி கமலம் பலமுறை உங்களிருவரையும் பார்த்திருக்கிறாள்.

கலாவதி :—அது மெய்தான். எப்பொழுதாவது அவ்வீட்டில் ஒரு நற்காரியம் நடந்தால், பல விருந்தினர்கள் வருவது வழக்கம். அப்பொழுது நாங்களும் செல்லுவோம். நான் அவருடன் அந்தச் சமயங்களில் பேசுவது உண்மைதான். அவர் எல்லாரோடும் பேசுவது போலத்தான் என்னுடனும் பேசுவது வழக்கம்.

குணசீலர் :—நீர் கடைசி முறையாக அவரை எப்பொழுது தனியே பார்த்தீர்?

கலாவதி :—அதைப்பற்றி எனக்கு ஞாபக மில்லை.

குணசீலர் :—கொலை நடந்த நாளுக்கு முன்னிரவு பார்த்திருக்கக் கூடுமோ ?

கலாவதி .—ஆம்! ஆம்!! அப்பொழுதுதான். அவருடைய மனைவி தனக்கு உடம்பு சரியில்லை என்று சொல்லி அங்கிருந்து போய்விட்ட பிறகு அவ்வறையில் நானும் அவரும் பேசிக்கொண்டும் விளையாடிக்கொண்டும் இருந்தோம். அப்பொழுது என் தந்தையார் மரகதவல்லியம்மாள் அவர்களுடன் ஏதோ குடும்ப விஷயத்தைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்.

குணசீலர் :—அவ்வளவுதானு ?

கலாவதி:—ஆம்! அவ்வளவுதான். ஆனுல், மற்றொரு விஷயம் இருக்கிறது : அவர் என்னை அவ்வறைக்கு அழைத்துக்கொண்டு போய்ப் பேசிக்கொண் டிருந்தபொழுது நான் அடுத்தவாரம் என் தந்தையாரோடு பெங்களூருக்குப் போகப்போவதாகவும், வருவதற்குச் சிலநாட்கள் செல்லும் என்றும் கூறினேன். அதைக் கேட்க அவருக்கு வருத்தமாகவே இருந்தது. அவர் என்னைப் பிரிந்திருக்க முடியாதென்றும், என்னையே அவர் தம்முடைய வாழ்க்கைத் துணைவியாகச் செய்து கொள்ள விரும்புவதாகவும் கூறினுர். அதைக்கேட்டவுடனே எனக்கு அதிக கோபம் உண்டாயிற்று. நான் அவர் முன்பு மணந்துகொண்ட மனைவியைக் கைவிட்டு அவ்வாறு செய்வது சரியல்ல என்று அவருக்குக் கூறிவிட்டு, அவ்வறையைவிட்டு வெளியே வந்தேன்.

குணசீலர் :-—அவரும் உம்மைப் பின்பற்றி வந்தாரா ?

கலாவதி:—ஆம் ; அவர் வெளிவந்து, என்னைப் பலவாறு வேண்டினுர். ஆனுல், நான் அவர் வேண்டுகோளுக்கு

இசையாமல், என்னுடைய தந்தையாருடன் வீட்டுக்கு வந்துவிட்டேன்.

குணசீலர்:—அப்புறம் நீர் ஒன்றும் கேள்விப்பட வில்லையா?

கலாவதி:—இல்லை; பிறகு கமலம் என்னை டெலிபோன் மூலமாக அழைத்து, மோகனசுந்தர முதலியார் அவர்கள் கொலையுண்டதைப்பற்றிக் கூறியவரையில் ஒன்றும் கேள்விப்படவில்லை.

குணசீலர்:—சரி, அம்மா, மோகனசுந்தர முதலியார் அவர்களுக்கு யாராகிலும் கொடிய விரோதிகள் இருந்ததாக உமக்குத் தெரியுமா? அவர் எப்பொழுதாவது உம்மிடம் அவருக்கிருந்த கஷ்டத்தைப்பற்றிக் கூறியிருக்கிறாரா?

கலாவதி:—இல்லை. ஆனால், அவர் தமக்கு வீட்டு வாழ்க்கையில் விருப்பமே யில்லையென்பதை மாத்திரம் என்னிடம் சொல்லியதுண்டு. வீட்டுத் துன்பத்தைச் சாதாரணமாக நண்பர்களிடத்தில் சொல்லிக் கொள்ளுவது வழக்கந்தானே?

குணசீலர், 'அம்மா, நான் இவ்விஷயத்தைப் பற்றி யொருவரிடமும் கூறமாட்டேன். இதை நீர் நம்பலாம். நேரமாகிறது, நான் போய்விட்டு வருகிறேன்,' என்று கூறிக் கலாவதியிடம் விடை பெற்று, வெளியே இருந்த தம்முடைய மோட்டார் வண்டியிலேறிக்கொண்டு அதை வீட்டுக்குச் செலுத்தும்படி சதாசிவனுக்குக் கூறினார். சதாசிவன் வண்டியை வெகு விரைவாகச் சென்னைத் தம்புசெட்டி வீதியிலுள்ள குணசீலருடைய மாளிகைக்குச் செலுத்தினான்.

---

## பத்தாம் அத்தியாயம்

மிரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்

வண்டி வீட்டின் முன்னிலையில் வந்து நின்றதும் குணசீலர் அதைவிட்டிறங்கி யுள்ளே சென்றார். கோவிந்தன் அவர் எதிரில் வந்து, இன்ஸ்பெக்டர் துரை சிங்கம்பிள்ளை வெகு நேரமாக அவருக்காகக் காத்துக்கொண் டிருப்பதாகக் கூறினான். குணசீலர் அவனைப் பார்த்து, 'அவர் எங்கே யிருக்கிறார் ?' என்று கேட்க, அவன், 'அவர் மேல் மாடியில் உங்களுடைய அறையில் உட்கார்ந்துகொண் டிருக் கிறார்,' என்று கூறினான். உடனே குணசீலர் மாடிக்குச் சென்று, தம்முடைய அறையில் இருந்த இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையைக் கண்டார்.

துரைசிங்கம் பிள்ளை அவரைப் பார்த்ததும் அதிக சந்தோஷங்கொண்டு, "நண்பரே, நான் இங்கு வந்து வெகு நேரமாயிற்று. தாங்கள் இன்று வீட்டிற்கு வர 'இன்னம் அதிக நேரமாகுமோ, என்னவோ?' என்று நான் எண்ணிக் கொண் டிருந்தேன். நல்லவேளையாகத் தாங்கள் வந்து விட்டீர்கள். என்ன சமாசாரம்?" என்று கேட்டார்.

குணசீலர் அவரைப் பார்த்து, 'பிள்ளை அவர்களே, விஷயம் போகப் போக வளர்ந்துகொண்டே போகிறது ; எந்த விஷயமும் உண்மையாகத் தெரியவில்லை,' என்று வெறுப்புடன் கூறினார்.

உடனே இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை அவரை நோக்கி, 'ஆ! ஆ!! நண்பரே, நான் இன்று ஒரு புதுமை யைக் கண்டுபிடித்தேன். இதுவரையில் நாம் கொலைநடந்த நாளைக்குப் பிறகு நடந்த விஷயங்களையே ஆராய்ந்து வருகி

ரும் அல்லவா? அதற்கு முன் மோகனசுந்தர முதலியார் தம்முடைய வாழ்நாளை எவ்வாறு கழித்தார் என்பது நமக்குத் தெரியுமா?' என்று கேட்டார்.

"'நமக்குத் தெரியும்' என்று எப்படிக் கூறமுடியும்?" என்றார் குணசீலர்.

இன்ஸ்பெக்டர்:—நான் மோகனசுந்தர முதலியார் தம்முடைய வீட்டிலிருந்து துரத்திவிட்ட வேலையாளைப் பார்த்து விசாரித்ததில் ஒரு விஷயம் தெரிந்தது. அதாவது, அவன் அவரிடம் வேலையில் இருந்த பொழுது அவர் ஒருநாள் அதிக துக்கத்தோடு இருந்தாராம். அவர் என்றைக்கும் வெளியே சென்றால் அவனை உடனழைத்துச் செல்லுவது வழக்கமாம். அன்று மாத்திரம் அவர் தனியே வெளியேபோய் வந்தது அவனுக்கு ஆச்சரியத்தை யுண்டாக்கியதாம். அப்படியே அவர் வெளியே போய் வந்தபிறகு ஒரு நாளும் இல்லாத துக்கத்தோடு அவர் காணப்பட்டதாக அவன் கூறினான்.

இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை இவ்வாறு கூறி முடித்துக் குணசீலர் முகத்தை நோக்கிய வண்ணம் பேசாதிருந்தார். குணசீலர் பொறுமையோடு அவரை நோக்கி, 'உம்...அப்புறம் ஏதாகிலும் சொன்னானா?' என்று கேட்டார்.

இன்ஸ்பெக்டர்:—அப்புறம் நான் இதைப்பற்றி அவனை யொன்றும் கேட்கவில்லை. ஏனென்றால், அவன் அவ்விடத்தை விட்டுத் துரத்திவிடப்பட்டதால், அப்புறம் நடந்த விஷயம் அவனுக்குத் தெரியாதல்லவா? ஆனால் நான் இவ்விஷயத்தைப் பற்றிக் கற்பக வனத்திலுள்ள சமையற்காரத் தியாகராயனைக் கேட்டபொழுது இன்னஞ் சில உண்மைகள் வெளிப்பட்டன. மூன்று வாரங்களுக்கு முன் மோகனசுந்தர முதலியார் அவர்க

ளுக்கு ஒரு நாள் சாயங்திரம் ஒரு கடிதம் வந்ததாகத் தெரிகிறது. அப்பொழுது கற்பகவனத்தில் விருந்து நடந்துகொண் டிருந்ததாம். மோகனசுந்தர முதலியாரவர்கள் அந்தக் கடிதத்தைக் கண்டவுடன் அவ் விருந்தையும் கவனிக்காமல், உடனே தம்முடைய மோட்டார் வண்டியிலேறிக்கொண்டு வெளியேபோய் விட்டாராம். மறுநாள் காலை ஆறுமணிக்கு அவர் திரும்பி வந்தபோது மோட்டார் வண்டியின் சக்கரங் களில் அதிக மண் படிந்திருந்ததால், அவர் எங்கோ அதிக தூரம் போய் வந்ததாகத் தியாகராயன் எண்ணி ஞனும்.

குணசீலர்:—இந்தக் கதையிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியது என்ன இருக்கிறது?

இன்ஸ்பெக்டர்:—சற்றுப் பொறுங்கள். மோகனசுந்தர முதலியார் கொலையுண்ட தினத்திற்கு முன் நாள் காலையில் ஒரு கடிதம்—முன் வந்ததைப்போலவே—அவருக்கு வந்ததாம். அதைப் படித்துப் பார்த்து விட்டு, அவர் முன்போலவே உடனே தம்முடைய வண்டியி லேறிக்கொண்டு வெளியே போய் விட்டு, அன்று மாலை சற்றேறக்குறைய ஐந்து மணிக்குத் திரும்பி வீடு வந்து சேர்ந்தாராம். அப்பொழுது அவர் பார்வைக்கு அதிக துன்ப மடைந்தவரைப்போலத் தோன்றினாராம். ஆனால், அவனுக்கு அவர் எங்குச் சென்று வந்தார் என்பது மாத்திரம் தெரியவில்லை. அதைப்பற்றி மோகனசுந்தர முதலியார் அவர்களு டைய மோட்டாரோட்டியைக் கேட்டால், அவன் முத லில் தனக்கு அதைப்பற்றி ஒன்றுந் தெரியாதென்று கூறிவிட்டான். அவனுக்கு மோகனசுந்தர முதலியார் ஏதோ பணங்கொடுத்து அவ்விஷயத்தை ஒருவருக்கும்

தெரிவியாமல் இருக்கும்படி சொல்லி யிருந்தார் போலிருக்கிறது. ஆனால், பிறகு அவனை வற்புறுத்திக் கேட்டதால், அவன் தான் வண்டியைப் பூவிருந்தவல்லிக்குக் கொண்டுபோய் இருந்ததாகவும், அப்பொழுது மோகனசுந்தர முதலியார் அவ்விடத்தில் துபாஷ் தெருவிலுள்ள ஒரு பெரிய மாளிகையினுட் சென்று, அங்கு யாரோடேயோ வெகுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுக் கடைசியில் வந்ததாகவும், அன்று முழுவதும் அவன் சோறில்லாமல் பட்டினிக் கிடக்க நேர்ந்ததாகவும் கூறினான்.

குணசீலர்:—ஆம்; இதனால் என்ன தெரிகிறதென்று நீங்கள் கூறுகிறீர்கள்?

இன்ஸ்பெக்டர்:—அதாவது, மோகனசுந்தர முதலியாரவர்களுக்கு அவ்விடத்தில் எவ்வகையிலோ சம்பந்தம் இருந்ததாகவும், அதை அவர் வீட்டுக்குத் தெரிவித்துக் கொள்ளாமல் இருந்ததாகவும் தெரிகிறது.

குணசீலர்:—அதற்கும் இக்கொலைக்கும் உள்ள சம்பந்தமென்ன?

இன்ஸ்பெக்டர்:—இவ்விஷயத்தை நன்றாக ஆராய்ச்சி செய்தால், நமக்கு உண்மை விளங்கக்கூடும் என்று நான் எண்ணுகிறேன். வேறு ஒரு வழியும் சிறந்ததாகக் காணப்படவில்லை.

குணசீலர்:—நண்பரே, இதனால் வெளியார் யாரோ இக்கொலையைச் செய்திருப்பதாக நீர் கருதுகிறீர் என்று எண்ணுகிறேன். அப்படி யிருந்தால், கற்பகவனத்தில் அன்றைய தினம் எல்லோரும் படுத்துக்கொண்ட பிறகு யாராகிலும் ஒருவர் கதவைத் திறந்து, வெளியிலிருந்து வந்திருக்கலாம் என்று நீர் கருதுகிற கொலையாளியை உள்ளேவிட் டிருக்கவேண்டும். அப்படி

யிருந்தால், கொலையாளி கொலை செய்துவிட்டுப் பேசாமற் போகாமல், அங்குக் காண்போர் கலக்கமடையும்படியான பொய்த் தோற்றங்களை ஏன் செய்திருக்க வேண்டும்? இவைகளெல்லாம் அக்கொலைக்குக் காரணமாகமாட்டா என்பது நிச்சயம். கானல் நீரை உண்மையான தண்ணீர் என்றெண்ணி, அதன் பின் ஓடித் தன் காலத்தைக் கழிக்கின்ற மானைப்போல, நாம் ஏன் பொய்யான விஷயங்களை எல்லாம் பின்பற்றி, வீணில் காலத்தைக் கழிக்கவேண்டும்? வேறு ஏதாவது விஷயங் காணப்பட்டால், என்னிடம் வந்து சொல்லுங்கள். நான் ஏதாகிலும் கண்டு பிடித்தாலும் உங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

குணசீலர் இவ்வாறு கூறியதும் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை தாம் உட்கார்ந்திருந்த நாற்காலியைவிட் டெழுந்து, அவரைப் பார்த்து, 'நண்பரே, அப்படியே ஆகட்டும்; காலையில் நான் உங்களுக்கு விஷயந் தெரிவிக்கிறேன். நேரமாகிறது, நான் போய் வருகிறேன்,' என்று கூறி, அவரிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே சென்றார்.

உடனே கோவிந்தன் மாடிக்குச் சென்று, அவருடைய உடைகளைக் கழற்றி, வைக்கவேண்டிய இடத்தில் வைத்து விட்டு, அவரைச் சாப்பிட அழைத்தான். குணசீலர் அரையிற் கட்டிய வேஷ்டியுடன் கீழே சென்று சாப்பிட்டு விட்டுக் கையலம்பிக்கொண்டு மாடியிலுள்ள தம் அறையில் வந்து உட்கார்ந்தார். அப்பொழுது அவருக்குப் பற்பல எண்ணங்கள் தோன்றின. அவர் ஒவ்வொரு தரம் தமக்குத் தாமே சிரித்துக் கொண்டார்; சிலமுறை தாமே தலையை அசைத்து, ஏதேதோ பேசினார். பிறகு சிறிது நேரம்

வரையில் சமாசாரப் பத்திரிகை வாசித்துவிட்டுப் படுத்துக் கொண்டார்.

---

## பதினேராம் அத்தியாயம்

---

### வீண் முயற்சி

மறுநாட் காலையில் குணசீலர் படுக்கையைவிட்டெழுந்து, காலைக் கடன்களை முடித்துக் கொண்டு சாப்பிட்டு விட்டுத் தம்முடைய அறையில் உட்கார்ந்து, ஏதோ யோசித்துக்கொண் டிருந்தார். அப்பொழுது அவர் வேலைக்காரனுகிய கோவிந்தன் அவரிடம் வந்து, போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை அவரைப் பார்க்க வந்திருப்பதாகக் கூறினன். உடனே குணசீலர் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையைத் தம்முடைய அறைக்கு அழைத்து வரும்படி அவனுக்கு உத்தா வளித்தார். கோவிந்தன் அப்படியே சென்று, போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையை அழைத்து வந்து, அவரிடம் விட்டுச் சென்முன். பிறகு குணசீலர் துரைசிங்கம் பிள்ளையை அறைக்குள் அழைத்து, ஒரு நாற்காலியில் அமரச் செய்து, அவர் அவ்வளவு காலையில் தம்மிடம் வந்ததற்குக் காரணமென்ன வென்று கேட்டார். அதைக் கேட்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை எதையோ கண்டு பிடித்துவிட்டவர்போல் அதிக சந்தோஷத்துடன் குணசீலரைப் பார்த்து, 'நண்பரே, நான் நேற்று உம்மிடம் ஒரு விஷயங் கூறிச் சென்றேனே; அதில் சிறிது உண்மை இருப்பதாகத் தெரிகிறது,' என்று கூறினர்.

அதைக் கேட்ட குணசீலர் தமக்குள் சிரித்துக் கொண்டே, அவரை நோக்கி, 'அஃது என்ன உண்மை? கூறுங்கள்! ஒவ்வொரு நாளும் ஒவ்வோர் உண்மை உமக்கு வெளிப்பட்டுக் கொண்டே வருவதைப் பார்க்க எனக்கு அதிக சந்தோஷமுண்டாகிறது. ஏன்—ஒவ்வொரு நாளும் என்று கூறுவதை விட ஒவ்வொரு நிமிஷமும் என்று கூறினால், இன்னம் பொருத்தமாகவே இருக்கும் என்று எண்ணுகிறேன்,' என்று கூறினார்.

குணசீலர் இவ்வாறு கூறுவார் என்று இன்ஸ்பெக்டர் துரைசிங்கம்பிள்ளை எதிர்ப் பார்க்கவேயில்லை. ஆகையினால், இதைக் கேட்டதும் அவர் முகம் மாறுபட்டது; சந்தோஷம் காற்றாய்ப் பறந்தது. பின்பு அவர் குணசீலரை நோக்கி, 'நண்பரே, விஷயங்களைக் கூர்ந்து கவனிக்காமல், அப்படிச் சொல்லி விடுவதற்கில்லை. நான் கூறும் விஷயத்தைச் சற்றுக் கவனியுங்கள்: நான் நேற்று இரவு இங்கிருந்து புறப்பட்டதும் நேரே என் மோட்டார் சைகிளில் பூவிருந்தவல்லிக்குச் சென்று, மோகனசுந்தர முதலியாருடைய மோட்டா ரோட்டி கூறியபடி துபாஷ் தெருவிலுள்ள மாளிகையைக் கண்டுபிடித்து, அதற்குச் சொந்தக்காரரிடம் பேசினேன். அப்படிப் பேசியதில் சில உண்மைகள் தெரிய வந்தன. அம்மாளிகை மேன் மாடியில் இரங்கூனிலிருந்து வந்து இறங்கி இருந்த இருவர் மூன்று நாள் இரவுதான் அம்மாளிகையின் சொந்தக்காரருக்குச் சேர வேண்டிய வாடகையைக் கொடுத்து விட்டுத் தாம் ஏதோ அவசர நிமித்தமாய் வெளியூருக்குப் போக வேண்டியிருப்பதாகக் கூறிப் போய் விட்டதாகத் தெரிகிறது. மோகனசுந்தர முதலியாரவர்கள் அவ் விருவரிடமும் அன்று பேசிக் கொண்டிருந்ததையும் அம் மாளிகைக்குரியவர் பார்த்ததாகக் கூறுகிறார். அவர் கூறும் அடையாளத்தால், அவர்

மோகன சுந்தர முதலியாரை நன்ருக அறிந்து கொண்டா ரென்று எண்ணுகிறேன்,' என்ருர்.

குணசிலர் புன்சிரிப்புடன் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையைப் பார்த்து, 'உம்......சரி; அப்புறம் என்ன? இதனுல் நீங்கள் என்ன முடிவு கூறுகிறீர்கள்?' என்று கேட்டார்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை குண சிலரைப் பார்த்து,' நண்பரே, மோகனசுந்தர முதலி யாருக்கும் அவ் விருவருக்கும் எவ்விதத்திலோ சம்பந்தம் இருந்திருக்க வேண்டும். ஒரு வேளை அவர்களுக்குப் பண விஷயத்தில் சம்பந்தம் இருந்திருக்கலாம். இரங்கூனி லிருந்து வந்திருந்தவர்கள் வியாபாரிகள் என்று கருதப்படுகிருர்கள். அவர்கள் இருவரும் அவருடன் அன்று ஏதோ பண விஷய மாய்ப் பேசிக்கொண் டிருந்ததாகவும், பிறகு மோகனசுந்தர முதலியா ரவர்கள், 'இப்பொழுது கொடுக்க என்னுல் இயலாது,' என்று கூறி, வெளியே வந்து விட்டதாகவும், அதன் பிறகு அவ் விருவரும் அவரைப் பின்பற்றி வந்து, 'ஐயா, உம்மைப்போல் பணக்காரர் இச்சென்னையில் பலர் இருக்கிருர்கள். ஆனுல், அவர்களுள் பெரும்பாலார் சமயத் துக்கு உதவாதவர்கள். திரளான பணத்தைக் குவித்து வைத்துக்கொண்டு தாமும் அனுபவியாமல், பிறருக்கும் கொடுத்துச் சமயத்துக்கு உதவாமல், வீணில் பணங் காத்த பூதம்போல் உலகத்தில் இருந்துவிட்டுப் பின்பு போன விடம் தெரியாமற்போய் விடுகிருர்கள். இவர்கள் உலகத்தில் இருப்பதனுல் என்ன பயன்? எங்களுக்குப் பணம் கிடைக் காமற் போய்விடும் என்று மாத்திரம் நீங்கள் எண்ண வேண்டா. எவ்வழியி லாகிலும் நாங்கள் எங்களுக்கு வேண்டிய பொருளைத் தேடிக்கொள்ளக் கூடும். உங்கள் பொருளை நீங்களே வைத்துக்கொண்டு வாழுங்கள். எத்தனை

நாளைக்கு வாழ்கிறீர்கள் பார்ப்போம்,' என்று கூறி விட்டு, மோகன சுந்தர முதலியார் தம்முடைய வண்டியில் ஏறிச் சென்றதும் இருவரும் ஏதோ இரகசியமாய்ப் பேசிக் கொண்டே உள்ளே சென்றதாகவும் அம்மாளிகைக் குரியவர் சொல்லுகிறார். பிறகு அன்று இரவே—அதாவது மோகன சுந்தர முதலியார் கொலை செய்யப்பட்ட இரவே—அவர்கள் அம்மாளிகையை விட்டுப் போய்விட்டார்களாம். ஆகையினால், அவர்கள் மீது இவ்விஷயத்தில் சந்தேகப்பட வேண்டியிருக்கிறது,' என்று கூறினார்.

குணசீலர் வாய் விட்டுச் சிரித்து, போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையைப் பார்த்து, 'நண்பரே, இதனால் நீங்கள் அவ்விருவருள் ஒருவர் மோகனசுந்தர முதலியாரைக் கொன்றிருக்க வேண்டும் என்று கருதுகிறீர்களா?' என்றார்.

"'அப்படியிருந்தாலும் இருக்கலாமோ, அல்லவோ?' என்பதுதான் என் கருத்து," என்று கூறினார் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை.

குணசீலர் அதிக பொறுமையுடன் அவரைப் பார்த்து, 'நண்பரே, நீங்கள் கூறுவதுபோல் இருக்கவும் கூடும். இப்படிப்பட்ட விஷயங்கள் எத்தனையோ நடந்திருப்பதைப் பற்றிப் போலீஸில் குறிப்பிடப்பட்டிருப்பது உங்களுக்குந் தெரியும்; எனக்குந் தெரியும். ஆனால், இவ் விஷயத்தில் 'இஃது அப்படித்தான் இருக்கும்,' என்று கருத இடமில்லை. நீர் ஏன் இதை இப்படிக் கொள்கிறீர்? அவர்கள் பேசிக் கொண்டிருந்தது கடன் வாங்குவதற்காக என்றும், அப்படி அவர்கள் கருத்தின்படி மோகன சுந்தர முதலியாரவர்கள் கடன் கொடுக்க இசையாததால், மனவெறுப்படைந்து, அவர்கள் அவ்வாறு அவரை நிந்தித்துக் கூறினார்கள் என்றும் ஏன் கொள்ளக் கூடாது? இது பணிதர்களுக்குள் சர்வ

சாதாரணமான வழக்கந்தானே? பிறர் ஒன்றைத் தமக்குக் கொடுத்தால் சந்தோஷமும், இல்லை யென்று சொல்லி விட்டால் வருத்தமும் உண்டாவது மனிதர்களுக்குள்ள இயல்பு அல்லவா? இதையே காரணமாக வைத்துக்கொண்டு நாம் எப்படி ஒரு புதுமையான கதையைக் கட்டி விடுவது? சந்தேக முள்ளவர்களுக்கு எல்லாம் சந்தேகமாகத்தான் தோன்றும். அந்தச் சந்தேகத்தை எந்த எந்த இடத்தில் செலுத்த வேண்டுமோ, அந்த அந்த இடத்தில் செலுத்தி, உண்மை யறிவதுதான் அறிவினல் ஒருவனுக்கு உண்டாகும் பயன்,' என்று கூறினர்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளைக்கு அவர் கூறியது பிடிக்கவேயில்லை. ஆகையினல், அவர் குணசீலரைப் பார்த்து, 'சரி; அது கிடக்கட்டும். அவர்கள் இருவரும்—இரங்கூன் வியாபாரிகளிருவரும்—திடீரென்று அன்று இரவே புறப்பட்டு எங்கேயோ போய் விட்டதற்குக் காரணம் என்னவா யிருக்கலாம் என்று தாங்கள் எண்ணுகிறீர்கள்?' என்று கேட்டார்.

அதற்குக் குணசீலர் அவரை நோக்கி, ' நண்பரே, முதலில் அவர்கள் வியாபாரிகளென்றும், இரங்கூனிலிருந்து இங்கு வந்தார்க ளென்றும் நீங்கள் கூறினீர்க ளல்லவா? அவர்கள் வியாபாரிக ளாகையால், வந்த இடத்தில் ஏதோ சாமான் வாங்கிச் செல்லத் தம்மிடம் பணமில்லாமலோ, அல்லது வேறு வியாபாரிகளுக்குத் தாம் அவர்களிட மிருந்து வாங்கிக் கொண்ட சரக்குகளுக்காகக் குறித்த காலத்தில் பணங் கொடுக்கத் தவறியதனலோ அவர்களுக்குக் கஷ்டம் நேர்ந்திருக்கக் கூடும். அதனல், அவர்கள் சென்னையிலுள்ள பணக்காரர் யாரிடமாவது அப் பொருளைக் கடனுக வாங்கிக் கொண்டு, பின்பு தாம் குறிக்கும் தவணைக்குள் கொடுத்து விடலாம் என்று கருதியதனல்,

மோகனசுந்தர முதலியார் பெரிய பணக்காரர் என்று யாராகிலும் சொல்லக் கேட்டு, அவருக்குக் கடிதம் எழுதி வரவழைத்துப் பொருள் கேட்டிருக்கக் கூடும். அவர் அவர்கள் விரும்பிய அளவு தம்மிடத்தில் கொடுப்பதற்குப் பொருளில்லாததை அறிந்து, தம்முடைய பெருமையை விட்டு விடாமல், தம்மால் இப்பொழுது கொடுக்க முடியாது என்று கூறி யிருக்கலாம். அந்த உண்மையை உணராத அவர்கள் அவர் பெரிய பணக்காரராக இருந்தும் தாம் விரும்பிய தொகையைக் கடனாகக் கொடுத்து உதவி செய்ய முன் வரவில்லையே என்று கோபங் கொண்டு, அவரை அவ்வாறு நிந்தித்திருக்கக் கூடும். பிறகு தமக்குச் சென்னையில் ஒரு பணக்காரரும் நம்பகத்துடன் பணம் கடன் கொடுக்க மாட்டார்கள் என்று நினைத்தோ, அல்லது வேறு எதைக் கருதியோ அவர்கள் அன்று இரவே அம் மாளிகைக் குரியவரிடம் தாம் கொடுக்க வேண்டிய வாடகையைக் கொடுத்து விட்டு, வேறெவ்வூருக்கோ போய் இருக்கலாம். இல்லா விட்டால், ஒருவர், 'கடன் கொடுக்க மாட்டேன்,' என்று சொல்லியதற்காக வியாபாரிகள் அவ ரைக் கொலை செய்து விட்டு மாயமாய்ப் பறந்து போய்விடு வார்களா? இஃது என்ன விந்தை! அரச மரத்தைப் பிடித்த பேய் அதனடியிலிருந்த பிள்ளையாரையும் பிடித்துக்கொண்டது என்பார்களே, அப்படியல்லவோ இருக்கிறது! நண்பரே, நீங்கள் இப்படிக் கருதுவது எனக்குப் பொருத்தமானதாகத் தோன்ற வில்லை. அவர்கள்—இரங்கூன் வியாபாரிகள்— அப்படிப்பட்ட கொலையாளிகளாக இருந்தால், அம்மாளி கையின் சொந்தக்காரருக்குரிய வாடகையை ஏன் கொடுத் திருக்க வேண்டும்? ஒவ்வொரு விஷயத்திலும் நாம் இப்படிச் சந்தேகப் பட்டுக்கொண் டிருந்தால், உண்மை விளங்காது என்பது உண்மை. 'இப்படிப்பட்ட விஷயங்களில்

உத்தியோகஸ்தர்கள் அடிக்கடி குற்றவாளியை விட்டு விட்டு ஒரு பாவமும் அறியாதவர்களை யெல்லாம் துன்பத்திற்கு ஆளாக்கி விடுகிறார்கள்,' என்று பலருங் கூறுவதற்குச் சரியாக நாம் உண்மையை நாடிக் கண்டு பிடிப்பதை விட்டு விட்டுப் பொய்யைப் பின்பற்றிப் பலருக்குத் துன்பங் கொடுப்பதில் நம்முடைய பெருமைக்கு அழிவு வரும்,' என்று கூறினார்.

குணசீலர் கூறியதைக் கேட்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை ஒன்றுங் கூறாமல் வெகு நேரம் மௌனமாக இருந்தார். பிறகு அவர் குணசீலரைப் பார்த்து, 'நண்பரே, இன்னம் இவ் விஷயத்தில் அதிக ஆராய்ச்சி செய்யவேண்டி யிருக்கிறது. யாவும் போகப் போகத்தான் தெரியும். நான் போய் வருகிறேன். இன்னம் ஏதாகிலும் விஷயம் புலப்படுமானால் உமக்குத் தெரிவிக்கிறேன்,' என்று கூறி விடை பெற்று, வெளியே சென்றார்.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

---

### காதலின் கண்ணியம்

சென்ற அத்தியாயத்திற் கூறிய விஷயங்கள் நடந்து இரண்டு வாரங்கள் கழிந்தன. மூன்றாம் வாரமுந் தொடங்கியது. ஒரு நாள் குணசீலர் அவருடைய அறையில் உட்கார்ந்துகொண்டு, என்னவோ யோசனையில் ஆழ்ந்திருந்தார். அவர் யோசனை எதைப் பற்றியதாக இருக்கும்? ஆம்!.........ஆம்! அவர் அப்பொழுதும் மோகன சுந்தர முதலியார் அவர்களுடைய கொலையைப் பற்றியே யோசித்துக்கொண் டிருந்தார். போலீசார் கண்டு பிடிக்கும்

விநோத விஷயங்களைப் பற்றி, அவர் பலவாறு எண்ணினர். கடைசியில் அவற்றால் ஒரு விதப் பயனும் உண்டாகப் போவதில்லை என்பது அவருக்குத் தெளிவாகத் தெரிந்தது. எப்படியானாலும், இக் கொலை விஷயத்தில் உண்மைக் கொலையாளியைக் கண்டு பிடித்து விடவேண்டும் என்பதே அவருடைய தீர்மானம். போலீஸ் இன்ஸ்பெக்டர் துரை சிங்கம் பிள்ளை கூறிய விஷயத்திற்கும் இக்கொலைக்கும் ஒரு விதமான சம்பந்தமும் இல்லை என்பது அவருக்கு நன்றாகத் தெரியும். அவர் இனிமேல் தாம் இவ் விஷயத்தில் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி யோசித்துக் கடைசியில் மோகனசுந்தர முதலியாரவர்கள் மனைவி மதனசுந்தரிக்குத் தேகசுகம் உண்டாகும் வரையில் காத்திருந்து, பிறகு அவளுடன் பின்னும் சில விஷயம் பேசவேண்டும் என்னும் முடிவுக்கு வந்தார்.

உடனே மதனசுந்தரியின் தேக நிலையைப்பற்றி யறிய வேண்டும் என்னும் எண்ணம் அவருக்கு உண்டாயிற்று. ஆகையினால், அவர் தம்முடைய அறையின்சுவரில் அமைக்கப் பட்டிருந்த டெலிபோனிடம் சென்று, அதன் மூலமாய்க் கற்பக வனத்திலுள்ள காமகோட்டியம்மாளைக் கூப்பிட்டார். உடனே டெலிபோன் கம்பியின் மூலமாய்க் காமகோட்டி யம்மாள் குரல் அவருக்குக் கேட்டது. அவள் அப்பொழுது பேசிய குரல் சந்தோஷக் குரலாக இருந்ததால், குணசீலர் உடனே அவளுடைய தங்கை மதனசுந்தரிக்குத் தேகம் சுகமாய் விட்டது என்பதைத் தாமே தெரிந்து கொண்டார்.

காமகோட்டியம்மாள் டெலிபோன் மூலமாகக் குண சீலரை நோக்கி, 'ஐயா, நான் கூறும் விஷயம் உங்களுக்குச் சந்தோஷத்தையும் ஆச்சரித்தையும் உண்டு பண்ணும்: என்னுடைய தங்கை மதனசுந்தரிக்குத் தேகம் சுகமாய் விட்டது. அவள் ஒருவிதத் துன்பமும் இல்லாமல் சுகமாகவே

யிருக்கிறாள். அவள் இவ்வளவு சீக்கிரம் குணமடைந்து விட்டதைக் கண்டு, மருத்துவர்களும் அதிக சந்தோஷப் படுகிறார்கள். ஆனால், ஒரு விஷயம் மாத்திரம் அவள் மனத்தை வருத்திக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது: அவ் விஷயம் அவளுக்குத் தன் கணவர் இறந்துவிட்டதாலுண் டாகும் துன்பத்தைவிட அதிக துன்பத்தைக் கொடுப்ப தாகத் தோன்றுகிறது. அவள் இப்பொழுது உங்களைக் கண்டு பேச விரும்புகிறாள். மருத்துவர்களும் இப்பொழுது அவளுக்குள்ள தேக நிலைமைக்கு ஒன்றுங் குறைவில்லை என்றும், அவள் இப்பொழுதே உங்களுடன் பேச விரும்பும் விஷயத்தைப் பற்றிப் பேசித் தன்னுடைய மனக் கவலையை மாற்றிக் கொள்ளலா மென்றும் சொல்லுகிறார்கள். அவள் இன்றைக்கிருப்பதைப்போலவே நாளைக்கு இருப்பாளானால் உங்களை நேரிற் கண்டு, தான் பேச விரும்பும் விஷயத்தைப் பேசுவாள். நீங்கள் நாளைய சாயங்காலம் இங்கு வரமுடியுமா?' என்று கேட்டாள்.

ஆ! நாளைய சாயந்திரம்! நாளைய சாயங்காலம் இது வரையில் குணசீலருடைய மனத்தை வேறு வழியில் செல்ல விடாமல் வருத்திக்கொண் டிருந்த விஷயத்தின் உண்மை வெளியாய் விடும். ஆம்! ஆம்!! அவர் தம் முடைய மனத்திற் கொண்டுள்ள எண்ணமாகிய பூட்டைத் திறக்கத் தகுந்த சாவி மதன சுந்தரியினிடம் அகப்பட்டுக் கொண் டிருக்கிறது. கொலை நடந்த தினம் குணசீலர் அவளுடன் பேசி விட்டு, அவள் அறையிலிருந்து வெளி வந்து, மாடிப்படி யிறங்கும் போது அவள் தன்னுடைய அறைக்குள் அப்பொழுதுதான் வந்த தன் தமக்கையைப் பார்த்து, 'அக்கா! அக்கா!! அவருக்குத் தெரிந்து விட் டது; தெரிந்து விட்டது,' என்று கூறிய வார்த்தைகளை மாத்திரம் குணசீலர் இன்னம் மறந்துவிட வில்லை. அவ்

வார்த்தைகளைப்பற்றி அவர் பலமுறை நினைத்தபோதெல்லாம் அவைகள் அவருக்கு அப்பொழுதுதான் கேட்பவைபோலத் தோன்றின. குணசீலர் காமகோட்டியம்மாள் விருப்பத்தை யுணர்ந்து, அப்படியே அடுத்த நாள் சாயங்காலம் கற்பகவனத்திற்கு வருவதாகக் கூறி விட்டுத் தம்முடைய நாற்காலியில் வந்து உட்கார்ந்தார். அவருக்கு அப்பொழுது ஒருவிதச் சந்தோஷம் தோன்றியது. அவர் தமக்குள்ளே ஏதோ எண்ணமிட ஆரம்பித்தார். அதற்குள் யாரோ கதவைத் தட்டும் சத்தம் அவருக்குக் கேட்டது. உடனே அவர் எழுந்து, தம் அறையின் கதவைத் திறந்து, அங்குத் தம்முடைய வேலையாள் கோவிந்தன் நிற்பதைக் கண்டு, அவனை 'விஷயம் என்ன?' என்று வினவினர். கோவிந்தன் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரை சிங்கம் பிள்ளை வந்திருப்பதாகக் கூறினன். பின்பு குணசீலர் அவரைத் தன்னறைக்கு அழைத்து வரும்படி கட்டளையிட, அவ்வாறே அவன் கீழே சென்று, இன்ஸ்பெக்டர் துரை சிங்கம் பிள்ளையை மாடிக்கு அழைத்து வந்து, விட்டுச் சென்றான்.

குணசீலர் அவரைப் பார்த்து, 'நண்பரே, என்ன விசேஷம்? ஏதாகிலும் புதுமை புலப்பட்டதா?' என்று கேட்டார்.

இன்ஸ்பெக்டர்:—நண்பரே, என்ன புதுமை புலப்படப் போகிறது? இது வரையில் எத்தனையோ புதுமைகள் தோன்றித் தோன்றி மறைந்தன. ஒன்றினலும் பயனில்லை. இது வரையிலும் நான் எத்தனையோ கொலை வழக்குகளைப் பார்த்தேன்; இதைப்போல் உண்மையில் ஒரு சிறிதும் விளங்காத கொலையை இது வரையில் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை.

குணசீலர்:—ஆகையினால், இன்னம் நாம் விஷயத்தை முதலிலிருந்துதான் கவனிக்க வேண்டும்போலிருக்கிறதே!

இன்ஸ்பெக்டர்.—ஆம்! நான் அப்படித்தான் எண்ணுகிறேன். ஒருவேளை மோகனசுந்தர முதலியாரவர்கள் தற்கொலை செய்துகொண்டிருந்து, அதனால் குடும்பத்திற்கு உண்டாகும் இழிவை மறைத்து விடுவதற்காக யாரோ அவ்வீட்டிலுள்ளவர்களே முதலில் பிணத்தைக் கண்டவுடன் பார்ப்பவர்கள் வேறு யாரோ களவுசெய்ய வந்தவர்கள் இக்கொலையையும் செய்து விட்டுப் போய் விட்டிருக்கலாம் என்று எண்ணிக்கொள்ளும்படி அவ்வறையில் காணப்பட்ட பொய்த் தோற்றங்களையெல்லாம் செய்திருக்கலாம் என்று எண்ணுகிறேன். ஆனால், அப்படிச் செய்தவர் மாத்திரம் தெரிந்து விட்டால், அப்புறம் ஒரு விதமான கஷ்டமும் இராது. இப்பொழுதோ, ஏறக்குறையக் கொலை நடந்து இரண்டரை வாரத்திற்கு மேல் ஆகிறது.

குணசீலர்:—ஆனாலும் பாதகமில்லை. ஒவ்வொரு வழக்கில் உண்மை விளங்க வருஷக் கணக்காக வில்லையா? இப்பொழுது என்ன கெட்டுப்போய் விட்டது? போகப் போக உண்மை தானே விளங்கும். அது வரையில் பொறுத்துக்கொண் டிருங்கள்.

குணசீலர் இவ்வாறு கூறியதும் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை அவரைப் பார்த்து, 'நண்பரே, தாங்கள் இதைப்பற்றி நன்றாக யோசியுங்கள். நானும் எனக்குப் போகப் போக இதைப்பற்றி விளங்கும் விஷயங்களை யுமக்குத் தெரிவிக்கிறேன். நான் போய் வருகிறேன்,' என்று கூறிவிட்டு வெளியே சென்றார்.

குணசீலருக்குப் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை கூறிய விஷயங்களைப்பற்றி நினைக்க நினைக்கச்

சிரிப்புண்டாயிற்று. அவர் இரண்டொரு முறை தமக்குத் தாமே சிரித்துக் கொண்டார். பிறகு சிறிது நேரத்திற் கெல்லாம் அவருடைய வேலையாளாகிய கோவிந்தன் தன்னுடைய கையில் ஒரு சிறு துண்டுக் கடிதத்துடன் அவர் அறைக்குள் நுழைந்து, அக்கடிதத்தை அவரிடங் கொடுத்தான். குணசீலர் அதை வாங்கிப் படித்துப் பார்த்தார். அதில் கோபாலசாமி முதலியார் B.A., துபாஷ், பெங்களூர் கண்டோன்மெண்டு என்று அச்சிடப்பட்டிருந்தது. உடனே அவர் கோவிந்தனைப் பார்த்து, 'கோவிந்தா, இக் கடிதம் உனக்கு எப்படிக் கிடைத்தது?' என்று கேட்டார். கோவிந்தன், 'எஜமானனே, யாரோ ஒருவர் இப்பொழுது தான் வந்து உங்களைப்பற்றி என்னை விசாரித்தார். நான் நீங்கள் இங்கு இருப்பதாகக் கூறினேன். உடனே அவர் இக் கடிதத்தை என்னிடங் கொடுத்து, உங்களிடங் கொடுக்கும்படி கூறினார்,' என்று பதில் கூறினான்.

பிறகு குணசீலர் அவரைத் தம்மிடம் அழைத்துக் கொண்டு வரும்படி கோவிந்தனுக்குக் கூறக் கோவிந்தன் அவர் கட்டளைப்படியே கீழே சென்று, அங்குக் காத்துக் கொண்டிருந்த வாலிபரை யழைத்துவந்து குணசீலர் அறைக்குள் விட்டுச் சென்றான். குணசீலர் அவரைக் கண்டதும் தம்முடைய நாற்காலியைவிட் டெழுந்து, சிரித்த முகத்துடன் அங்கு வந்த வாலிபரைப் பார்த்து, 'வாருங்கள்; உட்காருங்கள்,' என்று கூறிக்கொண்டே, ஒரு நாற்காலியைத் தாம் உட்கார்ந்திருந்த நாற்காலிக் கருகில் இழுத்து, அதில் அவரை அமரச்செய்து, தாமும் தம்முடைய நாற்காலியில் உட்கார்ந்து, 'முதலியா ரவர்கள் நேரே பெங்களூரி லிருந்துதான் வருகின்றீர்கள்போ லிருக்கிறது! என்ன விசேஷமோ?' என்று புன்சிரிப்புடன் கேட்டார்.

கோபாலசாமி முதலியா ரவர்கள் அவரை நோக்கி,

'நண்பாவர்களைப் பார்க்கவேண்டு மென்றே நான் இவ்விடம் வந்தேன். நான் நேற்று மாலைதான் சென்னைக்கு வந்தேன். நான் தங்களிடம் பேச விரும்பிவந்த விஷயத்தைத் தொடங் குவதற்கு முன் என் வரலாற்றைப்பற்றி தங்களுக்குக் கூறி விடுகிறேன். நான் இப்பொழுது இருப்பது பெங்களூர். அங்குக் கப்பல் துபாஷாக இருக்கிறேன். நான் பெங்க ளூருக்கு உத்தியோகத்தின் பொருட்டுச் செல்லுவதற்கு முன் இச் சென்னையிலுள்ள கிறிஸ்தவ கலாசாலையில்தான் வாசித்துக்கொண் டிருந்தேன். அப்பொழுது நான் அடிக் கடி என்னுடைய தந்தையாருடன் பிறந்தவராகிய என் அத்தை வீட்டுக்குச் செல்லுவது வழக்கம். என்னுடைய அத்தை அவர்களுக்கு இரண்டு பெண்கள் இருந்தார்கள். அவர்களுள் பெரிய பெண்ணின் பெயர் காமகோட்டி என் பது; சிறியவள் பெயர் மதனசுந்தரி என்பது. அவர்களிரு வருள்......' என்று கூறி மேலே ஏதோ கூறத் தொடங்கி ஞர்.

குணசீலர் காமகோட்டி, மதனசுந்தரி யென்னும் இரண்டு பெயர்களையும் கேட்டவுடன் அதிக ஆச்சரியத் துடன் கோபாலசாமி முதலியார் பேசுவதை இடையில் மறுத்து, 'ஓ! நீங்கள் இப்பொழுது கூறியவர்கள் பூவிருந்த வல்லிச் சாலையிலுள்ள கற்பகவனத்தில் வசிக்கும் பெண்மணி களா?' என்று கேட்டார்.

கோபாலசாமி முதலியார், 'ஆம்! ஆம்!! அவர்களைப் பற்றித்தான் நான் இப்பொழுது சொல்லுகிறேன். அவ் விரண்டு பெண்களுள் மூத்தவளாகிய காமகோட்டியின் சிறந்த குணங்களும், அழகும், கல்வியும் என்னை அவள் மீது காதல் கொள்ளச் செய்தன. அன்பரே, நான் அவ ளைக் காதலித்தும் கூட அவள் என் காதல் குறிப்பை யறி யாமல், எப்பொழுதும்போலவே இருந்துவந்தாள். இதற்

கிடையில் அவளுக்கு இளையவளாகிய மதனசுந்தரியை மேற்கூறிய கிறிஸ்தவ கலாசாலையிலேயே என்னோடு ஒரு வகுப்பில் வாசித்துவந்த மோகனசுந்தர முதலியாருக்கு அவளுடைய தாய் தந்தையர் செல்வத்தைக் கருதியோ, வேறு எதனாலோ, விவாகம் செய்து வைத்தார்கள். அம் மட்டில் பெரிய பெண்ணாகிய காமகோட்டிக்குக் கலியாண மாகாம லிருந்ததைப்பற்றி எனக்குச் சந்தோஷமாகவே இருந்தது. பிறகு என்னுடைய தாய் தந்தையர் எனக்குக் கலியாணம் செய்துவைக்க முயற்சி செய்து வந்தார்கள். நானோ, அவர்கள் தேடிய பெண்களுள் ஒருத்தியையும் மணக்க உடன்படவில்லை; என்னுடைய மனக்கருத்தின் உண்மையை யும் அவர்களுக்குத் தெரிவிக்கவில்லை. நான் எனக்குப் பெரிய உத்தியோகம் கிடைத்த பிறகே கலியாணம் செய்து கொள் ளப் போவதாக அவர்களிடம் கூறினேன். நான் உண்மை யில் என் அத்தை மகளாகிய காமகோட்டியைக் காதலித் தது அவர்களுக்குத் தெரியாது. என்னுடைய அத்தை மாத்திரம் அதை அறிந்திருக்கலாம் என்று எண்ணுகிறேன். பிறகு இப்படிச் சில நாட்கள் கழிந்ததும், நான் ஒருநாள் காமகோட்டி அவளுடைய வீட்டின் புறக்கடையி லுள்ள தோட்டத்தில் உலாவிக்கொண் டிருக்கும் பொழுது அவ ளிடம் சென்று, எந்த விஷயத்தைப்பற்றியோ அவளுடன் பேசத் தொடங்கி, இடையில் விவாகத்தைக் கொண்டுவந்து நுழைத்து, மெள்ள மெள்ள அவளுக்கு என்னுடைய கருத் தைப்பற்றித் தெரிவித்தேன். காமகோட்டியோ, தான் கலி யாணமே செய்து கொள்ளப் போவதில்லை என்றும், அதைப் பற்றித் தன்னிடத்தில் பேசவேண்டியதில்லை யென்றும் கூறி னாள். அவளை அவ்வாறு கூறச் செய்தது அவளுடைய நாணமே ஒழிய வேறல்ல என்பது எனக்கு நன்றாய்த் தெரி யும். ஆயினும், நான் அவளுடைய மனத்தைச் சோதிக்க

எண்ணி, அவளை நோக்கி, அவள் கலியாணம்செய்துகொள்ளா விட்டால் நானும் என் ஆயுட்காலத்தைத் தனியாக இருந்தே கழிக்கப் போவதாகக் கூறினேன். அதைக் கேட்டு, அவள் புன்சிரிப்புச் சிரித்து, என்னை நோக்கி, 'என் அத்தான், அப் படிச் சொல்லுகிறீர்கள்? நான் கலியாணம்செய்துகொள்ளா விட்டால், உமக்கென்ன நஷ்டம்? நீங்கள் நல்லவளாகவும் அழகுள்ளவளாகவும் படித்தவளாகவும் பார்த்து ஒருத்தியை யணந்துகொண்டு, உங்களுடைய காலத்தை இன்பமாகக் கழிக்கலாமே? மற்றொரு முறை அப்படிச் சொல்லாதீர்கள். நீங்கள் உங்களுக்குப் பேசும் பெண்களை யெல்லாம், 'நான் இப்பொழுது கலியாணம் செய்துகொள்ளப் போவதில்லை,' என்று ஒரே பிடிவாதமாகக் கூறி, விட்டு விடுவதாக அம்மா எனக்கு இரண்டொரு முறை சொல்ல, நான் கேட்டேன். ஆனால், இதற்குக் காரணம் இன்னதென்பது எனக்கு இது வரையிலும் தெரியாமலே இருந்தது. இப்பொழுது உண் மையை அறிந்தேன். இலவு காத்த கிளியைப்போல என் னைக் காதலித்துப் பயனடையாமல் போவதில் எனக்கு விருப்பமில்லை. பேசாமல் நான் கூறியபடி நடந்துகொள்ளு வதே நன்மை,' என்று கூறிக்கொண்டே இருக்கும்பொழுது என்னுடைய அத்தை அவளைக் கூப்பிட்டார். உடனே அவள் என்னைவிட்டுப் பிரிந்து சென்றாள். நானும் பிறகு உள்ளே சென்று என்னுடைய அத்தையைக் கண்டு சிறிது நேரம் பேசிக்கொண் டிருந்துவிட்டு, என்னுடைய வீட்டுக் குச் சென்றேன்.

'நண்பரே, பின்பு சில நாட்களுக் கெல்லாம் அவ ளுடைய தாயும் தந்தையும் திடீரென்று கொள்ளை நோய் கண்டு இறந்தார்கள். அப்பொழுது நானும் என் தந்தை யாரும் அவள் வீட்டுக்குச் சென்று, அவர்களுடைய தகன கிரியைக்கு இருந்துவிட்டு, என்னுடைய தாய் தந்தையர்

கொள்ளைநோயால் இறந்தவர்களுடைய வீட்டில் இராத் தங்குதல் கூடாதென்று கூறியதால், அன்று சாயந்திரமே எங்கள் வீட்டுக்குத் திரும்பினேம். அப்பொழுது காமகோட்டி என்னைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் விட்டாள். நான் அதைக் கவனியாதவன்போல என் தாய் தந்தையருடன் வீடுவந்து சேர்ந்ததும், அவளுக்கு அன்பு நிறைந்த ஒரு கடிதம் எழுதி, அதில் அவளுக்குப் பலவிதத்திலும் தேறுதல் கூறி, அக் கடிதத்தை வேலையாள் ஒருவனிடங் கொடுத்து, அவளிடங் கொடுத்துவிட்டு வரும்படி கூறினேன். காமகோட்டி என் வேலைக்காரனிடமிருந்து அக் கடிதத்தைப் பெற்று, அதில் நான் எழுதியிருந்த விஷயத்தை அறிந்துகொண்டு, எனக்குப் பதில் கடிதமொன்று எழுதி, அவ்வேலைக்காரனிடம் கொடுத்தனுப்பினுள். அக் கடிதத்தில் அவள் எழுதியிருந்த விஷயத்தையும் அஃது எழுதப்பட்டிருந்த மாதிரியையும் நோக்கி, அவள் என்னைக் காதலிக்கிறுள் என்பதை நான் நன்ருக உணர்ந்தேன். பிறகு நான் இரண்டு மூன்று நாள்வரையில் தொடர்ச்சியாக அவளுடைய வீட்டுக்குச் சென்று, அவளுக்குப் பல தேறுதல்களைக் கூறி வந்தேன்.

'இப்படி இருக்கையில் தாய்தந்தை யற்றுத் தனியளாய்த் தயங்கி நிற்கும் காமகோட்டியைப் பற்றிய சிந்தனை என் தந்தையார் மனத்தைப்பற்றி வருத்தத் தொடங்கியது. அவர் காமகோட்டியை எனக்கு மணஞ்செய்து வைத்துவிட வேண்டுமென்று உறுதி செய்துகொண்டார்; அவ்வெண்ணத்தை என் தாயாருக்கும் தெரிவித்தார். பிறகு என் தாயார் ஒரு நாள் என்னிடம் இவ் விஷயத்தைப்பற்றிக் கூறி, இதற்கு நான் தடை சொல்லவே கூடா தென்றும் சொன்னுர். எனக்கு இவ் விஷயத்தைக் கேட்டதும் அதிக ஆநந்தம் உண்டாய்விட்டது. கும்பிடப்போன தெய்வம்

குறுக்கே வந்ததுபோலாயிற்று. ஆனால், நான் என் விருப்பத்தை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல், இவ் விஷயத்தில் விருப்பமில்லாதவனைப்போலவும், இருந்தாலும் தாய்தந்தையர் சொல்லைத் தட்டி நடக்கலாகாது என்பதை நோக்கி உடன்படுபவனைப் போலவும் நடித்து, ஒருவாறு ஒத்துக்கொள்ளுபவனைப்போல ஒத்துக்கொண்டேன். உடனே என் தாயாருக்கு அளவு கடந்த சந்தோஷம் உண்டாய்விட்டது. என் தாயார் இவ் விஷயத்தை என் தந்தையாரிடம் அறிவித்துக் கலியாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய எத்தனித்து, நாள் சரியாக இல்லாததால், கலியாணத்தைத் தள்ளி வைத்துக்கொண்டார். இதற்குக் காரணம் என்னுடைய அதிர்ஷ்ட ஈனமே என்று எண்ணுகிறேன். ஏனென்றால், காமகோட்டிக்கு நேர்ந்த எதிர்பாராத துன்பத்தைப்போலவே எனக்கு நேர்ந்தது. என்னுடைய தாய்தந்தையர்—என்னைப் பெற்றெடுத்து வளர்த்துக் கல்வி கற்பித்துக் கண்ணியப்படுத்திய என்னுடைய தாய்தந்தையர்-காமகோட்டியின் தாய்தந்தையர்களைப் போலவே கொள்ளை நோயினால் திடீரென்று இறந்துவிட்டனர். பிறகு இன்னது செய்வது என்றே எனக்குத் தோன்றவில்லை. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணிச் சோர்ந்தேன். காமகோட்டியைப் பற்றிய எண்ணந்தான் என்னைப் பெரிய துன்பத்திற்குள்ளாக்கியது. இதையறிந்த காமகோட்டி பின்பு சில நாட்களுக் கெல்லாம் என்னைக் காதலித்திருந்தாலுங் கூடத் தன்னை அப்பொழுது ஆதரிப்பார் ஒருவருமில்லாததைக் கண்டு வருந்தினாள். அதனால், அவளுடைய தங்கை மதனசுந்தரி அவளைத் தன்னுடைய இருப்பிடத்திற் கழைத்து, ஆதரித்து வருகிறாள்.

'அதன் பிறகு நான் ஓர் உத்தியோகத்தை மேற்கொண்டு, பெங்களூருக்குச் சென்றேன். அங்குச் சென்ற

தும், என் நல்ல காலம், உத்தியோகம் வலுத்துச் சீர்ப்பட்டது. அவ்வுத்தியோகத்திலமர்ந்த ஒரு வருஷத்திற்குள்ளாகத் துபாஷ் வேலை எனக்குக் கிடைத்துவிட்டது. இப்பொழுது மாதம் ஒன்றுக்குச் சற்றேறக் குறைய ஆயிர ரூபாய் வருமானம் இருக்கிறது. காமகோட்டியை மணந்து கொள்ள வேண்டுமென்னும் விருப்பம் எனக்கு நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வருகிறது. இதற்கிடையில் நான் அவளுக்குப் பல கடிதங்கள் எழுதியிருக்கிறேன். அவளும் அவற்றிற்குப் பதில் எழுதி யிருக்கிருள். பட்ட காலிலே படும்; கெட்ட குடியே கெடும் என்னும் பழமொழிக் கிணங்க அவளுக்கு ஆதரவாக இருந்த இடத்திலும் இப்பொழுது துன்பம் ஏற்பட்டுவிட்டது. நண்பரே, நான் சில நாட்களுக்கு முன் சமாசாரப் பத்திரிகை யொன்றை வாசித்துக் கொண்டிருந்தபொழுது அதில் கற்பகவனத்தில் வாழ்ந்து வந்த மோகனசுந்தர முதலியார் அவர்கள் இரவில் திடீரென்று அவருடைய அறையிலேயே கொலை செய்யப் பட்டுக் கிடந்ததாகவும், பிறகு அக்கொலை செய்தவரைக் கண்டு பிடிப்பதற்காகப் போலீசார்களும், துப்பறிவதில் கீர்த்திபெற்று விளங்கும் தாங்களும் முயற்சிசெய்து வருவதாகவும், எழுதப்பட்டிருந்ததைக் கண்டேன். உடனே எனக்கு அதிக துக்க முண்டாய்விட்டது. எனக்குக் காமகோட்டியின் மீதிருந்த காதல் அத்துன்பத்தைப் பெருக்குவதற்குத் தூண்டுகோ லாய்விட்டது. அதைக் கண்ட பிறகு மற்ெருரு காரியத்திலும் என் மனம் செல்லவே இல்லை. 'இவ் விஷயம் உண்மையாக இருக்குமானுல், காமகோட்டி எனக்கு ஏன் இதைப்பற்றி எழுதவில்லை?' என்று நான் எண்ணினேன். பிறகு இக் கொடிய கொலைச் சமாசாரத்தைத் தெரிவித்து, என்னையும் வருத்தத்திற்கு ஆளாக்க அவள் விரும்பவில்லைபோ லிருக்கிறது என்று எண்ணினேன்.

ஆனாலும், உடனே சென்னைக்கு வந்து, அவனைக் கண்டு, விஷயம் அறியவேண்டும் என்னும் எண்ணம் ஒன்றே என் மனத்திற் குடிகொண்டது. இந்தப் பாழும் உத்தியோகங் களி லிருப்பவர்களுக்குத் திடீரென்று எங்காகிலும் போக வேண்டுமென்று கருதினால் முடிவதில்லை. ஆகையால், நான் என் காரியங்களை யெல்லாம் இரண்டொரு நாட்களில் முடித்துக்கொண்டு, நேற்று இரவு வண்டி யேறி, இன்று காலையில்தான் இங்கு வந்தேன். ஸ்டேஷனுக்கு வந்ததும் ஒரு வண்டி பேசிக்கொண்டு நேரே பூவிருந்தவல்லிச் சாலையி லுள்ள கற்பகவனத்திற்குச் சென்று, காமகோட்டியைக் கண்டேன். அவள், 'முதலில் குளித்துவிட்டுச் சாப்பிட் டான பிறகு மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொள்ள லாம்,' என்று கூறி, வேலையாளிடம் வெந்நீர் தயாரிக்கச் சொன்னாள். உடனே அவ் வேலையாள் வெந்நீர் தயாரித் துக் கொண்டுவந்து குளிக்கும் அறையில் வைத்துவிட்டு, என்னைக் குளிப்பதற்கு அழைத்தான். உடனே நான் சென்று குளித்துவிட்டு வருவதற்குள் சாப்பாடு தயாராய் விட்டது. ஆகையினால், நான் சாப்பிட்டுவிட்டு மேல் மாடிக் குச் சென்று, மதனசுந்தரியைக் கண்டு, சில வார்த்தைகள் பேசினேன். அவள் என்னைக் கண்டதும் அழத்தொடங் கிப் பின்பு ஒருவாறு மனந்தேறித் தான் சில நாட்களாக அதிக நோயால் வருந்தியதாகவும், இப்பொழுதுதான் உடம்பு பழைய நிலைமைக்கு வருகிறது என்றும் கூறினாள். பிறகு நான் அவளுக்குத் தேறுதல் கூறிவிட்டுக் காமகோட் டியை நோக்கி, நடந்த விஷயத்தைக் கூறும்படி கேட்டேன். அவள் ஆதியோடந்தமாக விஷயத்தைக் கூறினாள். நண்பரே, தாங்கள் இவ் விஷயத்தில் துப்பு அறிய ஏற்பட் டது எங்களுடைய நற்காலமே என்று கூறவேண்டும். நான் தங்களுடைய தயாள குணத்தைப்பற்றியும், துப்பறி

யும் திறமையைப் பற்றியும் பல முறை கேள்விப்பட்டிருக்கிறேன். அவள் இன்று நான் வருவதற்குச் சற்று முன்பாக உங்களுடன் டெலிபோன் மூலமாகப் பேசியதாகவும்; நீங்கள் நாளைய சாயங்காலம் அவ்விடத்திற்கு வந்து மதன சுந்தரியுடன் சில விஷயங்கள் பேச விரும்புவதாகக் கூறிய தாகவும் சொன்னுள். தவிர, நான் இங்கு வந்து உம்மைக் கண்டால், நீங்கள் கண்டறிந்துள்ள விஷயங்களை அறியக் கூடும் என்று அவள் சொல்லியதால், நான் உடனே புறப்பட்டு, இங்கு வந்தேன். இக்கொலை வழக்கின் இரகசியத்தை நீங்கள் வெளிப்படுத்த வேண்டுமென்று நாங்கள் எவ்வளவு ஆவலுடன் எதிர்ப் பார்க்கிறேம் என்பதை நான் உங்களுக்குச் சொல்லவேண்டுவதே யில்லை. அப்பெண்கள் இருவரும் அதிக துன்பத்திஞல் மனம் மருண்டு இருக்கிருர்கள். அவர்களால் இவ்விஷயத்தில் பொறுத்துக்கொண்டிருக்க முடியவில்லை,' என்று ஆதியோடந்தமாகக் கூறி முடித்தார்.

அதைக் கேட்ட குணசிலர் கோபாலசாமி முதலியாரை நோக்கி, 'நண்பரே, அது பெண்களுக்குள்ள இயற்கை தான். கூடுமானவரையில் முயற்சி செய்துகொண்டுதான் இருக்கிருேம், இதை நீங்கள் காமகோட்டியம்மாளிடம் சொல்லுங்கள். ஆனல், எதைப்பற்றியும் இப்பொழுது நிச்சயமாகக் கூற என்ஞல் முடியாது. கூடிய சீக்கிரத்தில் நான் முடிவான விஷயத்தை அந்த அம்மாளுக்குத் தெரிவிக்கிறேன்,' என்று கூறிஞர்.

'நீங்கள் இவ்வாறு கூறுவதில் எனக்கு அதிக சந்தோஷமே,' என்ருர் கோபாலசாமி முதலியார்.

பிறகு குணசிலர், அவரைப்பார்த்து, 'நண்பரே, நீங்கள் வருவதற்குச் சற்று முன்பாகத்தான் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை அவர்கள் இங்கு வந்திருந்

தார். அவருக்கு இவ் விஷயத்தில் அலுப்பு ஏற்பட்டு விட்டது. இக் கொலையைப்பற்றிய உண்மையான விஷயத்தைக் கண்டுபிடிப்பது ஒருபோதும் முடியாதுபோலிருக்கிறது என்றும் அவர் சொல்ல ஆரம்பித்துவிட்டார்,' என்றார்.

துபாஷ் கோபாலசாமி முதலியார், 'ஆம், நண்பரே, அவர் கூறுவதுபோல் முடிந்தாலும் முடியலாமல்லவோ?' என்று கேட்டார்.

குணசீலர்:—அன்பரே, முடியாத விஷயங்கூட இவ்வுலகத்திலிருக்கின்றதோ? எல்லாம் முடியும். நான் இதுவரையில் தலையிட்டுத் தொடங்கிய வழக்குகளில் ஒன்றாகிலும் முடிவடையாமற் போனதே இல்லை. இதைப்பற்றி நான் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறேன் என்று நீங்கள் எண்ண வேண்டுவதில்லை. நான் உண்மையைத்தான் உங்களுக்குக் கூறுகிறேன். ஆகையினால், இவ் வழக்கில் மாத்திரம் உண்மை விளங்காமற் போய்விடும் என்று எண்ணுவதற்கு இடமில்லை. போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையைப்போல எனக்கு நம்பிக்கையற்றுப் போகவில்லை. இன்னம் எனக்கு இவ் விஷயத்தில் உண்மை வெளியாகும் என்னும் பூரண நம்பிக்கை இருக்கிறது.

கோபாலசாமி முதலியார்:—அப்படியானால் இக்காரியத்தை மேலே தொடங்கி நடத்துவதற்குப் போதிய சாக்ஷி ஏதோ ஒன்றைத் தாங்கள் கண்டு பிடித்திருக்கிறீர்கள் என்றே எண்ணுகிறேன்.

குணசீலர்:—ஆம்; எனக்குச் சாக்ஷி இருக்கிறது. தவிர, பல ஆதாரங்களும் இருக்கின்றன. ஆனால், இன்னம் உண்மையை அறியத் தகுந்த உறுதியான கருவியொன்றும் எனக்குப் புலப்படவில்லை. இக் கொலையின்

மர்மம் இன்னம் என் கருத்துக்கெட்டாத தாகவே யிருக்கிறது.

கோபாலசாமி முதலியார்:—இது பயனற்ற விஷயமாகவே தோன்றுகிறது. உண்மைக் கருத்துப் புலப்படுவது அருமையாகத்தா னிருக்கிறது. காமகோட்டி எனக்குக் கூறியதிலிருந்து அன்று கொலே நடந்த பிறகு யாரோ தம்முடைய பயங் கொள்ளித் தனத்தால், அதை மறைக்கக் கருதிக் குழந்தைகளுக்கும் புலப்படும் படியான காரியங்களைச் செய்து இருக்கிறார்கள் என்பது தெரிகிறது. பார்ப்பவர்கள் அது யாரோ திருடவந்த ஒருவனுடைய செய்கை யென்று எண்ணிக் கொள்ளட்டும் என்பது அவர்களுடைய கருத்துப்போ லிருக்கிறது. இவ் விஷயத்தில் எனக்குத் தலையாவது, வாலாவது விளங்கவேயில்லை.

குணசீலர்:—ஒருவேளை நீங்கள் துப்பறியும் வகையில் விஷயத்தைக் கவனிக்காமலிருக்கலாம் என்று நான் எண்ணுகிறேன். அவ்வகையில் ஆராய்ந்து பார்த்தால், ஒருவாறு விஷயம் புலப்படக் கூடும்.

கோபாலசாமி முதலியார்:—மோகன சுந்தர முதலியார் கொலே செய்யப்பட்ட அவ் வறையின் தோற்றங்களை மாற்றியவர் துணிகரச் செய்கையையுடையவர்களே என்பதில் சந்தேகமே யில்லை. ஆனால், அவர்கள் தாங்கள் செய்யும் காரியத்தை யாராகிலும் வந்து பார்த்துவிடப் போகிறார்களென்று அப்படிப் பயத்துடன் காரியத்தை முடித்திருக்கிறார்கள். இது கிடக்கட்டும். உம்மைப் போன்றவர்கள் முயற்சியால் வெளிப்படாதது ஒன்றுமே யில்லை. மதனசுந்தரி உம்மைப் பார்க்க வேண்டு மென்று அதிக ஆவலுடன் இருக்கிறாள். நாளைய சாயந்திரம் வரையிலும் கூட அவளால்

பொறுத்துக்கொண்டிருக்க முடியாதுபோலிருக்கிறது. அவள் ஒவ்வொரு நிமிஷத்தையும் கணக்கிட்டுக் கொண்டு இருப்பதாகக் காமகோட்டி எனக்குக் கூறினாள். இவ் விஷயத்தில் உண்மை வெளிப்படா விட்டால், அவளுக்குப் பைத்தியம் பிடித்து விடும்போல் தோன்றுகிறது. அவள் தன்னுடைய கணவர் மோகன சுந்தர முதலியாரைக் கொலை செய்த கொலையாளியைக் கண்டு பிடிப்பதைத் தான் காண வேண்டும் என்னும் பேராவலுடன் அவள் தமக்கை அவளுக்குச் சொல்லும்சமாசாரங்களையும் கூட ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்கிறாளாம். உம்முடைய வாயிலிருந்தே விஷயத்தை யறிய வேண்டும் என்பது அவளுடைய எண்ணமாக இருக்கலாம் என்றெண்ணுகிறேன்.

குணசீலர்:—அப்படியுமிருக்கலாம். அல்லது அந்த அம்மாள் என்னிடம் கூற விரும்பும் விஷயம் ஏதோ இருக்கிறது என்று எண்ணவும் இடமுண்டு.

கோபாலசாமி முதலியார்:—அவள் என்ன சொல்லப் போகிறாள்? அவளுக்கு என்ன தெரியும்? நீங்கள் முதல் முறை அவளைச் சந்தித்துக் கேட்டபோது அவள் தனக்கு உண்மையாகத் தெரிந்த விஷயம் முழுவதையும் உம்மிடம் கூறி விட்டதாகக் காமகோட்டி என்னிடம் சொன்னாள். ஆனால், அவள் மனம் ஒரு நிலையிலில்லாததால், வேறு ஏதாகிலும் இவ் வழக்கின் சம்பந்த மில்லாத ஒரு விஷயத்தை உமக்குக் கூற எண்ணியிருந்தாலும் இருக்கலாம்.

குணசீலர்:—இன்று காலையில் காமகோட்டியம்மாள் அவர்கள் தம்முடைய தங்கையார் உடம்பு நல்ல நிலைமைக்கு வந்து விட்டது என்றும், முன் பிருந்த மனத் தடுமாற்

றம் இப்பொழுது ஒழிந்து விட்டது என்றும் எனக்கு டெலிபோன் மூலமாகத் தெரிவித்தார்.

கோபாலசாமி முதலியார்:—ஆம்; உண்மைதான். ஆனால், அவளுக்கு இன்னம் பலவீனம் இருக்கும் என்பதில் சந்தேக மில்லை. ஏன் என்றால், நான் முன்பு அவளைப் பார்த்ததற்கும் இப்பொழுது பார்த்ததற்கும் அவளிடத்தில் அதிக மாறுதல் காணப்பட்டது. சில நாட்களாக அதிக நோயினால் வருந்தினா ளல்லவா?

குணசீலர்:—அன்பரே, நான் மதனசுந்தரியம்மாளை இன்னம் சில கேள்விகள் கேட்க வேண்டும். முன்பு அந்த அம்மாளுடன் பேசியபோது அவருடைய தேக நிலைமை சரியாக இல்லாததால், நான் அக்கேள்விகளைக் கேட்க வில்லை.

கோபாலசாமி முதலியார்:—அப்படியானால் நீங்கள் காமகோட்டியைக் கேட்டால் அவள் உங்களுடைய கேள்விகளுக்குப் பதில் கூறுகிறாள்?

குணசீலர்:—இல்லை, இல்லை. அப்படிக் கூடாது. அவ்விஷயங்கள் மதனசுந்தரி அம்மாளுக்கு மாத்திரந்தான் தெரியும்.

கோபாலசாமி முதலியார்:—அப்படியா? ஒருவேளை அவளுக்கும் அவளுடைய கணவருக்கும் சப்பந்தப்பட்ட சில விஷயங்களைப் பற்றி விசாரிக்கப் போகிறீர்கள்போலிருக்கிறது!

குணசீலர்:—ஆம்.

கோபாலசாமி முதலியார்:—நண்பரே, நீங்கள் சற்று முன்பு ஏதோ சாக்ஷியும், சில ஆதாரங்களும் கண்டு பிடித்திருப்பதாகச் சொன்னீர்களே! அவைகளென்ன? நான் அவைகளைப் பற்றி உங்களைக் கேட்கக்கூடாது என்பதை அறிவேன். இருந்தாலும், காமகோட்டியை நான்

காதலிப்பதால், எனக்கும் இவ்விஷயத்தில் உண்மை யைத் தெரிந்து கொள்ள விருப்பம் உண்டாகிறது. அதற்காகத்தான் கேட்கிறேன்.

கோபாலசாமி முதலியார் இவ்வாறு கூறியதைக்கேட்ட குணசீலர் சிரித்துக் கொண்டே, அவரை நோக்கி, 'நண்பரே, நான் அவற்றைப் பற்றிச் சொல்லிய போதிலும், அதனால் உங்களுக்கு என்ன பயன் உண்டாகப் போகிறது? எத் தனையோ தனித் தனி விஷயங்கள் தோன்றுகின்றன. ஆனால் அவைகளுக்குள் ஒரு தொடர்ச்சி ஏற்படாத போது எப்படி முடிவு கட்டி விடுவது? நான் உண்மையை அறியும் வரையில் இரண்டு மூன்று சிறு ஆதாரங்களை வைத்துக் கொண்டு ஆகாயக் கோட்டை கட்டி, ஆள உத்தேசிப்பதே இல்லை. ஆனால், என் மனத்திற் புலப்படுகிற விஷயங்க ளெல்லாம் கடைசியில் பார்க்கப் போனால், உண்மையை விளக்குவன வாகவே இருக்கும்,' என்று கூறினார்.

குணசீலர் இப்படிக் கூறி முடித்ததும் துபாஷ் கோபால சாமி முதலியார் குணசீலருடைய அறையின் சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரத்தைப் பார்த்து விட்டுக் குணசீலரை நோக்கி, 'அன்பரே, நேரமாகிறது. நான் போய் விட்டு வருகிறேன். என்னுடைய சிநேகிதர் ஒருவர் இச் சென்னையில் வசிக்கிறார். அவரை நான் பார்த்து நெடுங் காலமாகிறது. அவரைப் போய்ப் பார்க்க வேண்டும்,' என்று கூறிக் கொண்டே, தாம் உட்கார்ந்திருந்த நாற்காலியை விட்டு எழுந்தார்.

உடனே குணசீலரும் நாற்காலியை விட்டு எழுந்து, அங்கிலேயர் வழக்கப்படி கோபாலசாமி முதலியாருடைய வலதுகையைப் பிடித்துக் குலுக்கி, 'நண்பரே, நீங்கள் இங்கு வந்ததற்காக நான் அதிக சந்தோஷப் படுகிறேன். உங்க ளுடன் பேசுவதில் எனக்கு அதிக இன்ப முண்டாகிறது.

பிறகு சந்திப்போம். போய் விட்டு வாருங்கள். இவ் விஷயத்தில் உண்மை விளங்கினால், உமக்குக் கட்டாயம் தெரிவிக்கிறேன்,' என்று கூறக் கோபாலசாமி முதலியார் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியே சென்றார்.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

---

### ஆச்சரியச் செயல்கள்

குணசீலர் அன்று சாயந்திரம் உடுத்துக்கொண்டு தம் முடைய அறையை விட்டுக் கீழிறங்கிச் சதாசிவனை வண்டி கொண்டுவரச் சொன்னார். அவன் உடனே அவருடைய மோட்டார் வண்டியைக் கொண்டு வந்து, வாயிலில் நிறுத்தினான். அவர் அதில் ஏறியுட்கார்ந்து, சதாசிவனைப் பார்த்து, அவ் வண்டியை நுங்கம்பாக்கத்திலுள்ள மனோ ரஞ்சித விலாசத்திற்குச் செலுத்தும்படி கட்டளையிட்டார். சதாசிவனும் அவ்வாறே அதி விரைவாக வண்டியைச் செலுத்தினான். வண்டி சிறிது நேரத்திற்கெல்லாம் மனோ ரஞ்சித விலாசத்தின் முன்னிலையில் சென்று நின்றது.

மனோரஞ்சித விலாசத்திற் குடியேறிய அம்பலவாணனோ, குணசீலர் கருத்தின்படியே அன்று முதல் வெளியே எங்கும் செல்லாமல், உண்பதும், உறங்குவதும், நெடு நேரம் எதைஎதையோ எண்ணி வருந்துவதுமாகக் காலங்கழிக்கத் தொடங்கினான். அன்று அவன் அம்மாளிகையின் மேன்மாடியில் தன்னுடைய அறையில் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தான். குணசீலருடைய மோட்டார் வண்டி வாயிலில் வந்து நின்றதைக் கண்ட மாணிக்கம் என்னும் வேலையாள் உடனே அம்பலவாணன் அறைக்குச்

சென்று, அவனைத் தூக்கத்தினின்றும் விழிக்கச் செய்து, குணசீலருடைய வருகையை அவனுக்குத் தெரிவித்தான்.

அம்பலவாணன் துப்பறியும் குணசீலர் வருகையைக் கேள்விப்பட்டவுடன் தன் படுக்கையிலிருந்து எழுந்து, அறையை விட்டு வெளியே வந்தான். அதற்குள் குணசீலரும் மாடிப் படியேறி, அவன் அறையினிடம் வந்தார். அம்பலவாணன் அவரை மரியாதையுடன் வரவழைத்துத் தன்னுடைய அறையில் ஒரு நாற்காலியில் உட்காரச் செய்து, தானும் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான். பிறகு அவன் அவரைப் பார்த்து, அதிக ஆவலுடன், 'ஏதாகிலும் புதிய விஷயம் கண்டு பிடித்தீர்களா?' என்று கேட்டான்.

குணசீலர் சிறிது வருத்தத்துடன், 'அம்பலவாணரே, எத்தனையோ விஷயங்களைத்தான் கண்டு பிடித்தேன். ஆயினும், இன்னம் பல விஷயங்களை அறிய வேண்டி யிருக்கிறது. அதற்காகத்தான் இப்பொழுது இவ்விடத்திற்கு வந்தேன்,' என்று கூறினார்.

அவர் கூறியதைக் கேட்ட அம்பலவாணன் அவரைப் பார்த்து, 'நான் இதுவரையில் தாங்கள் ஏதாவது புது விஷயத்தைக் கண்டு பிடித்து எனக்குத் தெரிவிப்பீர்களென்றே எண்ணிக்கொண் டிருந்தேன்,' என்றான்.

குணசீலர் அவனை நோக்கிப் பின்னும் வருத்தத்துடன், 'நான் நீர் எண்ணியபடி பல விஷயங்களைக் கண்டு பிடித்தேன். ஆனால் அம்பலவாணரே, நீர் என்னிடம் ஒன்றையும் ஒளியாமற் கூறியதாகச் சொல்லிவிட்டு, உண்மையில் அப்படிச் செய்யாமலிருந்ததை நோக்க எனக்கு வருத்தமாகவே இருக்கிறது. நீர் உண்மையைக் கூறவில்லை என்பதை நான் இப்பொழுதுதான் உணர்ந்தேன். நீர் ஏன் அவ்வாறு கூற வேண்டும் என்பது எனக்கு விளங்கவேயில்லை. இப்படியும் செய்யலாமோ?' என்று கேட்டார்.

அம்பலவாணன் அவர் கூறியதைக் கேட்டு, ஆச்சரியப் பட்டவன்போல் அவரை நோக்கி, 'அன்பரே, நீங்கள் இப்படிக் கூறுவதன் கருத்து எனக்குத் தெரியவில்லை. உண்மையில் நான் உங்களிடம் ஒன்றையும் ஒளித்துக் கூறவே இல்லையே!' என்றான்.

குணசீலர் அவனைப் பார்த்து, 'சரி; கொலை நடந்த இரவு நீர் வெளியே சென்றிருந்து, சுமார் மூன்றுமணிக்கு வீட்டுக்குத் திரும்பினீரல்லவா? அப்பொழுது உம்முடைய வேலைக்காரன் மாணிக்கம் உம்மைப் படுக்கையறையில் விட்டு விட்டுச் சென்று படுத்துக்கொண்டா னல்லவா? அப்பொழுது நீர் உடனே தூங்கிவிட்டீரோ?' என்று கேட்டார்.

அம்பலவாணன் அவர் கூறியதைக் கேட்டு, அவரை வெறுப்புடன் நோக்கி, 'நான் அப்படித்தான் நினைக்கிறேன். எனக்கு ஞாபகமில்லை,' என்று கூறினான்.

குணசீலர்:—பிறகு நீர் எப்பொழுது படுக்கையைவிட்டெழுந்தீர்? அப்பொழுது மணியென்ன இருக்கலாம்?

அம்பலவாணன்:—என்? ஆம்! உண்மையாகத்தான். நான் எழுந்துகொள்ளும் பொழுது சுமார் ஐந்தரைமணியிருக்கலாம். அப்பொழுதுதான் வீட்டு வேலைக்காரி தங்கம் என்பவள் கத்தினள்.

குணசீலர்:—சரி; அம்பலவாணரே, நீர் இன்னம் என்னிடத்தில் விஷயத்தை மறைத்துப் பேசுவதில் பயனில்லை. நீர் அதற்கு முன் ஒருதரம் எழுந்து உம்முடைய தமயனார் மோகனசுந்தர முதலியார் அவர்கள் அறைக்குச் சென்றிருந்தபோது அங்கு இருந்து எடுத்த பொருள்களை யெல்லாம் என்ன செய்தீர்?

இதைக் கேட்டவுடனே அம்பலவாணன் பயமடைந்து, நடுங்கிக்கொண்டே, பயத்தினு லுண்டான கோபத்துடன் குணசீலரைப் பார்த்து, 'நீங்கள் சொல்லுவது எனக்கொன்

றும் விளங்கவில்லையே! அங்கிருந்து நான் என்ன பொருளை யெடுத்தேன்?'' என்று கேட்டான்.

குணசீலர்:—கொலை நடந்ததை மறைக்கக் கருதி, நீர் உம்முடைய தமயனார் மோகனசுந்தரமுதலியார் அணிந்திருந்த ஆபரணங்களையும் கடிகாரச் சங்கிலியையும் எடுத்துக்கொண்டீர். நீர் அதை என்னிடம் மறைத்துப் பேசாதீர். அப்படிப் பேசுவீரானால், உம்மீது குற்றம் ஏற்படும். வீணில் நீர் துன்பமடைய நேரிடும். நீர் அப்பொருள்களை வெகுகாலம்வரையில் மறைத்து வைத்திருக்க உம்மால் இயலாது. அவை எப்படியாகிலும் வெளிப்பட்டுவிடும். நீர் அவற்றை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்?

இவ்வாறு குணசீலர் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும், அம்பலவாணன் கண்களிலிருந்து நீர் பெருகியது. 'உண்மையைக் குணசீலர் எப்படியோ உணர்ந்துவிட்டார்,' என்று அவன் எண்ணினான். பிறகு அவன் அழுது கொண்டே அவரைப் பார்த்து, 'நண்பரே, அவற்றை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்றே எனக்குப் புரியவில்லை. ஐயோ! ஐயோ! அவைகள் இரவும் பகலும் என் கண்முன் தோன்றுகின்றன. நான் அவைகளை என்னுடன் வைத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்பவில்லை. அவைகளைத் தொட்டாலுங் கூட என் தேகம் துன்ப மடைகிறது. ஆனால், அவற்றைப் பற்றி நீங்கள் உண்மையைத் தெரிந்து கொள்ளுவீர்களென்று நான் எண்ணவே இல்லை,' என்று கூறினான்.

குணசீலர் ஒன்றும் அறியாதவரைப்போல அவனைப் பார்த்து, 'அம்பலவாணரே, நீர் ஏன் அப்படிச் செய்தீர்? அவ்வறையிலிருந்த தோற்றங்களை மறைத்ததற்கும், உம்முடைய தமயனார்மீதிருந்த ஆபரணங்களைக் களைந்ததற்

கும் என்ன காரணம்? நீர் உம்முடைய தமயனார் கொலை யுண்டு கிடப்பதைக் கண்டவுடன் வீட்டிலுள்ளவர்களெல் லாம் எழுந்துகொள்ளும்படி கூச்சலிட்டுக் கொலையாளியை அப்பொழுதே ஏன் தேட முயலக் கூடாது?' என்றார்.

அம்பலவாணனுக்குக் குணசீலர் எல்லா விஷயங்களையும் அறிந்துகொண்டாரென்பதும், இனியவரிடத்தில் ஒன்றை யும் மறைக்கக் கூடாது என்பதும், வெளிப்படையாகத் தெரிந்துவிட்டன. அவன் தன்னைப் பற்றி வருத்தும் வீண் குற்றத்தை ஒழித்துவிட வேண்டுமென்று எண்ணினான். தவிர, குணசீலரைத் தவிரத் தன்னைக் காப்பாற்றுபவர் வேறு ஒருவரும் இல்லை என்பதையும் அவன் உணர்ந் தான். ஆகையால், அவன் அவரைப் பார்த்து, 'நண்பரே, எல்லாவற்றையும் நுட்பமாக ஆராய்ந்து தெரிந்துகொண்ட உமக்கு இது தெரியவில்லையா? அப்பொழுது நான் அப் படிச் செய்திருந்தால், நான்தான் அக்கொலையைச் செய் தேன் என்று என்மீது குற்றம் சாரும் என்று எண்ணியே அவ்வாறு செய்தேன். நான் பாதி இராத்திரியில் வீட்டுக் குத் திரும்பி வந்ததும், பிறகு அரைமணிநேரங் கழித்துக் கையில் காயத்துடனும் கோபத்துடனும் வெளியே வந்த தும் என்னுடைய மோட்டாரோட்டி அறிவான். நான் அப் பொழுது என்னுடைய தமயனைக் கோபத்தினால் ஓங் கிக் குத்தினேன். நான் அப்பொழுது வீட்டிற்குள் வந்து, என் தமயனுடைய அறையில் நுழைந்து, அவ ருடன் வாய்ச்சண்டையிட்டதை யாராகிலும் அறிந்திருக்கக் கூடும் என்பதைக் கவனிக்கவே இல்லை. என்னுடைய மோட் டாரோட்டிமாத்திரந்தான் எனக்கும் என்னுடைய தமய னுக்கும் உண்டான வாய்ச்சண்டையை யறிந்திருக்கக் கூடும். ஏனென்றால், பன்னிரண்டு மணிக்கு மேல் இரவில் அவ் வறையினருகில் வேறொருவரும் வருவதற்குக் காரண

யில்லே. அப்படி யாராகிலும் அதை அறிந்திருப்பார்களா ஞல், இதுவரையில் என் தமயஞர் கொலே செய்யப்பட்ட குற்றம் என்மீது ஏற்றப்பட்டு இருக்கும். ஆகையினுல், கொலேநடந்தது பிறருக்குத் தெரிவதற்கு முன்பே நான் என்மோட்டாரோட்டிக்குச் சிறிது பொருள்கொடுத்து எனக் கும் என் தமயஞருக்கும் நடந்த விஷயத்தை ஒருவருட னும் சொல்லாமலிருக்கும்படி அவனுக்குக் கூறினேன். ஆஞலும், அவன் இதையே கருவியாக வைத்துக்கொண்டு என்னுடைய ஆயுட்காலம் வரையில் என்னேப் பயமுறுத் திப் பணம் பிடுங்கிச் சாப்பிடத் தொடங்கிவிடலாம் என் பதும், அப்படி அவன் கேட்கும்போதெல்லாம் நான் அவ னுக்கு வேண்டியதைக் கொடுக்க மறுத்தால் இவ்விஷயத்தை அவன் போலீஸாருக்குத் தெரிவித்து என்னேக் குற்றவாளி யாக்கிவிடலாம் என்பதும் எனக்குப் பிறகுதான் தெரிய வந்தன. நீர் பாதிராத்திரியில் நான் வீட்டுக்கு வந்ததை யறிந்தும், என்னேக் குற்றவாளி யாக்காமையால், எனக்குக் கொஞ்சம் தைரியம்வந்தது. நீர் என்னேக் குற்றவாளி யாக்கா விட்டால், வேறொருவரும் என்னேக் குற்றவாளியென்று கருதவும் முடியாது என்பது எனக்குத்தெரியும். இருந்தா லும், அவ்வறையின் தோற்றங்களே மாற்றிக் காண்போருக்கு அன்று இரவு களவு நடந்துவிட்டதுபோலத் தோற்றச் செய்ததை நான் உங்களிடம் தெரிவிக்கப் பயந்தேன். அப் படிச் செய்தால், நீர் எங்கே என்னே ஒருசமயம் குற்றவாளி யாக எண்ணி விடுவீரோ என்று எனக்குப் பயமாகவே இருந்தது. வீஞக நான் உம்மிடம் உண்மையை மறைத்துக் கூறினதற்காக இப்பொழுது வருந்துகிறேன். முதலிலேயே நான் உம்மிடம் உண்மையைக் கூறிவிட் டிருக்கவேண்டும் என்பது எனக்கு இப்பொழுதுதான் தெரிகிறது,' என்று கூறிஞன்.

குணசீலர் அவனைப்பார்த்து, 'அம்பலவாணரே, இப்பொழுதாகிலும் நீர் உண்மையைக் கூறுகிறீரா என்பதில் எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது. உமக்கு என்னென்ன தெரியுமோ அதையெல்லாம் உண்மையாக என்னிடம் கூறிவிடும்,' என்று சொன்னார்.

அம்பலவாணன், 'நான் இப்பொழுது கூறிய அவ்வளவும் உண்மையே. அன்று காலை நாலரைமணி வரையிலும் நடந்த விஷயம் இவ்வளவுதான்,' என்று கூறினான்.

குணசீலர் அவனை நோக்கி, 'அம்பலவாணரே, அப்பொழுது நீர் நாலரைமணிக்குத்தான் கீழே உம்முடைய தமயனு ரறையினருகிற் சென்றீரோ? அவ்வளவு காலையில் நீர் அங்குச் சென்றதற்குக் காரணமென்ன?' என்று கேட்டார்.

அம்பலவாணன், 'நான் அன்று காலையில் வெளியிற் சென்று ஒருவரைப் பார்க்கவேண்டி யிருந்தது. ஆகையால், நான் சிறிதுநேரம் தூங்கி விழித்துக் கடிகாரத்தைப் பார்த்தேன். மணி நாலரையாயிற்று. உடனே நான் உடுத்துக்கொண்டு, நான் வழக்கமாகக் கையிலெடுத்துச் செல்லும் கைப்பிரம்பைத் தேடினேன். அதை என்னுடைய அறையில் காணவில்லை. பிறகு அன்று இரவு எங்கேயாகிலும் அதை விட்டுவிட்டேனோ என்று யோசித்தேன். உடனே எனக்கு அன்று இரவு பன்னிரண்டுமணிக்கு என் தமயனார் அறைக்குச்சென்ற ஞாபகம் வந்தது. ஆகையினால், அதை மறந்தாற்போல் அவ்விடத்தில்தான் வைத்துவிட்டுப் போய்விட் டிருப்பேன் என்று எண்ணி, அதை எடுத்துக்கொண்டு போக என் தமயனார் அறைக்குப் போனேன். அப்பொழுது கூடத்தில் ஒருவிளக்கு எரிந்துகொண்டிருந்தது. அவ் வெளிச்சத்தில் நான் என் தமயனார் அறைக்குள் போனதும் அங்கும் விளக்கு எரிந்துகொண் டிருந்தது. நான்

அவ்வறைக்குள் புகுந்ததும்......ஐயோ!............' என்று கூறி, மேலொன்றுங் கூருமல் அழத்தொடங்கினுன்.

அவன் அவ்வாறு அழுவதைக்கண்ட குணசீலர் மனம் வருந்தி, அவனைநோக்கி, 'நல்லது; மேலே சொல்லும். உமக்கு இவ்விஷயம் எவ்வளவு துன்பத்தைக் கொடுத்து விட்டது என்பது எனக்குத்தெரியும். ஆனுல், அதைப் பொறுத்துக்கொண்டுதான் இருக்கவேண்டும். நான் ஒவ்வொரு சிறு விஷயத்தையும் விடாமல் அறிந்துகொள்ள விரும்புவதால், நீர் ஒன்றையும் விடாமற் கூறவேண்டும். அப்பொழுது நீர் அங்கே என்ன கண்டீர்?' என்று கேட்டார்.

அம்பலவாணன் அழுகுரலோடு மேலே கூறத்தொடங்கி, 'தமயனுர்-என் தமயனுர்—அவ் வறையிலுள்ள மேஜையினருகில் நாற்காலியில் உட்கார்ந்துகொண் டிருந்தார். ஆனுல் அவர் தூங்கவில்லை. அவருடைய கண்கள் திறந்திருந்தன; அவை குரூரப்பார்வையுடன் என்னையே நோக்குவதுபோல் எனக்குத் தோன்றியது. அவருடையமுகம் அதிக விகாரப்பட்டுத் தோற்றியது. அந்த கோரக் காட்சியைக் கண்டவுடனே என்னுடைய எண்ணங் கலங்கியது; மயக்கம் மேலிட்டது. ஆகையினுல், நான் பூமியில் விழாமலிருக்கக் கருதி, அவ்வறையின் கதவுகளுள் ஒன்றைப் பிடித்துக் கொண்டு நின்றேன். சிறிது நேரம் அவ்வறையிலுள்ள பொருள் ஒன்றும் என் கண்ணுக்குப் புலப்படவே இல்லை. யாவும் இருள்மயமாகத் தோன்றின. பிறகு சிறிது நேரம் கழித்து, என்னுடைய அறிவு எனக்கு வந்ததும், நான் என் தமயனுர் பனியன்மீது இரத்தக்கறையைக் கண்ணுற்றேன். மேஜையின் கீழ் அறை திறக்கப்பட்டிருந்தது. என் தமயனுருடைய கைத்துப்பாக்கி மேஜையின்மேல் அவருக்கு எதிரில் தூரத்தில் கிடந்தது. அப்பொழுது அவர்

கொலை செய்யப்பட்டார் என்பதை நான் அறிந்தேன்,' என்று கூறினான்.

குணசிலர் அவனை நோக்கி, 'நீர் அப்பொழுது பார்த்த கைத்துப்பாக்கியின் முகம் எத்திசையை நோக்கியிருந்தது? ஞாபக மிருக்கிறதா?' என்று கேட்டார்.

'துப்பாக்கியின் முகம் அவரைப் பார்த்தாற்போ லிருந்தது. அவரை எதிரிலிருந்து சுட்டவர்கள் அத்துப் பாக்கியை அப்படி வைத்திருக்கவேண்டும் என்று எண்ணு கிறேன். ஆனால், அவர்—என் தமயனார்—தற்கொலை புரிந்து கொள்ளவில்லை என்பது மாத்திரம் உண்மை. அப்படி அவர் செய்து இருந்தால், அவர் அந்நிமிஷமே உயிர்விட் டிருப் பார். அப்படி உயிர்விட் டிருந்தால், அத் துப்பாக்கியை அவர் மேஜையின் முன்பக்கத்தில் எழுந்துவந்து வைத் திருக்க முடியாது; வைத்திருந்தால், அவர் மார்பிலிருந்து ஒழுகிய இரத்தம் மேஜையின்மேல் சொரிந்து கறைப்படுத்தி யிருக்கும். அவராகத் தற்கொலை புரிந்துகொண்டிருந்தால், உடனே அவருடைய கைந்நரம்பு இழுத்துக்கொண்டு, துப் பாக்கியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கும். அல் லது, அப்பொழுது கை உதறியிருந்தால், துப்பாக்கி கீழே விழுந்திருக்கவேண்டும். அப்படி யொன்றும் காணப்பட வில்லை. தவிர, என் தமயனார் பெரிய பயங்கொள்ளி யென் பதும் அவர் தற்கொலைபுரிந்து கொள்ளுவதற்கு ஒருபோதும் சம்மதப்படா ரென்பதும் எனக்கு நன்றாகத்தெரியும். அந்த கோரக் காட்சியைக் கண்டதும், அன்று இரவு எனக்கும் என் தமயனாருக்கும் நடந்த வாய்ச்சண்டை என் நினை விற்கு வந்தது. உடனே என்தேகம் நடுங்கியது; வாயில் நீர் வற்றியது; எண்ணம் கலைந்தது. இக்குற்றம் என் தலை மேல் விழுமோ, என்னவோ என்று என்மனம் எண்ணாத

எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கித் தயங்கியது,' என்று கூறினன் அம்பலவாணன்.

குணசீலர், 'ஆகையினுல், அக்கொலைச் செய்கையை யாரோ கள்வர் செய்ததுபோலத் தோன்றச் செய்யவேண்டும் என்னும் எண்ணம் உமக்கு உண்டாயிற்ருே?' என்று கேட்டார்.

அம்பலவாணன்:—ஆம். நான் அப்படித்தான் எண்ணினேன். உடனே நான் அவ்வறையின் சன்னலின் கதவைத் திறந்து, அச்சன்னலின் கம்பியை என் வலிமையைக் கொண்டு மடக்கினேன்.

குணசீலர்:—அதன் பிறகு நீர் என்ன செய்தீர்?

அம்பலவாணன்:—பிறகு நான் மறுபடியும் மேஜையினருகிற் சென்று, அந்தக் கைத்துப்பாக்கியைச் சோதித்துப் பார்த்தேன். அதில் ஒரேயொரு குண்டுதான் சுடப்பட்டிருந்தது. ஆகையினுல், நான் அந்த மேஜையின் அறையிலிருந்த துப்பாக்கிக்குண்டு அடங்கிய பெட்டியை யெடுத்து, அத்துப்பாக்கியில் குறைந்திருந்த ஒரு குண்டை அதில் இட்டு வைத்தேன். தவிர, நான் அத்துப்பாக்கியை என் கைக்குட்டையைக் கொண்டு நன்ருகத் துடைத்தேன். ஆனுலும், நான் என் பயத்தால் அக்காரியத்தைச் சரிவரச்செய்யவில்லை யென்பது பிறகுதான் எனக்குத் தெரிந்தது. ஒவ்வொரு விஞடியும் யார் என்னைக் கண்டுபிடித்து விடுவார்களோ என்னும் பயம் என்னை அவ்வாறு செய்யத் தூண்டியது. அந்த நேரத்தில் அவ்வறையினருகில் ஒருவரும் வரமாட்டார்கள் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஆனுலும், தற்செயலாக வந்துவிட்டால் என்னசெய்வது? அப்படி யாரேனும் திடீ

றென்று வந்து பார்த்துவிட் டிருப்பாரானல், என்னுடைய கதி என்னவாகும்?

குணசீலர் :—பிறகு நீர் அத் துப்பாக்கியை வைத்துவிட்டீரல்லவா?

அம்பலவாணன் :—ஆம் பிறகு நான் அக் கைக்குட்டையை என் சட்டையின் உள் பையில் வைத்துக் கொண்டேன். அதில் எண்ணெய்க் கறையும், துப்பாக்கி மருந்தின் நாற்றமும் நிறைந்திருந்தன. பிறகு நான் என்னுடைய தமயனுர் பிரேதத்தினருகே சென்று, அதைத் தொட்டுப் பார்த்தேன். அது குளிர்ந்திருந்தது. பின்பு அவர்மீதிருந்த விலையுயர்ந்த ஆபரணங்களை யெல்லாம் எடுத்துக் கொண்டேன்.

குணசீலர் :—அவ் வாபரணங்களை யெடுத்து, நீர் என்ன செய்தீர்?

அம்பலவாணன் :—நான் அவைகளை என் சட்டைப் பையில் வைத்துக் கொண்டேன். அப்படி அவ் வாபரணங்களைக் களைந்தபோது என் கையில் இரத்தக் கறை படிந்தது. அதன் பிறகு எனக்கு ஓர் எண்ணம் உதித்தது. உடனே நான் என் தமயனுர் மார்பில் ஒழுகிக்கொண் டிருந்த இரத்தத்தை என் கையில் பூசிக்கொண்டு, அதை அங்கிருந்த மறைப்புத் திரையிலும், கீழே போடப்பட்டிருந்த கம்பளியிலும் பூசினேன். பிறகு என் கையில் சிறிதும் இரத்தக் கறை இல்லாதபடி அத்திரையில் துடைத்துவிட்டு, அங்கு எரிந்துகொண்டிருந்த விளக்கை நிறுத்தி, என் அறைக்கு விரைந்து சென்றேன். நான் அப்படி அறையை விட்டு வெளி வரும்போது என் தமயனுர் பிரேதத்தைத் திரும்பிப் பார்க்கவேயில்லை. ஏனென்ருல், அவருடைய கண்கள் இரண்டும் நான் அவ்வறையில் மற்றக் காரியங்

களைப் பார்த்துக்கொண் டிருந்தபோது என்னையே பார்ப்பவை போலத் தோன்றின. ஆகையினால், மறுபடியும் அதைத் திரும்பிப் பார்த்தால், பயத்தால் கத்திவிடுவேனோ, என்னவோ, என்னும் பயம் என்னைப் பிடித்து வருத்தியது.

குணசீலர் :—நீர் உம்முடைய அறைக்குத் திரும்பிச் சென்றதும் என்ன செய்தீர் ?

அம்பலவாணன் :—அதைப்பற்றி எனக் கொன்றுந் தெரியாது. நான் சிறிது நேரம் பைத்தியம் பிடித்தவன் போல் திகைத்திருந்தேன். பிறகு என்னுடைய அறிவு எனக்கு வந்ததும், நான் என்ன செய்யவேண்டும் என்பது விளங்கியது. உடனே நான் என் குளியல் அறைக்குச் சென்று குளித்தேன். பிறகு என் துணிகளில் இரத்தக் கறை இருக்கிறதா என்று கூர்ந்து கவனித்தேன். அவைகளில் அப்படி ஒன்றுங் காணப் படவில்லை. ஆதலால், நான் என்னிடமிருந்த ஆபரணங்களை யெல்லாம் ஒரு சிறு மூட்டையாகக் கட்டி, ஒருவரும் கவனிக்காத இடத்தில் என்னுடைய துணிகளை வைக்கும் ஒரு பெரிய பீரோவின் மேல் ஒரு மூலையில் வைத்துவிட்டேன். நீங்கள் என்னை முதல் முதல் இதைப்பற்றிக் கேள்வி கேட்டபோது அச் சிறு மூட்டை அங்கேயேதான் இருந்தது. பிறகு நான் என் வேலைக்காரனைக் கீழே அனுப்பிவிட்டு, அதை யெடுத்து, என் சட்டைப் பையில் பத்திரமாக வைத்துக் கொண்டேன். அதன் பிறகு நானும் என் தாயாரும் இம்மாளிகைக்குக் குடி வந்த வுடனே இவ்வறையின் சுவரில் ஒரு கள்ளப் பெட்டிப் புதைக்கப்பட்டிருக்கிறது என்பதை இம்மாளிகையின் சொந்தக்காரராகிய என் சிநேகிதரால் அறிந்து, அதன் சாவியை

அவரிடமிருந்து பெற்றுக் கொண்டு, அவர் வெளியே சென்றவுடனே என் வேலைக்காரனைக் கீழே போகும்படி ஒரு வேலையிட்டு அனுப்பிவிட்டு, அக் கள்ளப் பெட்டியைத் திறந்து, அதற்குள் வைத்து விட்டேன். அதை என்ன செய்கிறது என்று எனக்குத் தெரியவில்லை.

குணசீலர் :—அம்பலவாணரே, உம்முடைய தமயனாரை இன்னார் கொன்றிருக்கலாம் என்று நீர் யார் மீதாயினும் சந்தேகங் கொண்ட துண்டா ?

அம்பலவாணன் :—ஐயோ ! நான் அப்பொழுது அதைப் பற்றி யெல்லாம் நினைப்பதற்கு நேர மெங்கே இருந்தது ? நான் எண்ணியது எல்லாம் என்னுடைய தற்காப்பைப்பற்றியேயாகும். நான் அகப்பட்டுக் கொள்ளாமலிருக்க வேண்டு மென்பதைத் தவிர, எனக்கு வேறொரு எண்ணமும் அப்பொழுது உண்டாகவேயில்லை. பிறகு மறுநாள் என் தமயனாருடைய கோரக் கொலையைப் பற்றிச் சிந்தித்தேன். அப்பொழுதும் எனக்கு அதைப்பற்றி ஒன்றும் விளங்கவில்லை. அன்பரே, உமக்கு அப்படி யார் மீதாகிலும் சந்தேகம் ஏற்பட்டிருந்தால், எனக்குத் தயை செய்து தெரிவிக்க வேண்டுகிறேன். தயை செய்து கூறுங்கள். ஐயோ ! இதை என்னால் சகிக்க முடியவே யில்லை!

குணசீலர் :—நீர் பொறுத்துக்கொண்டுதான் இருக்க வேண்டும். உம்முடைய தாயாரையும் உம்முடைய தமயனார் மனைவியாரைப் பாரும். அவர்கள் இதைப் பொறுத்துக்கொண் டில்லையா ? பெண்கள் எப்பொழுதும் இரக்கமுடையவர்கள் என்பது உண்மை. அப்படி யிருந்தும், அவர்கள் பொறுத்துக்கொண் டிருக்கிறார்களே !

அம்பலவாணன் :—அன்பரே, நீர் கூறுவது உண்மைதான். ஆனாலும், என் மனத்திலிருக்கிற இரகசியம்—அன்று காலையில் என் தமயனார் அறையில் நான் செய்த செய்கையின் இரகசியம்—அவர்கள் மனத்திலில்லாத தால், அவர்கள் பொறுமையாக இருக்கிறார்கள். அன்பரே, நீர் தான் எனக்கு உதவிசெய்ய வேண்டும். நான் ஒளித்து வைத்திருக்கும் அச்சிறு மூட்டையை என்ன செய்யலாம்? நான் அதை இப்பொழுது போலீசாரிடம் கொடுத்தால், அவர்கள் என்மீது சந்தேகப்பட்டு என்னைக் கைதி செய்வார்கள் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். நான் அதை எப்படி யொழிப்பேன்?

குணசீலர் :—அம்பலவாணரே, நீர் இதற்காக வருந்தவேண்டியதில்லை. இக்கொலை வழக்கு முடியும் வரையில் இதை ஒருவரிடமும் கூறாமல் இருக்கவேண்டும். பிறகு இவ்வழக்கு முடிந்ததும் இதை உம்முடைய தாயாருக்கும், தமயனார் மனைவிக்கும் தெரிவித்து விட்டால், அவர்கள் அப்பொழுது உம்மை நம்புவார்கள். அப்படி இவ்வழக்கில் உண்மை விளங்காமற் போய்விட்டாலும், நான் சொல்லியபடி செய்வதேதான் உத்தமம். அவர்கள் அப்பொழுது உம்மை நம்பித்தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் சமயத்திற்கு என்ன செய்வது? உமக்காக அவர்கள் அப்படிச் செய்யாவிட்டாலும், குடும்பத்தின் பெருமையைக் காப்பாற்றிக் கொள்ளக் கருதியாவது, அப்படித்தான் செய்வார்கள்; உம்மைக் காட்டிக் கொடுக்கவே மாட்டார்கள்.

அம்பலவாணன் :—அவர்கள் என்னை ஒருபோதும் நம்பவே மாட்டார்கள். அது வீண் முயற்சிதான். அவைகளை—அந்த ஆபரணங்களை—மறைக்க, வேறு உபாயந் தான் தேடவேண்டும். அவற்றைக் கல்லுடன் கட்டிக்

கடலில் எறிவதை யொழிய, வேறு வழியில்லை என்று எண்ணுகிறேன்.

குணசீலர் :—அப்படியானால், நீர் ஏன் அவ்வாறே செய்யக் கூடாது? இவ்வழக்கு முடிந்த பிறகு ஒரு நாளைக்குக் கடற்கரைக்குச் சென்று, நீர் கூறியபடியே அச் சிறு மூட்டையை ஒரு பெருங்கல்லுடன் கட்டிக் கடலில் எறிந்துவிட்டு வந்து விடலாமே? இது நீதிக்கு விரோதம் என்பதையும் நான் அறிவேன். ஆனால், நீர் குற்ற மற்றவர் என்பதும், உம்முடைய தமயனாரைக் கொலை செய்தவர் அல்ல என்பதும் எனக்குத் தெரிந்த பின் உம்மைத் தூக்குக்கு ஆளாக்க எனக் கிஷ்டமேயில்லை.

குணசீலர் இவ்வாறு கூறியதைக் கேட்ட வுடனே அம்பலவாணனுக்கு ஒருவிதமான சந்தோஷம் ஏற்பட்டது. உடனே அவன் அவரைப் பார்த்து, 'அன்பரே, இதற்காக நான் உமக்கு என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்து கிறேன். இப்படியே செய்துவிடுகிறேன். இந்த யோசனை எனக்கு முன்பே தோன்றாமல் போய்விட்டது. நீர் என்னைக் குற்ற மற்றவன் என்று அறிந்து கொண்டது கடவுளுடைய திருவருளால்தான் என்று நினைக்கிறேன்,' என்று கூறினான்.

பின்பு குணசீலர் அவனை நோக்கி, 'அம்பலவாணரே, இந்தக் காரியம் செய்வது மாத்திரம் ஒருவருக்கும் தெரியவே கூடாது. நான் போய் வருகிறேன்,' என்று கூறி, நாற்காலியைவிட் டெழுந்தார்.

சிறிது நேரத்திற்கு முன் குணசீலரைப் பார்ப்பதற்கே அஞ்சிய அம்பலவாணன் இப்பொழுது அவரைவிட்டுப் பிரிய மனமில்லாதவனானான். அவன் அவரைப் பார்த்து, 'அன்பரே, போய் வருகிறீரா? வந்தனம், வந்தனம்,' என்று கூறி அவரை வழிவிட்டான். 'பேயோடு பழகுறினும் பிரிவது

அரிதரிது' அன்று பெரியோர் கூறியுள்ளபோது கருணையே உருவெடுத்து வந்தாற்போல் தோன்றும் குணசீலரை விட்டுப் பிரிவதென்றால், எப்படி யிருக்கும்?

---

## பதினான்காம் அத்தியாயம்

---

### மதனசுந்தரியின் மர்மம்

சென்ற அத்தியாயத்தில் கூறியபடி குணசீலர் அம்பலவாணனுடன் பேசி முடிந்ததும், நேரே தம்முடைய வீட்டுக்குச் சென்று, உணவருந்தி விட்டுத் தம்முடைய அறையிலுட்கார்ந்து, சிறிதுநேரம் ஆழ்ந்த சிந்தனையிலிருந்தார். பிறகு சிறிதுநேரம் வரையில் எதையோ ஒரு புத்தகத்தை எடுத்து வாசித்து வைத்துவிட்டுப் படுக்கைக்குச் சென்று படுத்தார். அன்று அவருக்கு மனக்கவலை ஒரு சிறிது குறைந்திருந்ததுபோ லிருந்தது. ஆகையால், அவர் அயர்ந்து தூங்கினார். மறுநாட் காலையில் சற்றேறக்குறைய ஐந்துமணிக்கு அவர் அறையின் சுவரில் அமைக்கப்பட்டிருந்த டெலிபோன் மணி நெடுநேரம் வரையில் கிணுகிணு வென்று சப்தித்துக்கொண் டிருந்தது. அம் மணியின் ஓசையைக்கேட்டு குணசீலர் தம்முடைய படுக்கையைவிட்டு எழுந்து, அதிக ஆவலுடன் டெலிபோனிடம் சென்று, பேசத் தொடங்கினார். அப்பொழுது டெலிபோனில் பேசியவர் யாராகஇருக்கலாம்? அவர்கற்பகவனத்திலுள்ள காமகோட்டியம்மாளைக் காதலிக்கும் துபாஷ் கோபாலசாமி முதலியாரே. கோபாலசாமி முதலியார் துக்கம் நிறைந்த குரலோடு டெலிபோனில் குணசீலரை நோக்கி, 'நண்பரே, கற்பகவனத்திலிருந்துதான் பேசுகிறேன். இன்று ஒரு துக்க காரியம் நடந்துவிட்டது. தாங்கள் உடனே புறப்பட்டுவரவேண்டும்,'

என்று கூறினர். அவர் அப்படிக் கூறி முடித்ததும் குண சீலர் தம்முடைய வேலைக்காரனாகிய கோவிந்தனை யழைத்து, வண்டி கொண்டுவரும்படி சதாசிவனுக்குச் சொல்லச் சொல்லிவிட்டு, அதிக விரைவாகக் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு உடையுடுத்தினர். அதற்குள் கோவிந்தன் சதா சிவனுக்குக் குணசீலர் கட்டளையைத் தெரிவித்துவிட்டுத் தன் னுடைய எஜமானர் எங்கேயோ அவசரகாரியமாகச் செல்லு கிறார் என்பதை யறிந்து ஒரு வெள்ளித்தட்டில் சிற்றுணவும், ஒரு வெள்ளிக்கிண்ணத்தில் காபியும் கொண்டுவந்து, அவர் மேஜையின்மேல் வைத்து அறையின் கதவை மூடிக்கொண்டு கீழே சென்றான். இரண்டொரு நிமிஷங்களுக் கெல்லாம் குணசீலர் சிறிது சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டுக் காபியையும் அருந்தினர். அதற்குள் கோவிந்தன் ஒரு சிறு செப்புக்குடத் தில் தண்ணீருடன் அங்குவந்து, அதை அவரிடங் கொடுத் தான். குணசீலர் உடனே கையலம்பிக்கொண்டு, அதிவிரை வாக மாடிப் படியை விட்டுக் கீழிறங்கினர். சதாசிவன் அவருடைய மோட்டார் வண்டியைச் சித்தப்படுத்தி, அவர் வீட்டுக்கு முன்புறத்தில் கொண்டுவந்து நிறுத்தினன். அவர் அதில் ஏறியுட்கார்ந்து அதைக் கற்பகவனத்திற்குச் செலுத் தும்படி அவனுக்குக் கட்டளையிட்டார். சிறிது நேரத்திற் கெல்லாம் வண்டி வாயுவேகமாய் ஓடிக் கற்பகவனத்தின் முன் நின்றது. கற்பகவனத்தில் அப்பொழுது பெருங்குழப் பம் உண்டாயிற்று. அம்மாளிகை முழுவதும் அழுகுரல் குடிகொண்டிருந்தது. குணசீலர் வண்டியைவிட் டிறங்கிய தும், அதிவிரைவாக மாளிகையினுட் சென்றார். அங்கிருந்த வேலையாளொருவன் ஒன்றுங் கூறாமல், அவரை மாடிக்கு அழைத்துச் சென்று, மதனசுந்தரியின் அறையைக் காண் பித்து, அப்புறம் சென்றான். ஆ! ஆ!! துன்பந் தரத்தகுந்த காட்சியைக் கண்டார் குணசீலர். காமகோட்டியம்மாள்

ஒருபுறமும், துபாஷ் கோபாலசாமி முதலியார் அவர்கள் ஒருபுறமும், வேலையாட்கள் மற்றொரு புறமுமாக வாய்விட்டு அழுதுகொண் டிருந்தார்கள். மதனசுந்தரி உயிர்துறந்தாள். அவளுடைய தேகம் பஞ்சணையின்மேல் கிடந்தது. அவள் படுக்கைக்கு அருகில் சென்னையில் மருத்துவத்தொழிலில் பெயர் பெற்றவராகிய டாக்டர் சிங்காரவேலர் உட்கார்ந்து கொண்டு, என்னவோ சோதித்துக்கொண் டிருந்தார்.

குணசீலர் அறைக்குள் நுழைந்ததும், டாக்டர் சிங்கார வேலர் அவருக்கு வந்தனமளித்து, 'வாருங்கள், நண்பரே,' என்று கூறினார். காமகோட்டியம்மாள் அவரைக் கண்டதும் துக்கம் பெருகியதால், வாய்விட்டு அழுதாள். துபாஷ் கோபாலசாமி முதலியார் அவர்கள் குணசீலரை வெறிக்கப் பார்த்துக் கண்ணீர் கலங்கினரே யொழிய, வேறொன்றுங் கூற அவரால் இயலவில்லை. பிறகு குணசீலர் காமகோட்டி யம்மாளுக்குப் பல தேறுதல்கள் கூறியதும், அவள் ஒரு வாறு தன்னுடைய அழுகையை நிறுத்தினாள். டாக்டர், சிங்காரவேலர் குணசீலரைநோக்கி, 'நண்பரே, நான் இப் பிரேதத்தைச் சோதித்துப் பார்த்ததில் சில விஷயங்கள் தெரியவந்தன. இந்த அம்மாள் இதற்குமுன் அதிக துன் பத்தோ டிருந்ததாகவும், அதனால் இவருடைய மனம் வருந் திக் கடைசியில் தம்முடைய விலையுயர்ந்த மோதிரத்தி லிருந்த............என்னும் வஸ்துவை யுரைத்துச்சாப்பிட்டு உயிர்விட்டதாகவும் தெரிகின்றன. இதை நான் உடனே போலீஸுக்குத் தெரிவித்திருக்கிறேன். அவர்கள்-போலீஸ் உத்தியோகஸ்தர்கள்—வந்ததும் மேல் நடக்கவேண்டிய காரி யங்களைப் பார்க்கவேண்டியதுதான்,' என்று கூறினார். குணசீலர் அதைக் கேட்டதும், விஷயம் முழுவதையும் உணர்ந்து, இரண்டு மூன்று முறை தம்முடைய உதடுகளை மடித்துக் கடித்துக்கொண்டு, தலையை யசைத்தார். இதற்

குள் போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்களும், போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையும், இரண்டு போலீஸ் சேவகர்களும் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். டாக்டர் அவர்களுக்குத் தாம் கண்டறிந்த விஷயங்களைக் கூறி முடித்தார். பிறகு சிறிதுநேரம் வரையில் அவ்வறையி லிருந்த எல்லோரும் ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந் தனர்.

காமகோட்டியம்மாள் பிறகு குணசீலரிடம் ஒரு கடிதத் தைக் கொடுத்தாள். அக்கடிதம் உறையிடப்பட்டு, மேலே அரக்கு முத்திரையிட்டிருந்தது. அதன் மேல்விலாசம் துப் பறியும் உத்தியோகஸ்தராகிய குணசீலரைக் குறித்திருந்த தால், அவர் அதைப் பிரித்துத் தமக்குள்ளேயே படித்தார். படித்து முடித்ததும், அவர் அதை உறையிலிட்டுத் தம் முடைய சட்டைப்பைக்குள் வைத்துக்கொண்டு, காம கோட்டியம்மாளைப் பார்த்து, 'அம்மா, நேற்று என்னை இங்கு இன்றைய சாயங்காலம் வரும்படி நீங்கள் டெலி போனில் தெரிவித்தபிறகு நடந்த விஷயம் என்ன?' என்று கேட்டார்.

காமகோட்டியம்மாள் அவரை நோக்கிக் கம்மிய குர லுடன், 'ஐயா, நேற்றுக் காலையில் மதனசுந்தரி தனக்கு உடம்பு சரியாய்விட்டதாகவும், அவள் தங்களுடன் ஏதோ ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசவேண்டுவ தாகவும் கூறி, அதை உமக்குத் தெரிவிக்கும்படி என்னைக் கேட்டுக்கொண் டாள். உடனே நான் உமக்கு அதைத் தெரிவித்தேன். ஆனால், அவளுக்கு உடம்பு சரியாய்விட்ட போதிலும், பல வீனம் இருக்குமென் றெண்ணி நான் நீங்கள் இன்றைய தினம் சாயங்காலம் வந்தால், அவளுடன் பேசலாம் என்று உங்களுக்குக் கூறினேன். பிறகு அவள் ஏதேதோ பேச ஆரம்பித்தாள். சற்றேறக்குறைய நேற்றுப் பன்னிரண்டு

மணிக்கு அவள் சிறிது உணவும் உட்கொண்டாள். அதைக் கண்ட நான் இனி அவளுக்கு ஒருவிதமான கெடுதியும் இல்லையென்று நினைத்தேன். அவள் சாப்பிட்டான பிறகு நேற்றுச் சாயங்காலம் வரையில் என்னோடு என்றும் இல்லாத விதமாகப் பல விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தாள். ஐயோ! அவள் அப்படிப் பேசியபோது இடையில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டாள். அதை நினைக்க நினைக்க எனக்கு நெஞ்சம் பதறுகிறது! நான் என்ன செய்வேன்!' என்று கூறிப் படுக்கையில் கிடந்த தன் தங்கை மதனசுந்தரியின் பிரேதத்தைப்பார்த்துக் கண்ணீர் விட்டாள்.

குணசீலர் அவளைச் சாந்தப்படுத்தி, மேல்நடந்த விஷயத்தை அறிவிக்கும்படி கூறினார். அவள் அவரைநோக்கி, 'அவள் பேசிக்கொண்டிருந்தபொழுது தான் ஒருவேளை இறந்துவிட்டால், நான் எனக்கு விருப்பமுள்ள ஒரு நல்ல அறிஞரை மணந்துகொண்டு அவளைப்பற்றி எண்ணி எண்ணி வருந்தாமல் அவருடன் மலரும் மணமும்போல ஒருமனப்பட்டு இவ்வாழ்க்கையை இனிது நடத்திக்கொண்டிருக்க வேண்டும் என்று கூறினாள். அதைக்கேட்டு நான் அவள் தன்னுடைய மனமயக்கத்தால் அப்படிப் பேசுகிறாள் என்று நினைத்து, 'நீ அப்படிக் கூறக்கூடாது,' என்று அவளைக் கடிந்து பேசினேன். பிறகு விளக்கு வைத்ததும், அவளைத் தனியே விட்டு விட்டு, நான் வீட்டுக் காரியங்களைப் பார்த்துக்கொண்டிருந்தேன். ஐயோ! இப்படி நடக்கும் என்று பாவி நான் அறியவே இல்லை. நான் அவளைத் தனியே விட்டுச்சென்றதும், அவள் தன்னுடைய அறையைப் பூட்டிக்கொண்டு நெடுநேரம் என்னவோ செய்துகொண்டிருந்தாளாம். வேலைக்காரி யொருத்தி அவ்வறையினருகில் சென்று, அவளுக்குக் கோதுமைக்கஞ்சி கொடுப்பதற்காகக் கதவைத் தட்டினாளாம். அவள் அவ்வேலைக்காரியைக் கடிந்து, அப்புறம் வரும்படி

கூறினாளாம். ஆகையினால், அவ்வேலைக்காரி கஞ்சியைக் கொண்டுவந்து சமையலறையில் வைத்துவிட்டுத் தன் வேலையைப் பார்த்துக்கொண் டிருந்துவிட்டாள். பிறகு சற்றேறக்குறைய எட்டுமணிக்கு நான் அவ்வேலைக்காரியைப் பார்த்துக் கஞ்சி கொடுத்தாளா, இல்லையா என்பதை விசாரித்தேன். அவள் எனக்கு நடந்த விஷயத்தைத் தெரிவித்தாள். உடனே நான் அக்கஞ்சியை எடுத்துக்கொண்டு அவளுடைய அறைக்கு வந்தேன். அப்பொழுதும் கதவு மூடப்பட்டே இருந்தது. உடனே அவள் கதவை மூடிக்கொண்டு உள்ளே என்ன செய்கிறாள் என்று அறிவதற்காக அக்கதவின் இடையிலிருந்த துளையின் வழியாகப் பார்த்தேன். அப்பொழுது அவள் மேஜையின் மீது ஒரு மெழுகுவர்த்தி எரிந்துகொண் டிருந்தது. கதவுக்கு மேலேயுள்ள காற்று வாங்கிச் சன்னலின் வழியாய் ஏதோ அரக்கு உருகும் வாசனை வந்தது. உடனே நான் கதவைப் படபட என்று தட்டினேன். அவள் சிறிது நேரம் பேசாதிருந்து பிறகு கதவைத் திறந்தாள். அப்பொழுது அறையில் மின்சார விளக்கு எரிந்துகொண்டுதான் இருந்தது. விளக்கு எரியும் பொழுது அவள் மெழுகுவர்த்தியைக் கொளுத்திய தன் காரணம் என்னவென்று நான் அவளைக் கேட்டேன். அதற்கு அவள் மின்சார விளக்குத் திடீரென்று நின்றுவிட்டதாகவும், அதனால் தன் பெட்டியிலிருந்த மெழுகுவர்த்தியொன்றை யெடுத்துக் கொளுத்தி வைத்துக்கொண்டதாகவும், பிறகு தனக்குத் தூக்கம் வந்ததால், ஒருவரும் அறைக்குள் வந்து தன்னுடைய தூக்கத்தைக் கெடுக்காமலிருக்கும்படி அறையின் கதவை மூடித் தாழிட்டுவிட்டுப் படுத்துக்கொண்டதாகவும், அப்பொழுது வேலைக்காரி கஞ்சிகொண்டு வந்ததால், அதைச் சாப்பிடத் தனக்குப் பிரியமில்லாமல் அவ் வேலைக்காரியைக் கடிந்து அனுப்பி விட்டதாகவும்

கூறினாள். நான் அவள் கூறியதை உண்மையென்றெண்ணிக்கொண்டு, அவளுக்குக் கஞ்சியைக் கொடுத்துக் குடிக்கச் சொன்னேன். அவள் அதிற் கொஞ்சம் குடித்துவிட்டுப் போதுமென்று சொன்னாள். உடனே நான் கீழே சென்று, அவளுக்கு ஒரு வெள்ளிக்குவளை நிறையப் பால் கொண்டு வந்து கொடுத்து, அதையாகிலும் குடிக்கும்படி அவளை வற்புறுத்தினேன். அவள் அதைத் தான் சற்று நேரம் பொறுத்துக் குடிப்பதாகக் கூறித் தன் மேஜையின் மேல் வாங்கி வைத்துக்கொண்டாள். நான் சீக்கிரத்தில் சாப்பிட்டு விட்டு வந்து, அவளுடன் படுத்துக்கொள்ளுவதாகக் கூறிக் கீழே சென்று சாப்பிட்டுவிட்டு, வேலைக்காரர்களுக்கு மற்றக் காரியங்களைப் பார்க்கும்படி உத்தரவிட்டுவிட்டு, இங்கு வந்தேன். அதற்குள் அப்பாத்திரத்திலிருந்த பாலைக் குடித்துவிட்டுத் தனிப் பாத்திரத்தை மேஜையின் மேல் வைத்துப் படுத்துக்கொண்டு இருந்தாள். அவள் கண்கள் மூடியிருந்ததால், நான் அவள் தூங்குகிறாளென்றும், அவள் தூக்கத்தைக் கெடுக்கக் கூடாதென்றும் எண்ணிப் படுத்துக்கொண்டேன். எனக்குப் பெருந் தூக்கம் வந்து விட்டது. பிறகு நடந்த காரியம் எனக்குத் தெரியாது. நான் காலையில் நாலரைமணிக்கு ஏதோ பொல்லாத கனவொன்று கண்டு, விழித்துக்கொண்டு அலறினேன். அவ் வலறலைக் கேட்டு அவள் எழுந்து கொள்ளாதது எனக்கு ஆச்சரியத்தை யுண்டுபண்ணியது. ஆகையினால், நான் அவளை எழுப்ப முயன்று தட்டினேன். அப்பொழுதும் அவள் எழுந்துகொள்ளவே யில்லை. பிறகு அவள் தலையை அசைத்துப் பார்த்தேன். அப்பொழுதும் அவள் எழுந்துகொள்ள வில்லை. பிறகு அவள் மூச்சு அடங்கியிருப்பதைக் கண்டு, இறந்தாள் என்பதை உணர்ந்தேன். எனக்குப் பெருந்திகில் உண்டாய்விட்டது. உடனே அறை

யின் கதவைத் திறந்து, கூச்சலிட்டேன். என்னுடைய அத்தான் அவர்கள் பெங்களூரிலிருந்து நேற்றுத்தான் வந்தாராகையால், அவர் இம்மாளிகையிலேயே இரவு தங்கினார். அவர் இந்த அறைக்கு மூன்றாவது அறையில் படுத்துக்கொண்டிருந்தார். என்னுடைய கூச்சலைக் கேட்டவுடன் அவர் எழுந்து ஓடிவந்தார். இதற்குள் சில வேலைக்காரர்களும் ஓடி வந்தார்கள். அத்தான் அவர்கள் என்னை, 'விஷயம் என்ன?' என்று பலமுறை கேட்டும், பயத்தில் எனக்கு அப்பொழுது பேச வாய் வரவேயில்லை. பிறகு சிறிது நேரங் கழித்து, நான் அவருக்கு மதனசுந்தரியின் நிலைமையைக் காட்டி, உடனே உங்களுக்கு இவ்விஷயத்தை டெலிபோன் மூலமாகத் தெரிவிக்கும்படி கூறினேன். அவர் உங்களுக்குத் தெரிவித்தார். பிறகு, 'போலீஸுக்குத் தெரிவிப்பது நலம்,' என்று எண்ணிப் போலீஸுக்கும் தெரிவித்தார். அதன் பிறகு நான் என் தங்கையின் பிரேதத்தை நெருங்கி அழ ஆரம்பித்தேன். அப்பொழுது அவள் தலையின் கீழ்க் கடிதமொன்று பாதி வெளிப்புறத்தில் தெரியும்படி வைக்கப்பட் டிருந்தது. அதை யெடுத்துப் பார்த்தேன். ஆ! ஐயோ! அதன் மேல் விலாசம் அவளுடைய கையாலெழுதப்பட்டு, அரக்கில் அவளுடைய மோதிரத்தின் முத்திரை யிடப்பட் டிருந்தது. மேல் விலாசம் உங்களுக்கு எழுதப்பட்டிருந்ததால், அதை அப்படியே வைத்துக்கொண்டிருந்து, இதோ இப்பொழுது உங்களிடம் கொடுத்தேன். ஐயோ! அதில் என்ன எழுதப்பட்டிருக்கிறது? தயவுசெய்து எனக்குச் சொல்லுங்கள். நான் அதைத் தெரிந்துகொள்ள வேண்டும்! தெரிந்து கொள்ளவேண்டும்!! என்று கூறிக் கண்ணீர் விட்டாள்.

அவள் அவ்வாறு கண்ணீர்விட்டுக் கலக்கமுற்றதைக் கண்ட குணசிலர் மிகவும் வருந்தினார். பெண்ணிரக்க

முற்றுல் பேயும் இரக்கமுறுதோ? போலீஸ் கமிஷனர் கருணுநிதி நாயடு அவர்களும், போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம்பிள்ளையும் கூட மனம் வருந்தினுர்கள் என்பது அப்பொழுது இருந்த அவர்களுடைய முகத் தோற்றத்தால் நன்கு புலப்பட்டது. போலீஸ் சேவகர்கள் இருவரும் ஒருவரை யொருவர் நோக்கிப் பெருமூச்செறிந்தனர். துபாஷ் கோபாலசாமி முதலியாருக்கு இவையாவும் கனவு போல் தோன்றின. ஆகையால், அவர் ஒன்றுங் கூருமல், அவ்வறையிலிருந்த எல்லோருடைய முகங்களையும் வெறிக்க வெறிக்க நோக்கினுர்.

பிறகு துப்பறியும் குணசீலர் காமகோட்டி அம்மாளுக்குப் பல தேறுதல்கள் கூறி, அவளை ஒருவாறு சாந்தமடையச் செய்து, அவள் விரும்பியபடியே அவள் தன்னிடங் கொடுத்த கடிதத்தை யெடுத்துப் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளையிடம் கொடுத்து, அதை வாசிக்கச் சொன்னுர். துரைசிங்கம்பிள்ளை அக்கடிதத்தைப் பிரித்து அங்கிருந்த எல்லோருக்கும் விளங்கும்படி நிறுத்தி வாசிக்க ஆரம்பித்தார்.

‘கற்பகவனம்’
பூவிருந்தவல்லிப் பெரியசாலை,
சென்னை, துன்மதிளு மார்கழிமீ 8உ

துப்பறியும் உத்தியோகஸ்தர் திருவாளர், குணசீலர்
அவர்களுக்கு,

ஐயா,

நீர் அன்றைய தினம் என்னைக் கண்டு பேசியபோது என்னுடைய உண்மையைத் தெரிந்துகொண்டீர் என்பதை நான் தெரிந்துகொண்டேன். ஆயினும், உம்முடன் என் விஷயத்தை நானே தெரிவித்துவிட்டால், என்னை நீர் ஒரு

வேளை மன்னித்து விட்டாலும் மன்னித்துவிடலாம் என்று எண்ணினேன். ஆகையினால்தான் நான் இன்று காலையில் உம்மைப் பார்க்க விரும்பி, என் தமக்கையாரிடம் கூறி, என் விருப்பத்தை உமக்குத் தெரிவிக்கும்படி கூறினேன். பிறகு நீர் நாளைய சாயங்காலம் வருவதாகத் தெரிந்து, அதன் பின் எனக்கு அவ்வெண்ணம் மாறியது. நீர்தான் என்னை மன்னித்துவிட்டாலும், போலீஸ் உத்தியோகஸ்தர்கள் இதையறிந்துகொண்டால், எனக்குத் துன்பம் உண்டாகாமல் இருக்கமுடியாது அப்படி அவர்களும் என்னை மன்னித்து விட்டபோதிலும் என்னுடைய மனம் என்னைத் துன்பப் படுத்தாமல் இராது. ஆகையால், இக் குடும்பத்திற்கும் என் சுற்றத்தாருக்கும் பழிப்பு ஏற்படாதபடி என்னுடைய உயிரை எவ்வகையிலாகிலும் போக்கிக்கொள்ள வேண்டும் என்று நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். அப்படிச் செய்து கொள்ளுவதற்கு முன் என்னுடைய குற்றம் உமக்கு மாத்திரம் தெரிந்திருந்தாலும் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் தெரிந்துகொள்ளாமல் இருப்பதால், நான் உயிர் விட்டபிறகு என் குடும்பத்தாரையும், சுற்றத்தாரையும் வருத்த ஆரம்பிப்பார்கள் என்று கருதியே நான் என் கைப்பட இக் கடிதத்தை—என் குடும்பத்தைப் பழியிலிருந்து நீக்கி, இனி நன்மை யடையச்செய்யத் தகுந்த இக்கடிதத்தை—உமக்கு எழுதத் துணிந்தேன். நீர் இதைப் போலீஸ் உத்தியோகஸ்தர்களிடம் காண்பித்துச் செய்வன செய்யும்படி நான் உம்மைப் பெரிதும் வேண்டிக்கொள்ளுகிறேன்.

என்னுடைய துன்பம் நிறைந்த வாழ்க்கையைப் பற்றி என்னுடைய முடிவுரையில் எழுதுவதென்றால், இக்கடிதம் இடங்கொடாது. ஆகையினால், விஷயத்தைச் சுருங்கக் கூறிவிடுகிறேன். என்னுடைய கணவர் கொலை செய்யப்

பட்ட இரவு இம்மாளிகையில் ஒரு விருந்து நடைபெற்றது. அவ் விருந்திற்கு இக்குடும்பத்துடன் வெகு நாளாகப் பழகிய நண்பர்கள் சிலர் வந்திருந்தார்கள். அவர்களுள் முக்கியமாக இங்குக் குறிப்பிடத்தக்கவர்கள் திருவல்லிக்கேணியில் வசித்து வரும் நீதிபதி நீலகண்டமுதலியார் அவர்களும் அவருடைய புத்திரி கலாவதியுமே யாவர். விருந்து முடிந்ததும் இவர்கள் இருவரைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் தத்தம் வீடுகளுக்குச் சென்றூர்கள். விருந்தினர்கள் எல்லோரும் போய்விட்டனர் என்பதை அறிந்ததும் நான் என் கணவருடன் ஒரு விஷயத்தைக் குறித்துப் பேச வெண்ணி, அவருடைய அறைக்குச் சென்றேன். நான் அவ்வறையி னருகிற் சென்றதும், அவர் பேசுங் குரல் எனக்குக் கேட்டது. நான் கேட்ட விஷயம் என்ன வென்று எண்ணுகிறீர்கள்? அவரும்—என்னுடைய கணவாகிய அவரும்—என் வீட்டிற்கு விருந்தினளான அக் கலாவதியும் ஒருவரோ டொருவர் பேசிக்கொண்டிருந்தனர். ஆகையால், அவர்கள் என்ன பேசிக்கொள்ளுகிறூர்கள் என்பதைக் கதவின் பக்கத்தில் நின்று உற்றுக் கேட்டேன். ஐயோ! என் கணவர்—முதலில் என்னை உண்மையாகக் காதலித்தது போல் நடித்து அக்கினிச் சான்ருய் என்னை மணம்புரிந்த என்னுடைய கணவர்—என்மீது பழி சுமத்தி, என்னைவிட்டு அக் கலாவதியை மணந்துகொள்ள விரும்புவதாக அவளுடன் சதியாலோசனை செய்துகொண் டிருந்தார்.

அக்கலாவதி குற்றமற்றவள்தான். அவள் அவருடைய எண்ணத்திற்கு இணங்காமல், அவரை வெறுத்துப் பேசியதையும் நான் என் காதாரக் கேட்டேன். ஆ! இப்படிப்பட்ட விஷயத்தைத் தன் கணவன் வேறொரு மாதுடன் கூறக் கேட்கும் பெண்பிள்ளை எவள்தான் மனம் பொறுத்திருப்பாள்? என்னுடைய வீட்டிலேயே என் கணவர்

மற்றொரு மாதுடன் இப்படிச் சதியாலோசனை செய்ததை எண்ண எண்ண, என் மனம் புண்ணாயிற்று. நான் அப்பொழுது மதிகெட்ட என் தாய்தந்தையரை வெறுத்தேன். அவர்கள் அறியாமையினால், செல்வ மொன்றையே சிறப்பாகக் கருதி, நான் என் மனமொத்த காதலரை மணந்து இன்பமாகக் காலங்கழிப்பதைத் தவிர்த்து, நான் எவ்வகையிலும் விரும்பாத ஒருவரை மணக்கும்படி என்னை வற்புறுத்தியதன் பயன் இதுதான். ஐயோ! என் வாழ்க்கை அவரை மணந்தது முதல் துன்பக்கடலாகத் தோன்றியது. இத்தகைய என்னுடைய வாழ்க்கையை இப்பொழுது அறிந்துகொள்ளும் மற்றத் தாய்தந்தையராகிலும் இனித் தம்முடைய பெண்மணிகளை இப்படிப்பட்ட துன்பக் கடலில் கொண்டுபோய் வீழ்த்தாமல் இருக்கும்படி அவர்களைப் பெண் பேதையாகிய நான் என்னைப்போன்ற அப் பெண்களின் சார்பாக மிகவும் வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

நான் என் கணவர் இப்படிக் கூறியதும், அவர் எண்ணம் நிறைவேறுதபடி செய்துவிட்டு, என்னுடைய உயிரைப் போக்கிக்கொள்ள எண்ணி, என் படுக்கை யறைக்குச் சென்றேன். அப்பொழுது எனக்கு என்னென்னவோ எண்ணங்களெல்லாம் தோன்றின. அவ்வெண்ணங்களில் ஈடுபட்டிருந்ததால், எனக்கு நேரம் கழிவது தெரியாமலே யிருந்தது. நீதிபதி நீலகண்ட முதலியார் அவர்களும் அவருடைய புத்திரியும் வீட்டுக்குச் சென்று, அதிக நேரமாயிற்று. வீடு முழுவதும் ஒரு விதமான சந்தடியு மில்லாமலிருந்தது. என்னுடைய தமக்கையாரும் அன்று இரவு நுங்கம்பாக்கத்திலுள்ள ஒரு செல்வர் வீட்டுக் கலியாணத்திற்குச் சென்றிருந்தார். ஆகையால், நான் மறுபடியும் என்னுடைய கணவர் அறைக்குச் சென்றேன். அப்பொழுது

பாதி இரவுக்கு மேல் கழிந்துவிட்டிருக்கலாம் என்று எண்ணு கிறேன். ஏன் என்றால், வேலைக்காரர்களெல்லோருங் கூடப் படுத்து உறங்கிவிட்டார்கள். நான் என்னுடைய கணவர் அறைக்குள் நுழைந்தபோது அவர் கோபக்குறியுடன் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டிருந்ததை அவ்வறையில் எரிந்துகொண்டிருந்த விளக்கின் வெளிச்சத்தினால் அறிந் தேன். ஆனால், அவர் அப்படி அந் நேரத்தில் கோபத் துடன் விழித்துக்கொண்டிருக்கக் காரணம் என்னவாக இருக்கலாம் என்பது எனக்குப் புலப்படவில்லை. ஒரு வேளை அவர் கலாவதி தன்னை மணந்துகொள்ள விரும்ப வில்லையென்றும், அவள் அப்படி விரும்பாததற்குப் பெருங் காரணமாக இருப்பவள் நான்தான் என்றும் எண்ணி, அவ்வாறு இருக்கிறாரோ, என்னவோ என்று நான் எண்ணி னேன். பிறகு நான் நேரே அவர் எதிரில் சென்று நின்ற போது அவர் என்னைப் பார்த்த பார்வை அவ்வெண்ணத்தை உறுதிப்படுத்தியது. நான் உடனே அவர் கலாவதியுடன் பேசிக்கொண்டிருந்த விஷயத்தை அவருக்கு ஞாபகமூட்டி னேன். முதலில் அவர் நான் அப்படிக் கூறுவது பொய் யென்று அதை மறைக்கக் கருதினார், ஆனால், கடைசியில் அவர் அதை ஒத்துக்கொள்ள நேர்ந்தபோது அவர் என்னை விரும்பாததாகக் கூறி, என்னை நிந்திக்க ஆரம்பித்தார். உடனே எனக்குக் கோபம் பொங்கி எழுந்தது. அவர் தற்காப்பின் நிமித்தம் மேஜையின் அறையில் ஒரு சிறு கைத் துப்பாக்கி வைத்திருந்ததை நான் அறிவேன். அதை அவர் எப்பொழுதும் சமயத்துக்கு உதவும்படி குண்டுகளை யிட்டுக் கெட்டித்து வைத்துக்கொண்டிருப்பது வழக்கம். ஆகையினால், நான் உடனே அவ்வறையைத் திறந்து, அதைக் கையிலெடுத்தேன்; மறுவிநாடியே அவரை அதனால் சுட்டு விட்டேன். எனக்குத் துப்பாக்கிச் சுடவாவது, குறி பார்க்க

வாவது தெரியாது. ஆயினும், என்னுடைய பெருங் கோபம் அதை யெப்படியோ செய்து முடித்தது.

நான் அவ்வாறு சுட்டதும், துப்பாக்கிக் குண்டு அவருடைய மார்பில் புகுந்தது. உடனே இரத்தம் பீரிட்டது. அக் காட்சியைக் காண என் மனம் வருந்தியது. அவர் எவ்வளவுதான் கொடியவராக இருந்தபோதிலும், என்னுடைய கணவரல்லவா என்னும் எண்ணம் அப்பொழுது தான் என் மனத்திற்பட்டது. அப்புறம் நான் எவ்வளவு வருந்தியும் என்ன பயன்? உடனே நான் அவரைத் திரும்பிப் பார்த்துக்கொண்டே அவ்வறையை விட்டு என் அறைக்குச் செல்ல முயன்றேன். அப்பொழுது அவ்வறையில் தாழத் தொங்கிக்கொண்டிருந்த விளக்கின் பித்தளைக் கம்பியில் என் தலைமயிர் சிக்கிக்கொண்டது. நான் அதை என் கையால் பிடித்து அறுத்து விட்டுவிட்டு, என் அறைக்கு விரைந்து சென்றேன். அதையும் நீங்கள் கண்டு பிடித்து எடுத்துவிட்டீர்கள். நான் என் அறைக்கு வருவதற்கு முன் என் கையிலிருந்த துப்பாக்கியை மறந்தாற்போல் மேஜையின் மேலேயே வைத்துவிட்டு வந்துவிட்டேன்.

நான் என் அறைக்குச் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் கலியாண வீட்டிற்குச் சென்றிருந்த என்னுடைய தமக்கையார் திரும்பி வந்தார். அவருக்கு நான் செய்த காரியத்தையும், அதற்குக் காரணத்தையும் கூறினேன். அவர் இச் செய்கைக்காக என்னை நிந்தித்தார். பிறகு எனக்கு மயக்கம் மேலிட்டது. ஆகையினால், என் தமக்கையார் வெகு நேரம் வரையில் எனக்குச் சிகிச்சை செய்து கொண்டிருந்து, எனக்கு என் அறிவு நிலை வந்ததும் சாந்தமாக இருக்கும்படி வேண்டிக்கொண்டார். அப்பொழுது கைத் துப்பாக்கியை மறந்தாற்போல் மேஜையின் மேலேயே

வைத்து வந்துவிட்டதை அவருக்குத் தெரிவித்தேன். அவர் உடனே என்னைத் தனியே விட்டுவிட்டு, அவ்வறைக்குச் சென்று, சிறிது நேரத்திற் கெல்லாம் திரும்பி வந்து, அத் துப்பாக்கி காணப்படவில்லை யென்றும், அவ்வறையின் சன்னலொன்று திறக்கப்பட்டும் அதன் கம்பி வளைக்கப்பட்டும் இருக்கின்றன வென்றும், என் கணவர் அணிந்திருந்த ஆபரணங்கள் காணப்படவில்லை என்றும் என்னிடம் கூறினார். பிறகு என்ன நடந்தது என்பது எங்களுக்குத் தெரியாது. பொழுது விடியுஞ் சமயத்தில் வீட்டு வேலைக்காரி தங்கம் அந்தக் கோரக் காட்சியைக் கண்டு கூவிய கூச்சல் வீட்டிலுள்ள எல்லோரையும் எழுப்பி விட்டது. நானும் என்னுடைய தமக்கையாருங் கூட அங்குச் சென்று, அப்பொழுதுதான் விஷயம் உணர்ந்தவர்களைப் போல் நடித்தோம். பிறகு நடந்தயாவும் உமக்குத் தெரியும்.

இக் கொடிய செயலே எனக்கு எமனாக நின்றது. நான் இவ்வுலகத்தை விட்டுப் போய் வருகிறேன். என் விஷயத்தைக் கேட்டுத் துன்பப்பட்டுத் தாமும் இப்படிப் பட்ட துன்பத்திற்கு அருகாகாமல் தப்பித்துக்கொள்ளக் கருதும் பலருக்கும் என்னுடைய கடைசி முறையான வந்தனத்தை யளிக்கிறேன். ஐயா, தாங்கள் என் பொருட்டு ஒரு நன்மை புரியும்படி தங்களை நான் பன்முறையும் வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன். தாய்தந்தையர் அற்று மணற்காட்டில் உலர்ந்து நிற்கும் தனி வாழையைப்போலத் தயங்கி நிற்கும் என்னுடைய தமக்கையார் காமகோட்டியம்மாளைக் காக்கவேண்டியது உம்முடைய கடமை. என்னுடைய அத்தான் துபாஷ் கோபாலசாமி முதலியாரவர்களுக்கும் என்னுடைய தமக்கையார் காமகோட்டியம்மாளுக்கும் சிறப்பாகத் திருமணம் நடத்தி அவர்களை நல்வாழ்க்கைப் பயனையடையும்படி செய்வீர் என்று நான் உம்மை வேண்டு

கிறேன். இதற்காக மற்றும் ஒரு முறை உமக்கு வந்தனத்தை யளிக்கிறேன்.

உலகத்தை வெறுத்து உயிர் போக்கிய,
மதனசுந்தரி.

போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசிங்கம் பிள்ளை இவ்வாறு அக் கடிதத்தை வாசித்து முடித்ததும், காமகோட்டியம்மாள் அதிகமாக அழத் தொடங்கினாள். போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு துப்பறியும் குணசீலரை நோக்கி, 'நண்பர் அவர்களே, நீங்கள் எல்லா உண்மைகளையும் தெரிந்துகொண்டும் எங்களிடம் ஒன்றும் உணராதவர் போல் இருந்ததற்குக் காரண மென்ன ?' என்று கேட்டார்.

அதைக் கேட்ட குணசீலர் உடனே தம்முடைய சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதப் பொட்டலத்தை யெடுத்துப் பிரித்து, அதிலிருந்த மயிர்ச் சுருளையும், மஞ்சள் கலந்த பச்சரிசியையும், மல்லிகை இதழ்களையும் அவரிடம் காட்டித் தாம் கண்டறிந்த விஷயங்களை ஆதியோடந்தமாகக் கூறினார். கலியாண வீட்டுக்குச் சென்றிருந்த காமகோட்டியம்மாள் அங்குச் சேஷைமிட்ட மஞ்சள் கலந்த பச்சரிசியும் மல்லிகை மலர் இதழ்களும் தம்முடைய புடைவையின் மடிப்புகளில் விழுந்திருந்ததை யுணராமல் வீட்டுக்கு வந்து தம்முடைய தங்கையாருடன் இவ்விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண் டிருந்துவிட்டு, அவ் வறைக்குச் சென்றதனால், அவைகள் அங்கு விழுந்தன என்றும், அவர் அதை யறிய வில்லை என்றும் கூறினார்.

பிறகு போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்கள் குணசீலரை நோக்கி, 'மோகனசுந்தர முதலியார் கொலை செய்யப்பட்ட அவ்வறையில் களவுக் குறிகள் தோன்றியதற்குக் காரணம் என்ன?' என்று கேட்டார். குணசீலர் தாம்

அம்பலவாணனிட மிருந்து அறிந்த விஷயங்களை ஒன்று விடாமல் அவருக்கு எடுத்துக் கூறி உண்மையை விளக்கினதுமன்றி, உடனே நுங்கம்பாக்கத்திலுள்ள மனோரஞ்சித விலாஸத்தில் குடியிருந்து வந்த அம்பலவாணனை அவன் தன்னுடைய தமயனார் பிரேதத்தின் மீதிருந்து எடுத்த ஆபரணங்களுடன் உடனே புறப்பட்டுக் கற்பகவனத்திற்கு வரும்படி ஒரு கடிதமெழுதித் தம்முடைய மோட்டா ரோட்டியாகிய சதாசிவனிடங் கொடுத்துத் தம்முடைய மோட்டார் வண்டியையே கொண்டு போய் அவனை அழைத்து வரும்படி கட்டளை யிட்டார். சதாசிவன் அவ்வாறே சென்று, அரை மணி நேரத்திற்குள் அம்பலவாணனைக் கற்பகவனத்திற்கு அழைத்து வந்தான். பிறகு குணசீலர் அவனிட மிருந்த ஆபரணங்களை வாங்கிப் போலீஸ் கமிஷனருக்குக் காட்டி, விஷயத்தை விளக்கினார். அம்பலவாணன் உண்மையை யறிந்து உள்ளங் குளிர்ந்தான். டாக்டர் சிங்காரவேலருக்கு இவைக ளெல்லாம் வெகு ஆச்சரியமாகத் தோன்றின.

பின்பு குணசீலர், போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்களின் உத்திரவின் மேல் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து பிணத்தைத் தகனம் செய்யும்படி அம்பலவாணனுக்கும், துபாஷ் கோபாலசாமி முதலியாருக்கும் உத்தர வளித்தார். பந்துக்கள் பலருக்கும் இவ்விஷயம் உடனே தந்தியின் வாயிலாகத் தெரிவிக்கப்பட்டது. எல்லோரும் அன்று சாயங்காலத்திற்குள் வந்து சேர்ந்து விட்டார்கள். மதன சுந்தரியின் பிரேதம் தகனம் செய்யப்பட்டது.

* * * *
* * * *

அம்பலவாணன் அன்று மறுநாளே தன் தாயார் மரகத வல்லியம்மாளுடன் மனோரஞ்சித விலாசத்தை விட்டுக்

கற்பகவனத்திற்கு வந்து விட்டான். மரகதவல்லியம்மாள் முன்பு காமகோட்டியின் மீது வெறுப்படைந்திருந்த போதிலும், குணசீலர் விருப்பத்தின்மேல் அவளை ஒருமாதம் வரையில் அன்பாகவே நடத்தி வந்தாள். பிறகு குணசீலரே முதன்மையாக இருந்து காமகோட்டிக்கும், துபாஷ்கோபால சாமி முதலியார் அவர்களுக்கும் வெகு சிறப்பாக மணம் முடித்து வைத்தார். கோபாலசாமி முதலியாருடன் காமகோட்டி யம்மாள் நகமும் சதையும் போல் கூடி மகிழ்ந்து தன்னுடைய வாழ்க்கையை இன்பமாகக் கழிக்க ஆரம்பித்தாள். இரண்டு வருஷங்கள் கழிந்தன. காமகோட்டியம்மாள் ஓர் ஆண்குழந்தைக்குத் தாயானாள். அவளுக்கு அப்பொழுது உண்டான ஆநந்தத்திற்கு அளவே யில்லை. ஆனாலும், அவள் தன்னுடைய தங்கை மதனசுந்தரியை நினைக்கும் போதெல்லாம் அவளுக்குத் துன்பம் அதிகரித்தது. துப்பறியும் குணசீலரின் கருணைத்திறத்தைக் கருதும் போதெல்லாம் இன்பம் பெருகியது. அவள் தன்னைச்சிறிதுகாலம் ஆதரித்து வந்த தன் தங்கை மதனசுந்தரிக்கும், தனக்குப் பேருதவி செய்த குணசீலருக்கும் என்ன கைம்மாறு செய்ய முடியும்? அவர்கள் இருவர் பெயரையும் என்றும் மறவாமலிருப்பதே அவள் அவர்களுக்குச் செய்யத் தகுந்த கைம்மாறு.

> 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு.'

என்பது தமிழ் மறையாகிய திருக்குறளை யியற்றிய திருவள்ளுவநாயனாரது திருவாக்கல்லவா? ஆகையினால், காமகோட்டியம்மாள் தன்னுடைய குழந்தைக்குப் பெயரிட ஒரு நன்னாள் பார்க்கும்படி தன்னுடைய கணவருக்குக் கூற அவர் அப்படியே பார்த்துச் சென்னையில் வசிக்கும் குணசீலருக்கும் போலீஸ் கமிஷனர் கருணாநிதி நாயடு அவர்களுக்கும், இன்ஸ்

பெக்டர் துரைசிங்கம் பிள்ளைக்கும், அம்பலவாணனுக்கும் மற்றுமுள்ள பந்துக்களுக்கும் எழுதி யனுப்பி, எல்லோரை யும் வரவழைத்துத் தம்முடைய புத்திரனுக்குக் காமகோட்டி யம்மாளின் விருப்பப்படி குணசீலர் என்னும் பெயரின் முதற் பகுதியையும், மதனசுந்தரி என்னும் பெயரின் பிற் பகுதியை மாற்றிய சுந்தரன் என்னும் சொல்லையும் சேர்த்துக் குணசுந்தரன் எனப் பெயரிட்டனர். பின்பு வெகு விமரிசை யாக எல்லோருக்கும் விருந்து நடைபெற்றதும், எல்லோரும் கோபாலசாமி முதலியாரிடத்திலும், காமகோட்டியம்மா ளிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு, குழந்தையை ஆசீர் வதித்துச் சென்றனர்.

* * * *

பாங்கியின் சொந்தக்காரர்கள் அம்பலவாணனுக்கும், அவனுடைய தமயனுக்கும் அவர்களுடைய தகப்பனர் உயில் எழுதி வைத்திருந்த பொருளுக்கு இப்பொழுது அம்பலவாணனைத் தவிர, வேறு உரிமையுடையவர்கள் இல் லாமையால் அப் பொருளை வட்டியும் முதலுமாகச் சேர்த்து அவனுக்குக் கொடுத்து விட்டார்கள். அவனுக்கு அவ னுடைய தாயார் தம்முடைய குலத்தில் சிறந்த பெண் ணெருத்தியைத் தேடி, விவாகம் செய்து வைத்தார். அவ் விவாக சந்தர்ப்பத்தில் அங்குச் சென்றிருந்த துப்பறியும் குணசீலருக்கு மாகதவல்லியம்மாள் அவர் தமக்காக எடுத்துக் கொண்ட கஷ்டத்திற்காக ஓராயிரம் ரூபாய் கொடுக்க அதை அவர் ஏழைச் சிறுவர்களுக்கு ஒரு தரும பாடசாலையமைப் பதற்கு உதவினர்.

முற்றிற்று

---

Forms 10-14, Inner Title & Preface Printed by
P. R. Rama Iyar & Co., Madras

எங்களிடத்தில் ருசிகரமான தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும், வேதாந்த புஸ்தகங்களும், சைவ புராணங்களும் கிடைக்கும். தேவையுள்ளவர்கள் எழுதினால் நாங்கள் புஸ்தகங்களைப் பார்வையிட்டு நல்லதாக அனுப்புகிறோம்.

## எமது சொந்தப் பிரசுரங்கள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| ஆங்கில ஆசான் அல்லது ஆங்கில போதினி | ... | 2 | 0 |
| அங்கயற்கண்ணி அல்லது அன்புள்ள மங்கை | ... | 1 | 12 |
| திருக்கழுக் குன்றத்துக் கொலை | ... | 1 | 8 |
| அமிர்தகுமாரி அல்லது செஞ்சிப் புதையல் | ... | 1 | 4 |
| அம்பலவாணன் அல்லது கற்பகவனத்தில் நடந்த கடுங்கொலை | ... | 1 | 4 |
| 1000 தலைவாங்கிய அதிசய சிந்தாமணி | ... | 1 | 0 |
| மாணிக்கவல்லி அல்லது ஓர் மாதின் மர்மம் | ... | 1 | 0 |
| இரத்தினாங்கி அல்லது இரதிவிலாச மர்மம் | ... | 1 | 0 |
| எமகாதகன் அல்லது மாயாஜித்தன் | ... | 0 | 8 |
| நவீன் நவரத்ன ஒப்பாரி | ... | 0 | 5 |
| கண்ணைக் கட்டிக் காலங்கழிக்கும் மிஸ்டர் திண்ணைத் தூங்கி தடிராமன் | ... | 0 | 5 |
| கணவனின் கடமை அல்லது பெண்களின் நிலைமை | | 0 | 4 |
| பதி-பக்தி | ... | 0 | 3 |
| மாமிகளின் துயரம் அல்லது மருமக்களின் கொண்டாட்டம் | ... | 0 | 2 |
| காதலற்ற கல்யாணம் அல்லது பெண்வீட்டாரைக் கொள்ளையடித்தல் | ... | 0 | 1 |

குறிப்பு:—இவை அனைத்தும் எமது சொந்த பிரசுரமானபடியினால் புஸ்தக வியாபாரிகளுக்கு தக்க கமிஷன் கொடுக்கப்படும். இன்னும் பலவிதமான சாமான்களும் ஏனைய புஸ்தகங்களும் எமது கம்பெனியில் கிடைக்கும். தேவையுள்ளவர்கள் எமது கம்பெனிக்கு எழுதினால் அனுப்பப்படும்.

*எங்கள் புத்தகங்கள் எல்லா புத்தக வியாகாரிகளிடமும் கிடைக்கும்.*